# சங்க இலக்கியங்களில் நிலம் – பன்முக ஆய்வு

முனைவர் பட்டத்திற்காகச்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப்படும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**சு.தேன்மொழி எம்.ஏ., எம்.எட்., எம்ஃபில்.,**

**முனைவர் பட்ட ஆய்வாளர் (முழு நேரம்)**

**Ref.No.Ph.D./Regn./36/FT/08/2015/1885**

**நெறியாளர்**

**முனைவர் திருமதி.ப.கு. ஹேமரஜனி எம்.ஏ.,பி.எச்.டி.,**

உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை

இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி)

சென்னை – 600 004.



**தமிழ்த்துறை**

**இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி)**

**சென்னை – 600 004.**

**ஆகஸ்ட் - 2022**

**முனைவர் திருமதி.ப.கு. ஹேமரஜனி எம்.ஏ., பி.எச்.டி,**
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
இராணிமேரிகல்லூரி (தன்னாட்சி),
சென்னை - 600 004.

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியங்களில் நிலம் – பன்முக ஆய்வு"** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி), தமிழ்த்துறையில், முனைவர் (பி.எச்.டி) பட்டம் பெறுவதற்காக, என் மேற்பார்வையில் முனைவர் பட்ட மாணவி சு.தேன்மொழி, எம்.ஏ., எம்.ஃ.பில், அவர்களால் 2015 ஆகஸ்ட் முதல் 2022 ஆகஸ்ட் வரை ஆய்வு நிகழ்த்தி உருவாக்கியதாகும். இந்த ஆய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப் பெற வில்லை என்பதற்கும் இந்த ஆய்வு அவருடைய சொந்த முயற்சியின் பயன் என்பதற்கும் நான் சான்றளிக்கிறேன்.

இடம்: சென்னை **(ப.கு. ஹேமரஜனி)**

நாள்: நெறியாளர்

**சு.தேன்மொழி**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 004.

# ஆய்வாளர் உறுதிமொழி

"**சங்க இலக்கியங்களில் நிலம் – பன்முக ஆய்வு**" என்னும் தலைப்பில் முனைவர் (பி.எச்.டி) பட்டம் பெறுவதற்காக ஆய்வு நிகழ்த்தி உருவான இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும், ஆய்வரங்கத்திற்கும் அளிக்கப் பெற வில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: சென்னை **(சு.தேன்மொழி)**

நாள்: ஆய்வாளர்

# நன்றியுரை

**சங்க இலக்கிங்களில் நிலம் - பன்முக ஆய்வு** எனும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு இசைவளித்த சென்னை பல்கலைக்கழகத்திற்கு முதற்கண் நன்றி. இவ்வனுமதியினை ஏற்று இடமளித்த இராணிமேரி கல்லூரி முதல்வர் முனைவர் **பா.உமாமகேஸ்வரி** அவர்களுக்கும் மற்றும் துறைத்தலைவர் முனைவர் **சு.தமிழ்ச்செல்வி** அவர்களுக்கும் என் நன்றியினை உரித்தாக்கிக்கொள்கிறேன். மேலும் என் ஆய்வு சிறப்பான முறையிலும் செம்மையான முறையிலும் அமைய வழிகாட்டியாய் இருந்து என்னை நெறிப்படுத்திய முனைவர்**.ப.கு. ஹேமரஜனி** அவர்களுக்கும் என் நன்றி என்றும் உரியது.

இராணிமேரி கல்லூரியில் **முதன்மை தேர்வுக்கட்டுப்பாட்டு அலுவலர்களுக்கும் துணைத் தேர்வுக் கட்டுபாட்டு அலுவலர்களுக்கும்** அகம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நான் முனைவர்பட்ட ஆய்வினை மேற்கொள்ளவும் இந்த ஆய்வேட்டை உருவாக்கவும் அனைத்து வகையிலும் எனக்கு உறுதுணையாக இருந்த மறைந்த என் கணவர் **அ.கார்த்திகேயன்** அவர்களுக்கு என் நன்றியை உரியதாக்குகிறேன். மேலும், இந்த ஆய்வேட்டினை உருவாக்க எனக்கு உதவி புரிந்த என் தோழிகள் **த.ஜெயபாரதி, கு.அனுசுயா** மற்றும் என் சகோதரிகளுக்கும் அகம் கனிந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த ஆய்வேட்டினை சிறப்புற தட்டச்சு செய்து உதவிய நண்பர் **திரு.கா.சரவணன்** அவர்களுக்கும் என் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும், இவ்வாய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய **சென்னை பல்கலைக்கழக நூலகம், ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம், கன்னிமாரா பொது நூலகம், உலக தமிராய்ச்சி நிறுவன நூலகம், அண்ணா நூற்றாண்டு நூலகத்திற்கும்** மற்றும் அத்தகு **நூலகங்களின் பணியாளர்களுக்கும்** என் நன்றிகள்.

**(சு.தேன்மொழி)**

# சுருக்கக் குறியீடுகள்

| | |
|---|---|
| அகம். | : அகநானூறு |
| அகத் | : அகத்திணையியல் |
| உ.ஆ | : உரையாசிரியர் |
| ஐங். | : ஐங்குறுநூறு |
| கலி. | : கலித்தொகை |
| கலிங்க. | : கலிங்கத்துப் பரணி |
| குறுந். | : குறுந்தொகை |
| குறள் | : திருக்குறள் |
| சிறுபாண். | :சிறுபாணாற்றுப்படை |
| த.பா.தி | : தனிப்பாடல் திரட்டு |
| திருமுருகு. | : திருமுருகாற்றுப்படை |
| தொல். | :தொல்காப்பியம் |
| தொல். பொருள். | :தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொ.ஆ | :தொகுப்பு ஆசிரியர் |
| நற். | :நற்றிணை |
| நூ. | : நூற்பா |
| ப. | : பக்கம் |
| பக். | : பக்கங்கள் |
| பதிற்று. | : பதிற்றுப்பத்து |
| ப.ஆ. | : பதிப்பாசிரியர் |
| பரி. | : பரிபாடல் |
| பா. எண். | : பாடல் எண் |
| புறம். | : புறநானூறு |
| பெரும். | : பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | : பொருநராற்றுப்படை |
| மதுரை. | : மதுரைக்காஞ்சி |
| மேலது. | : மேலே கூறியுள்ளது |
| மு.க. | : முன்னுரை கவிதைகள் |

# இயல் மூன்று

# சங்க இலக்கியத்தில்  நிலம் சார்ந்த புறத்திணை

# வாழ்வியல் கூறுகள்

# பொருளடக்கம்

# முன்னுரை

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பழந்தமிழர்களின் வாழ்வியலைச் சிறப்பாகப் படம்பிடித்துக் காட்டுவது சங்க இலக்கியமாகும். சங்க இலக்கியம் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்று இருபெரும் பிரிவுகளைக் கொண்டுள்ளது. இவ்விரு பிரிவுகளே பண்டைய ஐந்திணை நிலங்களை அறிந்து கொள்ளும் வரலாற்று ஆவணங்களாக உள்ளன. அவற்றின்வழி சங்க இலக்கியங்களில் நிலம் பற்றிய பதிவுகளை பல்வகை நோக்கில் ஆய்ந்து எடுத்துரைப்பது முதன்மைத் தேவையாகவும் அமைகிறது. மேலும் அம்மக்களின் அக, புற வாழ்வியல் முறை, நிலம் தொடர்பான தொழில்கள் போன்றவை எவை என்பதையும் ஆய்ந்துணர்த்துவதையும் நோக்கமாகக் கொண்டு இந்த ஆய்வு அணுகப்படுகிறது.

## நிலம் என்பது

ஐந்திணை நிலமென்பது, பண்டைய தமிழ்நாட்டின் புவியியல் அமைப்பினை எடுத்துரைப்பதாக உள்ளது. அதாவது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று சொல்லப்படுகின்றவற்றை தெரிந்துக்கொள்வதாகும். மேலும் ஐந்து நிலங்களும், அந்நிலங்களுக்குரிய முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள்கள் ஆகியவற்றை ஆராய்ந்து அதன்வழி ஐந்திணையில் வாழ்ந்த மக்களின் வாழ்வியலைப் பற்றி எடுத்துரைப்பது நோக்கமாக அமைகிறது.

குறிஞ்சி நிலம் என்பது மலையும் மலைச்சார்ந்த பகுதியாகும். இங்கு குறவர், குறத்தியர் தலைமக்களாக உள்ளனர். இவர்களது தொழில்களாகக் காட்டப்படுவது தேனெடுத்தல், தினைக்காத்தல், பகல்வேட்டை ஆகியவற்றைக் குறித்து பாடல்களின் வழி காட்டப்படுகின்றன. முல்லை நிலமென்பது காடும் காடுசார்ந்த பகுதியாகும். இங்கு இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர், கோவலர் என்பவர்கள் இந்நிலத்தில் வசிப்பவர்களாக உள்ளனர். இவர்கள் காட்டில் ஆடு, மாடுகளை மேய்த்தல் தொழில் செய்ததையும் அவை கொடுக்கும் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் உள்ளிட்டவற்றை எடுப்பதையும் அவற்றின் மூலம் பொருளீட்டுவதையும் முதன்மைத் தொழிலாக கொண்டிருந்ததையும் குறித்து ஆய்ந்துணர்த்தப்படுகின்றன.

மேலும் மருத நிலம் என்பது வயலும் வயல்சார்ந்த இடமாகும். இங்கு உழவர், உழத்தியர் முதன்மை மக்களாக உள்ளனர். இவர்களின் முதன்மையான தொழில் உழவு செய்தலாகும். நெய்தல் நிலம் என்பது கடலும் கடல் சார்ந்த பகுதியாகும். இந்நிலத்தில் பரதவர், பரத்தியர் தலைமக்களாகக் கருதப்படுகின்றனர். இம்மக்கள் மீன்பிடித்தல், உப்புக்காய்ச்சுதலை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருக்கின்றனர். பாலை நிலம் என்பது மணலும் மணல்சார்ந்த பகுதியாகும். இங்கு எயினர், எயிற்றியர் முதன்மை மக்களாக உள்ளனர். இவர்கள் புற்றரிசி எடுத்தல், கொள்ளையடித்தல், வேட்டையாடுதல் போன்றவற்றை முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளனர். பொதுவாக தொழில்கள் ஐந்து நிலங்களுக்கும் ஒரே மாதிரியாக அமைவதில்லை. ஏனெனில் ஒவ்வொரு நிலத்திலும்

வெவ்வேறான சூழ்நிலைகள், நில அமைப்பியல் என ஒவ்வொன்றும் வெவ்வேறாக அமைந்திருந்தன என்பது பாடல்கள் வழி ஆய்ந்துணர்த்தப்படுகின்றன. அவ்வகையில் **சங்க இலக்கியத்தில் நிலம்- பன்முகப் பார்வையில்** இவ் ஆய்வினை அணுகுவது இந்த ஆய்வின் திட்டமாகும்.

**ஆய்வுத் தலைப்பு:**

**“சங்க இலக்கியங்களில் நிலம் – பன்முக ஆய்வு”** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்:**

**“சங்க இலக்கியங்களில் நிலம் – பன்முக ஆய்வு”** என்ற இவ் ஆய்வானது, சங்க இலக்கியத்தில் நிலம், நிலம்சார்ந்த அகத்திணை, புறத்திணை, ஐந்திணை மக்களின் வாழ்வியல் கூறுகள், மாந்தரின் வாழ்வியல் பண்புகளை எடுத்துரைப்பதாக அமைகின்றன. மேலும், மக்களின் வாழ்வியலில் அங்கமாகக் கருதப்படுகின்ற செயல்களையும், பண்பாடு, நாகரிகம், பழக்க வழக்கங்கள், விருந்தோம்பல் முறைகள், வழிபாடு, சடங்குகள் உள்ளிட்ட பிறவற்றையும் அறிந்துகொள்வது ஆய்வின் முதன்மை நோக்கமாகவும், மானுடத்தின் முதன்மை அங்கமான அறநெறிகளை மக்கள் எவ்வாறு பின்பற்றினர் என்றும், அம்மக்களின் முதன்மைத் தொழில்கள் மற்றும் பிறதொழில்கள், ஐந்நில மக்களின் வாழ்வியல் நெறிகள் போன்றவற்றையும் எடுத்துரைப்பது இவ்வாய்வின் துணைமை நோக்கமாகக் கொண்டு இந்த ஆய்வு அமைகிறது.

**ஆய்வு முன்னோடிகள்**

**“சங்க இலக்கியங்களில் நிலம் – பன்முக ஆய்வு”** என்ற இவ்வாய்வுக்கு முன்னோடி ஆய்வுகளாக அமைவன “பழந்தமிழரின் நிலமும் உணவும்”, ஷீலா. நீ என்பவரின் 2005 ஆம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக்கழக ஆய்வும், “சங்க இலக்கியத்தில் முல்லை நில மகளிர்”, “பத்துப்பாட்டில் வளங்கள்” என்ற சென்னைப் பல்கலைக்கழக ஆய்வுகளும், ஆற்றுப்படை நூல்களில் உணவு – உடை – உறையுள் என்ற கா.சரவணன் என்பவரின் 2013 ஆம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக்கழக ஆய்வும், “புறநானூற்றில் போர் உளவியல் அணுகுமுறை”, வேல்வழி. தே. 2009 ஆம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக்கழக ஆய்வும் இந்த ஆய்விற்கான முன்னோடி ஆய்வுகளாக அமைகின்றன.

**ஆய்வு எல்லை:**

இந்த ஆய்விற்கு எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்கள் ஆய்வு எல்லைகளாக அமைகின்றது.

**முதன்மை ஆதாரங்கள்**

எட்டுத்தொகை நூல்களான நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, பரிபாடல், கலித்தொகை, ஆகிய நூல்களும், பத்துப்பாட்டு நூல்களான திருமுருகாற்றுப்படை,சிறுபாணாற்றுப்படை,பெரும்பாணாற்றுப்ப டை, பொருநராற்றுப்படை, மலைபடுகடாம், முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, பட்டினப்பாலை, குறிஞ்சிப்பாட்டு

என்ற பதினெட்டு நூல்களும் முதன்மை ஆதாரமாக எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

**துணைமை ஆதாரங்கள்**

இவ்வாய்விற்குத் தொடர்புடைய இலக்கியங்கள், இலக்கண நூல்கள், ஆய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், ஆய்வுக் கோவைகள், இதழ்கள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள் உள்ளிட்டவை துணைமை ஆதாரங்களாக உள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

இந்த ஆய்வானது சங்க இலக்கிய நூல்களின் ஐந்திணை நிலத்தின் தன்மைகள், இயற்கை சூழ்நிலைகள் போன்றவற்றையும் ஐந்திணை மாந்தர்களின் அக, புற வாழ்வியல் யாவற்றையும் பகுத்துக் காண்பதால் பகுப்பாய்வு முறையும், மேலும் ஐந்திணை மக்களின் வாழ்வியல் நெறிகள், பண்பாட்டுப் பழக்க வழக்கங்கள் இன்னும் பிறவற்றை குறித்த விளக்கம் கூறும் முறையால் அமைவதால் விளக்கமுறை ஆய்வும், சங்க கால சமூகத்து ஐந்திணை மக்களையும் இணைத்துப் பார்ப்பதால் ஒப்பீட்டுமுறை ஆய்வாகவும், உளவியல் ஆய்வாகவும் இந்த ஆய்வு அமைகிறது.

**ஆய்வுப் பயன்:**

இவ்வாய்வானது ஐந்திணையில் வாழ்ந்த மக்களையும் அவர்களின் வாழ்வியலை அகம், புறம் என்ற இருவகையிலும் விளக்கிக் கூறுகின்றது. மேலும் ஐந்திணைகளின் இயற்கை சூழ்நிலைகள், நிலவளம், நீர்வளம், மலை வளங்கள், விவசாய நிலைகள் போன்றவற்றை எடுத்துரைப்பதும், ஐந்திணை சார்ந்த

தொழில்கள் போன்றவற்றையும் விளக்கியுரைப்பதும் இந்த ஆய்வின் பயன்பாடாக உள்ளது.

**கருதுகோள்**

சங்க இலக்கியத்தில் ஐந்திணை நிலங்களின் இயற்கை சூழ்நிலைகள், நிலத்தின் தன்மை, விளைப்பொருட்கள் போன்றவற்றையும், ஐந்திணை மாந்தர்கள் யாரென்று இலக்கிய இலக்கண நூல்களின் அடிப்படையில் பிரித்தறிந்து அவர்களின் அக, புற வாழ்வியலையும் ஐந்திணையில் நிலங்களின் தொழிலமைப்புகள் எத்தகையவாறு அமைந்திருந்தன என்றும், ஐந்திணை மக்களின் வாழ்வியலின் முதன்மை அங்கமான பண்பாடு, நாகரிகம், பழக்க வழக்கங்கள் போன்றவற்றைத் தொகுத்துக் கூறுவதும் இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றது.மேலும், ஐந்நில மக்களின் வாழ்வு, தொழில்கள் நிலச் சூழலுக்கேற்ப அமைந்திருப்பதை உணர்த்தி நிலத்தன்மையையும், சிறப்பையும் போற்ற விழைவதே ஆய்வின் சாரமாகும்.

**ஆய்வேட்டின் அமைப்பு:**

இந்த ஆய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாக அமைகிறது. அவை,

**முன்னுரை**

**இயல் ஒன்று: சங்க இலக்கியத்தில் நிலம் – பன்முகப் பார்வை**

**இயல் இரண்டு: சங்க இலக்கியத்தில் நிலம் சார்ந்த அகத்திணை வாழ்வியல் கூறுகள்**

**இயல் மூன்று: சங்க இலக்கியத்தில் நிலம் சார்ந்த புறத்திணை வாழ்வியல் கூறுகள்**

**இயல் நான்கு: நிலம் சார்ந்த தொழில்கள்**

**இயல் ஐந்து: ஐந்நில மக்களின் வாழ்வியல் நெறிகள்**

**முடிவுரை**

**துணைநூற்பட்டியல்**

**பின்னிணைப்பு**

என்பன இந்த ஆய்வின் அமைப்பாகும்.

**இயல் விளக்கம்**

**இயல் ஒன்று: சங்க இலக்கியத்தில் நிலம் – பன்முகப் பார்வை**

சங்க இலக்கியத்தில் நிலம் – பன்முகப் பார்வை என்ற இவ்வியலானது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று சொல்லப்படுகின்ற ஐந்திணை பற்றியும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பவை பற்றியும், நிலத்தின் இயற்கை வளங்கான நிலவளம், நீர்வளம், மலைவளம், ஐந்திணைகளின் செல்வ நிலைகள், மற்றும் ஐந்திணை மக்கள் யார் யார் என்பது பற்றியும் இவ்வியலின் வழி ஆய்ந்தறியப்படுகின்றன.

**இயல் இரண்டு: சங்க இலக்கியத்தில் நிலம் சார்ந்த அகத்திணை வாழ்வியல் கூறுகள்**

சங்க இலக்கியத்தில் நிலம் சார்ந்த அகத்திணை வாழ்வியல் கூறுகள் என்ற இவ்வியலானது, அகவாழ்வியல் பண்புகள் அக மாந்தர்களின் வாழ்வியல் நிகழ்வுகளான களவு, கற்பு, வரைவு, வரைவுகடாதல், மடலேறுதல், உடன்போக்குகள் குறித்தும் அவற்றின் பின் நிகழும் சடங்குகள், பிரிவுகள், பிள்ளைப்பேறு உள்ளிட்ட பல அகவாழ்வுக் கூறுகள் மூலம் அறியப்படுகின்ற தமிழரின் அக

வாழ்வியலைக் குறித்தும் ஆய்ந்துணர்த்துவது இவ்வியலின் நோக்கமாகும்.

**இயல் மூன்று: சங்க இலக்கியத்தில் நிலம் சார்ந்த புறத்திணை வாழ்வியல் கூறுகள்**

சங்க இலக்கியத்தில் நிலம் சார்ந்த புறத்திணை வாழ்வியல் கூறுகள் என்ற இவ்வியலானது, வரலாற்றுச் சிறப்பியல்புகளும் போர்முறை, படைச் சிறப்பு, வெற்றிச் சிறப்புகள், புறமுதுகிடாமை, வடக்கிருத்தல், கொடை, பரிசில், செங்கோல் ஆட்சி, காவல் மரம் மற்றும் புறச் சடங்குகள், கல்வி, தொழில், மக்களின் பொருளியல் நிலை, பெண் வீரம், அரசாட்சி முறைகள் உள்ளிட்ட நிகழ்வுகள் எட்டுத்தொகை நூல்களில் கூறப்படுகின்ற புறவாழ்வியல் முறைகளை ஆய்ந்துணர்த்தித் தொகுத்துக் கூறுவதாக இவ்வியல் அமைகிறது.

**இயல் நான்கு: நிலம் சார்ந்த தொழில்கள்**

இலக்கியத்தில் குறிக்கப்படும் தமிழ்நிலமான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைகளும் அதன்வழி அறியப்படுகின்ற நிலம் சார்ந்த சிறப்புக்குரிய தொழில் முறைகளும், தொழில்களின் வழி அறியப்படுகின்ற மக்களின் வாழ்வுமுறை, வாழ்வியல் வளம், பண்புநலன் இவை உள்ளிட்ட தொழில் நுணுக்கமும் தொழிலில் கடைபிடிக்கப்பட்ட நேர்மையும் உத்திகளும் இவ்வியலில் சிறப்பாக அறியலாம்.

**இயல் ஐந்து: ஐந்நில மக்களின் வாழ்வியல் நெறிகள்**

ஐந்திணை மக்களின் வாழ்வியலைப் பாடல் கூற்றுகளின் அடிப்படையில் வரையறுத்தலும் அவர்களின் பண்பியல்களை அறிந்துகொள்வது இவ்வியலின் நோக்கமாக உள்ளது. மேலும் வாழ்வியலுக்குத் தேவையான அடிப்படைத் தேவை நிறைவுகள், தொழில் அமைப்புகள், பண்பாடு, நாகரிகம், விருந்தோம்பல் சிறப்புகள் உள்ளிட்ட பண்பாட்டுச் சிறப்பியல்புகளையும் இவ்வியலின் மூலம் ஆய்ந்துணர்த்தப்படுகின்றன.

**முடிவுரை**

இப்பகுதியில் ஆய்வேட்டின் முடிவுகள் தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதாவது, ஆய்வின் இயல்களின் அடிப்படையில் தொகுக்கப்பட்ட சான்றுகளின்படி தரப்படுகின்றன.

**துணைநூற்பட்டியல்**

ஆய்விற்குப் பயன்பட்ட நூல்களின் விவரங்கள் அகர வரிசைப்படி தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு**

ஆய்வுக்குப் பயன்படுகின்ற துணைச் சான்றுகள், கருத்துப் படங்கள் இங்கு தரப்படுகின்றன.

## இயல் ஒன்று

## சங்க இலக்கியங்களில் நிலம் – பன்முகப் பார்வை

### முன்னுரை

பொதுவாகத் தமிழ் இலக்கண இலக்கிய நூல்கள் தமிழ்நாட்டின் நிலப்பரப்பையும், தமிழ் மண்ணில் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் முறையையும் தெளிவுறுத்துகிறது. அத்தகைய சிறப்புடைய நூல்களின் வழியே பண்டை தமிழ் மக்களின் அக, புற வாழ்வியலையும், நாகரிகம், பண்பாடு, கலை உள்ளிட்டவற்றை நாம் அறிந்து கொள்ள முடியும்.

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை, குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"*[1]

என்ற மேற்கண்ட நூற்பாவின்வழி நிலமானது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்து பிரிவுடன் அறியப்படுகின்றன. அவ்வாறு அறியப்படுகின்ற (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை) என்ற ஐந்திணை நிலங்களில் உள்ள மக்கள், தொழில், ஊர், நில அமைப்பு, காலச் சூழ்நிலை, தாவரங்கள், விலங்குகள், பறவைகள், வழிபாடு, சடங்கு, விளையாட்டு, உணவு, உடை, உறையுள், விருந்தோம்பல் உள்ளிட்ட பலவகையான கருப்பொருள்களையும் நிலங்களைச் சார்ந்த பிற பண்பாட்டுக்

கூறுகளையும் ஆய்வுப் பொருளாகக் கொண்டு விளக்கியுரைப்பதாக இவ்வியல் அமைகிறது.

திணை பாடல்களில் நிலமும் நிலம்சார்ந்த வாழ்வியலும்

**“முதல் எனப்படுவது நிலமும் பொழுதிரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே”[2]**

என்ற நூற்பாவின் வழி அகவாழ்வியலில் முதன்மையாகக் கருதப்படுவது நிலமும் பொழுதும் என்ற இரண்டின் அடிப்படையில் நிகழும் அனைத்து வாழ்வியல் கூறுகளையும் நிலவியல் அமைப்புடன் பொருத்திக் கூறுவது சங்க இலக்கியப் பாடல்களின் இயல்பாக உள்ளது. அதாவது இலக்கிய சுவடிகளின் வழி அறியப்படும் வரலாறோ அல்லது பண்பாட்டுக் கூறுகளோ அல்லது பிற அறிவியல் தொழில்நுட்பம் சார்ந்த செய்திகளோ அனைத்துவகை செய்திகளும் திணைப்பாடல்கள் அடிப்படையில் அமைந்திருப்பதைக் காணலாம். அவ்வகையில் நிலங்களின் அடிப்படையில் அமைந்துள்ள பல்வகைச் செய்திகளைத் தொகுத்துரைப்பதே இவ்வியலின் முதன்மை நோக்கமாக உள்ளது.

**நிலம் என்பதும் நிலம் சார் வாழ்வியலும்**

மனிதன் வாழ்வு நிலம் சார்ந்தே அமைந்த வாழ்வாகும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற ஐந்திணைப் பாகுபாடுகள் பொதுவாக இருந்தாலும் பழங்காலத்திலும் இன்றைய தமிழகத்திலும் பாலை என்ற நிலப்பரப்பு இல்லை என்றே கூறலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற திணைகளுக்குக் கூறப்பட்டது போன்று மற்ற நிலத்திற்குக் கூறப்பட்டது போன்று தெய்வத்தை இணைத்து பாலை நிலத்திற்குத் தனியே கூறப்படவில்லை. ஆயினும்

கருப்பொருள்கள் கூறுமிடத்து பாலை நிலத்திற்கும் ஏற்றவகையில் கருப்பொருள்களைக் கூறிச் சென்றுள்ளனர் என்பதை நாம் புரிந்துகொள்ளலாம்.

பாலைத் திணை என்பது பாலைவனப் பகுதியாகும். தமிழ்நாட்டில் பாலைநிலம் இல்லாதது ஒரு காரணமாக இருக்கலாம். பாலை என்ற நிலம் எவ்வாறு உருவாகிறது என்பதைக் காலத்தால் சற்றுப் பிற்பட்ட சிலப்பதிகாரம் வழி அறியமுடிகிறது. முல்லை, குறிஞ்சி ஆகிய நிலங்கள் நீண்ட காலம் மழை பொழியாமல் காய்ந்து போய் இருப்பின் அது பாலை நிலமாக மாறும் என்பதை,

***“முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து***
***நல்லியல்பு இழந்து நடுங்கு துயர்உறுத்துப்***
***பாலை என்பதோர் படிவம் கொள்ளும்”*** [3]

என்று கூறுகிறது.

**குறிஞ்சித்திணை**

குறிஞ்சியானது மலையும் மலைசார்ந்த இடம். இக்குறிஞ்சி நிலத்தில் குறவர் குறத்தியர் என்பவர்கள் தலைமக்களாக இருக்கிறார்கள். இவர்கள் வேட்டையாடுதல், தினைபுனம் காத்தல், தேனெடுத்தல் என்னும் சில தொழில்களைச் செய்கின்றனர். இம்மக்கள் குறிஞ்சிமலை நிலங்களில் வேட்டையாடுதலால் பெறப்படும் உணவினையும், குறிஞ்சியில் விவசாயம் செய்வதால் பெறப்படும் உணவினையும், மற்ற நிலத்தாரிடையே செய்யும் பண்டமாற்றினால் பெறப்படும் உணவினையும் உண்டு வாழ்கின்றனர்.

**முல்லைத்திணை**

முல்லைத்திணை காடும் காடுசார்ந்த பகுதியாகும். இங்கு ஆயர் ஆய்ச்சியர் தலைமக்களாக வசிக்கின்றனர். இவர்கள் காட்டில் ஆநிரை மேய்த்தல், வேட்டையாடுதல், கிழங்கு அகழ்தல் போன்றவை செய்தும், ஆநிரைகளின் மூலம் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய்யெடுத்தல் என்று பலவிதமான தொழில்களை முதன்மையாகக் கொண்டு இருக்கின்றனர். மேலும் வேட்டையாடுதலாலும், பால், தயிர், மோர், நெய் உள்ளிட்டவைகளைப் பிற நிலத்தாருக்குப் பண்டமாற்று செய்வதால் பெறப்படும் மீன் உள்ளிட்ட இறைச்சிப் பொருள்களையும் உண்டு வருகின்றவர்களாக இருக்கின்றனர்.

**மருதத்திணை**

மருத நிலமானது, வயலும் வயல்சார்ந்த பகுதியினையுடைய இந்நிலத்தில் உழவர், உழத்தியர் தலைமக்களாக வாழ்ந்துவந்தனர். இவர்களின் முதன்மைத் தொழிலாக இருப்பது விவசாயமாகும். மேலும் இந்நிலங்களில் பெறப்படும் பலவகை தானிய உணவுகளும் பிற நிலத்தாரிடையே பெற்ற பண்டமாற்று உணவுகளும் இம்மக்களுக்கு உணவாக இருக்கிறது.

**நெய்தல்திணை**

நெய்தல் நிலமானது கடலும் கடல் சார்ந்த நிலமாகும். இங்கு பரதவர், பரத்தியர் என்போர் தலைமக்களாக வாழ்ந்தார்கள். இவர்கள் கடலில் மீன்பிடித்தல், உப்புக் காய்ச்சுதல், சங்கறுத்தல், முத்தெடுத்தல் போன்றவற்றை முதன்மைத் தொழிலாகவும், பிறநிலத்தாரிடையே பண்டமாற்று செய்தலும் பிறநாட்டிடையே வாணிகம் செய்தல் என்று

பல தொழில்களையும் அத்தொழில் சார்ந்த பிற தொழில்களையும் இவர்கள் செய்துவந்தார்கள்.

**பாலைத்திணை**

பாலை நிலத்திற்கு என்று தனியே தமிழ் நிலத்தில் நிலம் இல்லை. ஆனால் முல்லையும் குறிஞ்சியும் முறைமை திரிந்து என்ற கூற்றிற்கு இணங்க கதிரவன் தனது வெம்மையாலே வளமை தீய்ந்த இடங்களே பாலை நிலமாக மாறுகிறது எனலாம். இங்கு ஆறலைக் கள்வரும், உயிரக் கொலை செய்பவரும் வாழ்கின்ற நிலமாகப் பாலை நிலம் காணப்படுகிறது.

**அகழ்வாழ்வியல் பொழுதுகள் பகுப்பு**

பொதுவாக, ஐந்திணை நிலங்களிலும் நிலங்கள் தமிழர் வாழ்வியலோடு (பண்பாட்டுப் பழக்க வழக்கங்களோடு) பின்னிப்பிணைந்துள்ளது. அதாவது சூழலுக்கேற்ப, காலத்திற்கேற்ப உணவுவகைளும், உடை முறைகளும், புழங்கு பொருட்களும் மக்களின் அடிப்படைத் தேவைகளும் நிலத்தின் தன்மைக்கு ஏற்பவும் எப்போதும் மாறுபடுகின்றன.

அவ்வகையில் தமிழர்கள் காலத்தினை இருவகையாகப் பகுத்து வைத்திருந்தார்கள். அவை பெரும்பொழுது, சிறுபொழுது என்பதாக அவற்றை அறிந்துகொள்ளலாம். ஒரு பாடலில் அமைந்துள்ள திணையை அறிவதற்கு நிலம் மட்டுமின்றி கருப்பொருளும் பொழுதும் பெருந்துணைப் புரிகின்றன. இப்பொழுதினைப் பெரும்பொழுது, சிறுபொழுது என இருவகையாகப் பகுத்துக் கூறுவர். இதனை,

**“பெரும்பொழுதென்றா சிறுபொழுதென்றா**

**இரண்டு கூற்றத் தியம்பிய பொழுதே”** [4]

என்று நம்பியகப்பொருள் நூற்பா மொழிகிறது

**பெரும்பொழுது**

பெரும்பொழுதானது ஆண்டுக்குப் பன்னிரண்டு மாதங்களாக உள்ளன. இவை இரண்டிரண்டு மாதங்களாகப் பகுக்கப்பட்டு பெரும்பொழுது என்று வகுக்கப்படுகிறது. இதனை,

**சித்திரை, வைகாசி - இளவேனில்**

**ஆனி, ஆடி - முதுவேனில்**

**ஆவணி, புரட்டாசி - கார்காலம்**

**ஐப்பசி, கார்த்திகை - கூதிர்காலம்**

**மார்கழி, தை - முன்பனிக்காலம்**

**மாசி, பங்குனி - பின்பனிக்காலம்**

என அறுவகைப் பருவமாகப் பகுத்துக் கூறுகின்றனர்.

**சிறுபொழுது**

சிறுபொழுதானது, ஒரு நாளினை ஆறு பிரிவுகளாகப் பிரித்துக் கணக்கிடப்பட்டதாகும். இதனை,

1. வைகறை
2. விடியல்
3. நண்பகல்
4. எற்பாடு (பிற்பகல்)
5. மாலை
6. யாமம் (நள்ளிரவு)

எனப் பிரிக்கப்படும். (ஏற்பாடு - ஏற்பாடாவது பகற்பொழுதின் பிற்கூறு - **இளம்பூரணர் உரை, தொல்.பொருள்.** 10)

**நிலமும் நிலம்சார் கருப்பொருளும்**

கருப்பொருட்கள் என்பது, இடத்தாலும் காலத்தாலும் வேறுபட்ட பல தோற்றம் கொள்ளுவதாகும். பொதுவாக ஐந்திணைகளில் வாழும் மக்கள் உண்ணுகின்ற உணவு, ஐந்நிலங்களில் செய்கின்ற தொழில் இவைகளையும் கருப்பொருளாக எடுத்துக்கொள்ளலாம். மேலும் ஒவ்வொரு நிலத்திற்கும் தனியே தெய்வங்கள், உணவு வகைகள், மரங்கள், பறவைகள், செய்தொழில்கள், யாழ், பறை, பண் உள்ளிட்டவைகள் கருப்பொருள் என்பதில் அடங்கும். இதனை,

**நிலம் மக்கள்**

1. குறிஞ்சி - குறவர், குறத்தியர்
2. முல்லை - ஆயர், ஆய்ச்சியர்
3. மருதம் - உழவர், உழத்தியர்
4. நெய்தல் - பரதர், பரத்தியர்
5. பாலை - எயினர், எயிற்றியர்

**நிலம் உணவு**

1. குறிஞ்சி - தினை, மலை நெல்
2. முல்லை - வரகு, சாமை
3. மருதம் - செந்நெல், வெண்ணெய்
4. நெய்தல் - மீன்
5. பாலை - சூறையாடலால் வரும் பொருள்

**நிலம் விலங்கு**

1. குறிஞ்சி - புலி, கரடி, சிங்கம்

2. முல்லை - முயல், மான்

3. மருதம் - எருமை, நீர்நாய்

4. நெய்தல் - முதலை, சுறா

5. பாலை - வலிமை இழந்த யானை

**நிலம் பூ**

1. குறிஞ்சி - குறிஞ்சி, காந்தள்

2. முல்லை - முல்லை, தோன்றி

3. மருதம் - செங்கழுநீர், தாமரை

4. நெய்தல் - தாழை, நெய்தல்

5. பாலை - குரவம், பாதிரி

**நிலம் மரம்**

1. குறிஞ்சி - அகில், வேங்கை

2. முல்லை - கொன்றை, காயா

3. மருதம் - காஞ்சி, மருதம்

4. நெய்தல் - புன்னை, ஞாழல்

5. பாலை - இலுப்பை, பாலை

**நிலம் பறவை**

1. குறிஞ்சி - கிளி, மயில்

2. முல்லை - காட்டுக்கோழி, மயில்

3. மருதம் - நாரை, நீர்க்கோழி, அன்னம்

4. நெய்தல் - கடற்காகம்

5. பாலை - புறா, பருந்து

**நிலம் ஊர்**

1. குறிஞ்சி - சிறுகுடி

2. முல்லை - பாடி, சேரி

3. மருதம் - பேரூர், மூதூர்

4. நெய்தல் - பட்டினம், பாக்கம்

5. பாலை - குறும்பு

**நிலம் நீர்**

1. குறிஞ்சி - அருவி நீர், சுனை நீர்

2. முல்லை - காட்டாறு

3. மருதம் - மனைக்கிணறு, பொய்கை

4. நெய்தல் - மணற்கிணறு, உவர்க்கழி

5. பாலை - வற்றிய சுனை, கிணறு

**நிலம் பறை**

1. குறிஞ்சி - தொண்டகப் பறை

2. முல்லை – ஏறுகோட் பறை

3. மருதம் - மணமுழா, நெல்லரிகிணை

4. நெய்தல் - மீன்கோட்பறை

5. பாலை - துடி

**நிலம் யாழ்**

1. குறிஞ்சி - குறிஞ்சியாழ்

2. முல்லை - முல்லையாழ்

3. மருதம் - மருதயாழ்

4. நெய்தல் - விளரியாழ்

5. பாலை – பாலையாழ்

**நிலம் பண்**

1. குறிஞ்சி - குறிஞ்சிப்பண்

2. முல்லை - முல்லைப்பண்

3. மருதம் - மருதப்பண்

4. நெய்தல் - செவ்வழிப்பண்

5. பாலை - பஞ்சுரப்பண்

**நிலம் தொழில்**

1. குறிஞ்சி - தேன்எடுத்தல், கிழங்கு அகழ்தல்

2. முல்லை - ஏறு தழுவுதல், நிரை மேய்த்தல்

3. மருதம் - நெல்லரிதல், களைபறித்தல்

4. நெய்தல் - மீன்பிடித்தல், உப்புவிளைத்தல்

5. பாலை - வழிப்பறி செய்தல்

**ஐந்திணைகள் - திணைக்கடவுள்கள்**

**"மாயோன் மேய காடுறை உலகமும்"**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையான் சொல்லவும் படுமே"[5]**

என்ற மேற்கண்ட நூற்பாவின் வழி திணை மக்கள் யாவரும் ஒவ்வொரு கடவுளை வழிபட்டனர் என்பதை அறியமுடிகிறது. அவை மாயோன், சேயோன், வேந்தன், வருணன், கொற்றவை என ஐந்திணை நிலத்திற்கும் உரிய கடவுள்களை அறியமுடிகிறது. மேலும் இந்த ஐந்திணை மக்களின் வழிபாட்டு முறையைப் பற்றி விரிவாக அறிந்து கொள்ள முடிகிறது.

**குறிஞ்சி நிலக் கடவுள் முருகன்**

பொதுவாக ஐவகை நிலம்சார் தமிழர் திணைகளுள் குறிஞ்சி முதன்மையானது எனலாம். இக்குறிஞ்சியானது மலையும் மலை சார்ந்த பகுதியானது ஆகும். இக்குறிஞ்சித் திணையில் வாழ்ந்த மக்கள் என்போர் குறவர், குறத்தியர் ஆவர். இவர்களின் கடவுள் முருகன் ஆவார். இந்த குறிஞ்சி நில கடவுளுக்கு வேறு பெயர்களாக முருகு, நெடுவேள், சேய் போன்ற பெயர்களும் இலக்கியங்களில் சொல்லப்படுவதுண்டு. இத்தகைய முருகனை **'சேயோன்'** என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இதனை,

குறிஞ்சி மலையே முருகன் இருக்கும் இடமாகும். இக்குறிஞ்சி நிலத்தின் செந்தினை நீரோடு கலந்து மலர்த்தூவி வழிபடும் முறை இருந்தனை.

**“மறிக்குர லறுத்துத் தினைப்பரப் பிரீஇச்**
**செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்க**
**வேற்றுப் பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்தி”[6]**

**“முருகயர்ந்து வந்து முதுவாய் வேல**
**கினவ லோம்புமதி வினவுவ துடையேன்**
**பல்வேறு றுருவிற் சில்லவிழ் மடையொடு**
**சிறுமறி கொன்றிவ ணறுநுதனீவி வணங்கினை”[7]**

என்றும் குறிப்பிடுவதனால் அறிய முடிகின்றது.

**முல்லை நிலம் - திருமால்**

முல்லை நிலமானது காடும் காடு சார்ந்த இடமும் எனப்படுகிறது. இந்த முல்லை நிலமானது குறிஞ்சிக்கும் மருதத்துக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பாகும். இங்கு தலைமக்களாக வாழ்ந்தவர்கள் இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் ஆவர்.

இந்த முல்லை நில மக்கள் ‘மால்’ எனப்படும் திருமாலையே கடவுளாக வழிபட்டனர் என்பதை,

**“ஊழியாழிக்கண் இருநில முருகெழு**

**கேழலாய் மருப்பி னுழுதோய்”[8]**

திரு“மால்” 'மாயோன்' என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். திருமால் என்பது நீலமணி போன்றவர் என்றும், கரிய மலர் போன்றவர் என்றும், கார்மேகம், காரிருள், கடல் போன்றவர் என்றும் பலபெயர்களாகச் சொல்லப்படுகிறது. இவை போன்றே சங்க இலக்கியத்தில், ’ஒளிரும் திருமேனியையுடையவர்’ என்று குறிப்பிடப்படுகிறது.

முல்லை வாழ் திருமாலை, 'கண்ணன்' என்றும் அழைக்கின்றனர். ஆடு, மாடு மேய்த்தலை முதன்மைத் தொழிலாகக் கொண்ட முல்லை நில மக்களில் ஒருவராகப் பிறந்தவரே கண்ணன் என்றும் சொல்லப்படுகிறது. எனவே இம்முல்லை நில மக்களுக்கு வரும் துன்பங்களைப் போக்கி அவர்களைக் காப்பாற்றி வருபவரும் கண்ணனே என்றும் சொல்லப்படுகிறது.

**மருதம் - இந்திரன்**

வயலும் வயல் சார்ந்த இடமும் மருத நிலமாகும். இம்மருத நில மக்களின் இறைவன் என்பவர் இந்திரன் ஆவார். இவரை 'வேந்தன்' என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். மேலும் இந்திரன் என்ற சொல்லுக்கு, ’வேதக் கடவுளரின் தலைவன்’ என்று பொருளாகும். இவரையே போருக்குச் செல்லும் முன்னர் (இந்திரனையே) மருத நில மக்கள் வணங்கினர் என சொல்லப்படுகிறது.

இத்தகைய சிறப்புடைய இந்திரன், பொன் இடியை ஆயுதமாகக் கொண்டவர். இவருடைய ஆயுதம் வஜ்ஜிராயுதம். வஜ்ஜிரம் என்றால்,

`இடி' என்று பொருள். இந்திரன் ஐராவதம் என்னும் வெள்ளை யானையை வாகனமாகக் கொண்டவர் ஆவார். இத்தகு இந்திரனை மக்கள் வணங்கியதை,

**"வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்"[9]**

என்று தெரிவிக்கின்றது.

**"இந்திர விழாவிற்கு பூவினன்ன"[10]**

என்று ஐங்குறுநூறு இந்திரனுக்கு விழா எடுக்கப்பட்ட நிகழ்வு பற்றி கூறுகின்றது.

**நெய்தல் - வருணன்**

நெய்தல் நிலமானது கடலும் கடல் சார்ந்த நிலமே ஆகும். இங்கு சேர்ப்பன், நுளைச்சி, நுளையர், பரதவர், பரத்தியர் என்போர் இந்நிலத்து மக்கள் ஆவர். இந்நெய்தல் நில மக்களின் கடவுளை வருணன் எனக் குறிப்பர். வருணன் என்பவர் ஆகாயத்தைக் குறிப்பவர். அதாவது வருணன் என்பது மேகம், மழை, ஆறு, கடல் என்று பலவகை நீர் நிலைகளுடன் தொடர்புடைய நீர்க்கடவுள் ஆவார். இவரே உலகம் முழுவதும் பரந்து இருப்பவர் எனலாம். இதனாலேயே இவரை `உலகத்தையே ஆள்பவர்' என்று அழைக்கப்படுவதும் உண்டு.

பொதுவாக நெய்தல் நிலம் சார்ந்த மக்கள் இறைவனுக்கு முத்துக்களையும், வலம்புரிச் சங்குகளையும் காணிக்கையாகச் செலுத்தி கடல் தெய்வமான வருணனை வழிபட்டனர் என்பதை,

**"பெருங்கடற் தெய்வம் நீர்நோக்கித் தெளித்து**

**அருந்துயர் நீக்கவேண் போல் மன்"[11]**

என்ற பாடல் உணர்த்துகிறது.

**பாலை - கொற்றவை**

பாலை நிலமானது, முல்லையும் குறிஞ்சியும் திரிந்த நிலமே எனலாம். இந்நிலத்தில் விடலை, காளை, மறவர், மறத்தியர் என்போர் தலைமக்களாக இருக்கின்றனர். பாலை நிலத்தின் கடவுள் 'கொற்றவை'. கொற்றவைக்கு அவரை, துவரை, எள்ளுருண்டை, இறைச்சி முதலியன படைக்கப்படும். கொற்றவை பவனி வரும்போது புல்லாங்குழல் இசைக்கப்படும். இப்பாலை நில மக்கள் (தாங்கள்) போருக்குச் செல்லும் முன்னர், அப்போரில் தாங்களே வெற்றியடைய கொற்றவையை வழிபடுவர் என்பதை,

**"ஓங்குபுகழ் கானமர் செல்வி அருளலின்"**[12]

என்ற அகநானூற்றுப் பாடலின் வழி அறிய முடிகின்றது.

**"விடர் முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாம்"**[13]

என்று குறுந்தொகை, கொற்றவைக்குப் பலியிட்ட செய்தியைக் கூறுகின்றது.

**"உருகெழு மரபி னயிரை பரவியும்"**[14]

**"... ... ... ... ... அஞ்சு வரு மரபிற்**
**கடவுளயிரையி னிலை"**[15]

என்ற மேற்கண்ட அடிகளால் பாலை நிலத்தின் கொற்றவையை வணங்கும் முறையை அறியமுடிகிறது.

## ஐந்திணைக் கடவுள்களைப் போற்றும் விழாக்கள்

### குறிஞ்சிநில வெறியாடல்

வெறியாடல் என்பது, பொதுவாக பெண்ணின் ஒருவித அமைதிப் போக்கிற்குப் பேய்பிடித்ததா அல்லது காதல் கொண்டவளா என அறிய நடத்தும் நிகழ்வை வெறியாடல் என்பர். இந்த வெறியாடலானது, பெண்ணைப் பெற்றவர்களின் அனுமதியை அல்லது வேண்டுகோளை ஏற்றுக் கொண்டே அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்வர்.

இந்நிகழ்வில் பெண்ணின் வீட்டின் முற்றத்தில் வெறியாடும் களம் அமைக்கப்படுகின்றது. முருகனுக்குரிய சேவல் கொடி அங்கே ஏற்றப்பட்டு நறுமணப் புகையை எழுப்பி மணிகளை ஒலித்து முருகனை வேலன் அழைக்கப்படுகின்றான். இதனால் முருகன் ஒருவர் மேல் வந்து இறங்க அதனால் அவர் ஆவேசமுற்று ஒரு வகையான மயக்க நிலையில் இருந்துகொண்டே துள்ளிக்குதித்து ஆடிப் பாடுகின்றான். இந்நிலையில், தலைவியின் அன்னையின் அறியாமையை அவர் நன்கு பயன்படுத்திக் கொண்டு இவ்வாறு சொல்கிறார் என்பதை,

**“இஃதுளவன் கொல்லோ தோழி! மெய் பரந்து**
**எவ்வம் கூர்ந்த ஏமுறு துயரம்**
**வெம்மையின் தான் வருத்துறீஇ நம் வயின்**
**அறியாது அயர்ந்த அன்னைக்கு வெறி என**
**வேலன் உரைக்கும் என்ப: ஆகலின்…”[16]**

என்ற இப்பாடலில் வெறியாடு களத்தில் கட்டப்பட்டிருக்கும் கொழுத்த ஆட்டுக்கிடாயின் கழுத்தை அறுத்து அதிலிருந்து பெருகும்

குருதியினைச் செந்தினை அரிசியுடன் கலந்து முருகனுக்குப் பலியாக அதனைத் தூவுகின்றனர் என்பதையும் அதனைத் தொடர்ந்து நடத்தப்பட்ட பிற நிகழ்வுகளையும் அறியமுடிகிறது. இதனை,

**"நளிமலைச் சிலம்பில் நல்நகர் வாழ்த்தி**
**நறும்புகை எடுத்து குறிஞ்சி பாடி**
**இமிழ்இசை அருவியொடு இன்இயம் கறங்க**
**உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்**
**குருதிச் செந்தினைப் பரப்பி குறமகள்**
**முருகுஇயம் நிறுத்து முரணினர் உட்க**
**முருகுஆற்றுப்படுத்த உருகெழு வியல்நகர்..."[17]**

என்ற அடிகள் வெறியாடல் பற்றி விளக்குவதை அறியமுடிகின்றது. இதனைப் போன்றே வெறியாடல் பற்றி செய்திகளை **குறு.53, 263, அகம்.98.5-10, நற்.34, ஐங்.248** போன்றவையும் கூறுகின்றது.

**கார்த்திகைக் கார்த்திகை**

பொதுவாக தீபம் ஏற்றுவது என்பது சங்ககால மக்களிடையே சிறப்புற்றிருந்த செயலாகத் தெரியவருகிறது. அதாவது பழங்குடி மக்கள் மலைமீது தீபத்தை ஏற்றி அதன் மூலம் வருகின்ற வெளிச்சத்தை தங்களின் முன்னோர் என்று கருதி வழிபட்டனர். இதன் காரணம் சரியாகத் தெரியவில்லை என்றாலும் தமிழர்கள் இயற்கையில் இறைவனைக் கண்ட பெரும் சிறப்பினைக் கொண்டவர்கள் என்பதையே உணரமுடிகிறது. எனவே தான் தமிழரின் சமய மரபு உடையவனாய் இந்த காரணத்தினாலேயே மண்ணாய், வளியாய், ஒளியாய், ஊனாய், உயிராய், உண்மையுமாய், இன்மையுமாய் எங்கும் நிறைந்திருப்பவன் இறைவனே என்பதாய் கருதுகின்றனர். இத்தகைய மரபின் அடிப்படையிலே ஒரு மாதத்தில்

உள்ள நாட்களில் வானில் தோன்றிய நட்சத்திரங்களைக் கண்டு அவற்றை 27 நாள்மீன்களின் (விண்மீன்) பெயர்களால் வழங்கி வந்தனர். அந்த நாள்விண்மீன்களில் ஒன்றே கார்த்திகை என்ற நாள்மீன் என்பதாகும். அத்தகைய கார்த்திகை விழா பற்றிய சங்க இலக்கியப் பாடல்கள் பின்வருமாறு காணலாம்.

*“கார்த்திகை காதில் கனமகர குண்டலம்போல்*
*சீர்த்து விளங்கித் திருப்பூத்தல்”*[18]

*”ஆடு இயல் அழல் குட்டத்து”*[19]

*”அகலிரு விசும்பின் ஆஅல் போல*
*வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை”*[20]

சங்க காலத்தில் நிகழ்ந்த கார்த்திகை விளக்கீட்டினை எடுத்துக்காட்டுகின்றது.

*”வீரை வேண்மான் வெளியன் தித்தன்*
*முரசுமுதல் கொளீஇய*
*மாலை விளக்கின்வெண்கோடு இயம்ப,*
*நுண்பனி அரும்பக்கையற வந்த பொழுது”*[21]

என்ற மேற்கண்ட அடிகளால் கார்த்திகை விளக்கு நிறைந்த வீட்டின் அழகியலை அறியலாம்.

**ஆவணித் திருவோணம்: இந்திரன்**

திருமாலின் 10 அவதாரங்களில் ஒன்று 'வாமன வடிவம்' ஆகும். இந்த அவதாரத்தில் அந்தணராக வேடம் ஏற்றுக்கொண்டு மஹாபலி சக்கரவர்த்தியிடம் மூன்று அடி மண்ணைத் தானமாகக் கேட்டார் என்று புராணக்கதையாலும் சங்க இலக்கிய சிலப்பாடல்களாலும் அறியமுடிகிறது. இக்கதையில் வருகின்ற மஹாபலி

சக்கரவர்த்தியானவர் 'கேட்பவர்களுக்கு இல்லை' என்று சொல்லாமல் கேட்கும் தானம் வழங்கும் குணமுடையவர்.

ஒருநாள் இவரிடம் தானம் கேட்டு வந்திருப்பவர் திருமால் என்று அறிந்த அசுர குருவான சுக்கிராச்சாரியார், மகாபலி சக்கரவர்த்தியைத் தானம் கொடுப்பதைத் தடுத்தார். குருவின் அறிவுரையை மீறி, மஹாபலி சக்கரவர்த்தி மூன்று அடி மண் கொடுக்க சம்மதித்தார். கேட்பவர் திருமால் என்றும்; கேட்டதைக் கொடுத்தால் தன் உயிரே போகும் என்று அறிந்தும்; கேட்ட வரத்தை அளித்து உயிர்த்தியாகம் செய்தவர் மஹாபலி சக்கரவர்த்தி ஆவார்.

**மஹாபலி சக்கரவர்த்தி**

திருமாலுக்குத் தானம் வழங்கி உயிர்த்தியாகம் செய்த மஹாபலி மன்னரின் விருப்பத்தின்படி ஒவ்வொரு ஆண்டும் ஓணம் கொண்டாடப்படுகிறது. இத்திருநாளன்று அவர் இந்த பூமிக்கு வருகை புரிகிறார் என்றும் அவரை வரவேற்கும் நிகழ்வாக இந்த ஓணத் திருநாள் கொண்டாடப்படுகிறது.

***"கணம் கொள் அவுணர்க் கடந்த பொலந் தார்***
***மாயோன் மேய ஓண நன்னாள்***
***சுரும்பார் கண்ணிப் பெரும்புகல் மறவர்***
***கடுங்களிறு ஓட்டலிற் காணுநர் இட்ட***
***நெடுங்கரைக் காழகம் நிலம்பரல் உறுப்பக்***
***கடுங்கள் தேறல் மகிழ் சிறந்து திரிதர***
***கணவர் உவப்பப் புதல்வர் பயந்து***
***பணைத்து ஏந்து இளமுலை அமுதம் ஊற***
***திவவு மெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணி,***
***குரல் புணர் நல் யாழ் முழவோடு ஒன்றி"[22]***

என்ற மேற்கண்ட பாடல் மாங்குடி மருதனார் பாடியதாகும்.

**மாசி மகம்: வருணன்**

**மாசிமகம்** என்பது மாசி மாத பௌர்ணமியுடன் கூடிவரும் மக நட்சத்திர நாளில் கொண்டாடப்படும் விழாவாகும். அன்றைய தினம் கடலாடும் விழா நிகழ்வாக இந்த விழா கொண்டாடப்படுகிறது.

வரலாற்றில் இடம்பெற்ற திருச்செந்தூரில் இரண்டாம் வரகுண பாண்டியரின் (கி.பி.862) மூன்று அதிகாரிகள் நடத்திய பலவித விழாக்களில் மாசிமகம் குறிக்கப்பட்டுள்ளதை காணலாம். இந்த கல்வெட்டுகளில் காணப்படும் தொன்மையான மாசிமக விழா என்று குறிப்பாகச் சொல்லப்பட்டுள்ளது.

முதலாம் இராஜராஜ சோழன் காலத்தில் (கி.பி.1009) திருச்சி வட்டம் திருப்பராய்த்துறை மகாதேவர்க்கு மாசிமகத்தன்று படைக்கப் பட்டதாகவும், அதற்காக ஒன்றரை மா அளவு நிலம் நல்கப்பட்டு இரண்டு கல அரிசி கிடைக்க வழி செய்யப்பட்டதாகவும் கூறப்பட்டுள்ளது.

இராசேந்திர சோழன் 4-ஆம் ஆட்சியாண்டில் (கி.பி.1016) (நாகப்பட்டினக் கூற்றத்து ஊரார்கள் இறைவனது மாசிமக விழாவின் ஆறாம் நாள் செலவுகளுக்காக) நிலமளித்த செய்தியினை அவ்வூரிலுள்ள கல்வெட்டின்மூலமாக அறியலாம். இங்ஙனம் ஒவ்வொரு நிலத்திற்குமானக் கடவுளைச் சிறப்பு விழாக்களாகக் கொண்டாடி வழிபட்டமை மேற்கண்ட பாடல்கள் வழி அறியப்படுகிறது.

**உரிப்பொருள்**

ஒவ்வொரு நில வாழ்வுமுறையே உரிப்பொருள் என்று கூறப்படுகிறது. இத்தகைய உரிப்பொருளை, இயற்கையின் அமைவிற்கு ஏற்றாற்போல் நிலத்தினைப் பகுத்த தொல்காப்பியர் கூறுகிறார். அவை, ஒழுக்கத்தினையும் திணை அமைப்பிற்கு ஏற்ப கூறப்பட்டுள்ளதை,

**“புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**

**ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை**

**தேருங்காலை திணைக்குரிப் பொருளே”[23]**

என ஐவகையாகப் பகுத்திருக்கிறார்.

**”வரையே சுரமே புறவே பழனம்**

**திரையே அவையவை சேர்தரும் இடனேஎனஈர்**

**ஐவகைத்து அனையியல் நிலமே”[24]**

என்ற பாடல்கள் மூலம் திணை மக்களுக்கு உரிய பொருள் உரிப்பொருள் என்பதை அறியலாம். இதனை உரிப்பொருள் ஒழுக்கம் என்பர். இது அக வாழ்க்கைக்கும் புறவாழ்க்கைக்கும் உரியதாகும். அவை முறையே புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பவற்றோடு கைக்கிளை, பெருந்திணை ஆகியவை சேர்ந்த ஏழும் அகத்திணைக்குரிய உரிப்பொருள்களாக எடுத்துக் கொள்ளப்படுகிறது.

1. **வெட்சி**
2. **வஞ்சி**
3. **உழிஞை**
4. **தும்பை**

**5. வாகை**

**6. காஞ்சி**

**7. பாடாண்**

ஆகிய ஏழும் புறத்திணைக்கு உரியனவாகும்.

**அகத்திணைகளுக்குப் பொருந்தும் புறத்திணைகள்**

பொதுவாக அகப்பாடல்களில் அகப்பொருளில் கூறப்பட்ட முதற்பொருளும், கருப்பொருளும் புறப்பொருள் இலக்கியத்திற்கும் பொருந்தும் தன்மையானதாகும். ஒவ்வொரு புறத்திணையும் ஓர் அகத்திணையோடுத் தொடர்புபடுத்தப்பட்டுள்ளதை,

| அகத்திணை | புறத்திணை |
|---|---|
| குறிஞ்சி | வெட்சி |
| முல்லை | வஞ்சி |
| மருதம் | உழிஞை |
| நெய்தல் | தும்பை |
| பாலை | வாகை |
| கைக்கிளை | பாடாண் |
| பெருந்திணை | காஞ்சி |

என்ற தொல்காப்பியர் கூற்றுப்படி அகத்திணைக்குரிய புறத்திணைகளை மேற்கண்டவாறு அறியமுடிகிறது.

## நிலமும் நிலம்சார்ந்த உணவும்

### குறிஞ்சி நிலத்தின் உணவுமுறைகள்

குறிஞ்சி நிலம் என்பது மலையும் மலைச்சார்ந்த பகுதியாகச் சொல்லப்படுகிறது. இம்மலைப்பகுதியில் வசிப்பவர்கள்

மலைகளிலும் மலையோர பகுதிகளிலும் பல்வேறான திணை நெல்களையும் பலவித காய்க்கனிகளையும் விளைவித்தனர். அவற்றையே உணவாகவும் உட்கொண்டனர். இவைமட்டுமின்றி பிற நிலத்தாரிடையே பண்டமாற்று முறையில் பெற்ற பிற உணவுகளையும் இவர்கள் உண்டனர். அவற்றோடு குறவர்கள் வேட்டையாடிய இறைச்சிகளையும் சேர்த்து உண்டனர் என்பதை அறிந்துகொள்ளலாம்.

குறவர்களில் பலர் காட்டு விலங்குகளை வேட்டையாடி உணவாகக் கொண்டனர். அவற்றுள், மரைமான், கடமான் உள்ளிட்ட இறைச்சி வகைகளைச் சங்ககால மக்கள் உண்டனர் என்பதை அறியலாம்.

*"இரும்புலி துறந்த ஏற்றுமான் உணங்கல்*
*நெறிசெல் வம்பலர் உவந்தர் ஆங்கண்*
*ஒலிகழை நெல்லின் அரிசியோ டோராங்*
*கானிலைப் பள்ளி அளைபெய் தட்ட*
*வாணிணம் உருக்கிய வாஅல் வெண்சோறு*
*புகரரைத் தேக்கின் அகலிலை மாந்தும்"* [25]

மேற்கண்ட இப்பாடலால் புலி விட்டுச்சென்ற இறைச்சியை எடுத்து வந்து அதனுடன் மூங்கில் அரிசியையும், தயிரையும் சேர்த்து செய்த வெண்சோற்றைத் தேக்கிலையில் வைத்துண்டனர் என்பதை அறியமுடிகிறது. இவை போன்றே யானையினை வேட்டையாடி உண்டதை,

*"யொளி றுவாட்டபனைக் கொற்றச் செழியன்*
*வெளிறில் கற்பின் மண்டமர் அடுதொறும்*
*களிறுபெறு வல்சிப் பணென் எறியும்"* [26]

என்ற மேற்கண்ட அடிகள் பகைவருடன் போரிட்டு வெற்றிப் பெற்ற பின் (பாண்டிய மன்னன்) தோல்வியுற்றவர்களின் நாட்டிலிருந்து கொண்டுவந்த யானையினையே கொன்று அதன் இறைச்சியினைப் (புலவர்களோடும் பாணர்களோடும்) பகிர்ந்து உண்டனர் என்பதை அறியமுடிகிறது.

**முல்லை நிலத்தின் உணவுமுறைகள்**

முல்லை நில ஆயர், ஆய்ச்சியர் பிற நிலத்தாரிடையே பண்ட மாற்று முறையில் நெல், தினை போன்றவற்றை வாங்கினார்கள். முல்லை நிலங்களில் வரகு, கேழ்வரகு, அவரை, துவரை போன்றவைகளைப் பயிரிட்டார்கள். இவற்றையே உணவாகவும் உண்டார்கள். அவற்றில் கருந்தினை, சிறுந்தினை, செந்தினை என்பன தினைகளின் வகைகளாகும். இத்தினையைக் கொண்டு சோறு சமைத்தலை தினைச்சோறு என்பர். அத்தகைய தினைச் சோற்றுடன் தயிரைக் கலந்து உண்பதுபோல் பாலைச் சேர்த்து உண்பது பாற்சோறு என்பதை,

***"தேம்பெய்து***
***மணிசெய் மண்டைத் தீம் பால் ஏந்தி***
***ஈனாத் தாயர் மடுப்பவும் உண்ணாள்"*** [27]

என்ற அடிகள் முல்லை நிலத்தார் பாலுடன் சோறு உண்டதை அறியமுடிகிறது. இதனைப் போன்றே முல்லை நிலத்தார் பாலானது தயிராவதும் பின்பு மோர், வெண்ணை, நெய் என அன்றே மாற்றியே உண்டனர் என்ற தமிழர்களின் நுட்பத்தை,

***'உறைஅமை தீம்தயிர் கலக்கி, நுரைதெரிந்து***
***புகர்வாய்க் குழிசி பூஞ்சுமாட்டு இரிஇ,***

*நாள்மோர் மாறும் நல்மா மேனி,*

*..........................................................*

*..........................................................*

*அளைவிலை உணவின் கிளைஉடன் அருத்தி*

*நெய்விலைக் கட்டி”*[28]

என்ற அடிகளின் வழி பாலின்வழி சோற்றைச் சேர்த்து உண்டதை அறியமுடிகிறது. இவைபோன்றே பிறநில பண்டமாற்று இறைச்சி உணவைச் சேர்த்துண்டதை,

*“கணைதிறல்*

*செந்நீ அணங்கி செழுநிணக் கொழுங்குறை*

*மென்தினைப் புன்கம் உதிர்த்த மண்டையொடு*

*இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பி*

*விளைகழை பிழந்த அம்தீம் சோற்றொடு*

*பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கு”*[29]

என்ற பாடல் அடிகளால் நெருப்பில் சுட்ட இறைச்சியுடன் தினைச்சோற்றைப் பாத்திரத்தில் இட்டு அவற்றில் கரும்புச்சாறு, பால், இடித்த அவலையும் சேர்த்து வைத்து உணவாக உண்டனர் என்பதை அறியமுடிகிறது.

**மருத நிலத்தின் உணவுமுறைகள்**

வயலும் வயல் சார்ந்த இடமும் மருத நிலமாகும். இங்கு வாழ்ந்த உழவர் உழத்தியர் என்ற தலை மக்கள் குளம், குட்டை, ஏரி, ஆறு என்ற பலவகை நீர்நிலைகளைப் பயன்படுத்தி விவசாயம் செய்தனர். அதன்வழி உற்பத்தி செய்த நெல், தினை, காய்கனிகள் முதலாக பலவற்றை விளைவித்து அதனை உணவாக உண்டனர்.

**நெய்தல் நிலத்தின் உணவுமுறைகள்**

கடலும் கடல்சார்ந்த நெய்தல் நிலத்தில் பரதவர்கள் வாழ்ந்தனர். இவர்கள் மீன்பிடித்தலையும் உப்பு விளைவித்தலையும் முதன்மைத் தொழில்களாக கொண்டிருந்தவர்கள். அதனால் கடல்சார்ந்த உணவுப் பண்டங்களையே பெருமளவு உண்டனர் எனலாம். மேலும் பிற நிலத்தாரிடையே பண்டமாற்று முறையில் பெற்று வந்த உணவுப் பொருள்களையும் சேர்த்து சமைத்து உண்டனர். இவ்வாறு உண்பதில் தங்களின் நில உணவான மீன் உணவை அதிக அளவில் பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

**'உப்பு நொடை நெல்லின் மூரல் வெண் சோறு**
**ஆயிலை துழ்ந்த அம்புளிச் சொரிந்து**
**கொழுமீன் தடியொடு குடிமகள் கொடுக்கும்"**[30]

என்ற அடிகள் நெய்தல் நிலத்தார் பண்டமாற்று முறையில் உப்பினை விற்றுவாங்கிய நெல்லினால் சமைக்கப்பட்ட வெண்சோற்றுடன் அயிலை மீனை இட்டு சமைத்த புளிக்குழம்பை ஊற்றிச் சாப்பிட்டனர் என்பதை அறியமுடிகிறது.

**பாலை நிலத்தின் உணவுமுறைகள்**

பாலை நிலமானது வறண்ட நிலப்பரப்பை அடிப்படையாகக் கொண்டது. இத்தகைய தமிழக பாலை நிலத்தில் எயினர் எயிற்றியர் என்போர் தலைமக்களாக வாழ்ந்தனர். இவர்கள் வழிப்பறி என்ற திருட்டின்வழி பெறப்பட்ட உணவினை பெருமளவுப் பெற்றனர். ஆயினும் இந்நிலத்தாரான எயினர், எயிற்றியர்கள் புற்றரிசியினைத் தேடி எடுப்பதையும் செய்தனர். அவ்வாறு புற்றுகளின் வலைகளில்

இருந்து எடுக்கப்பட்ட புற்றரிசிகளில் செய்யப்பட்ட உணவினை பாலைநில மக்கள் உண்டனர். அத்தகைய உணவில் புளிக்கறி, புளிக்கூழ், புளிக்குழம்பு என்றெல்லாம் அழைக்கப்படும் புளி சோற்றைப் பாலைநில மக்கள் மகிழ்ந்துண்டனர் என்பதை,

**"ஈயல் பெய் தட்ட இன்புளி வெஞ்சோறு**

**சேதான வெண்ணெய் வெம்புறத்துருக"[31]**

**'எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு"[32]**

என்ற மேற்கண்ட பாடலடிகளால் பாலை நிலத்தில் வாழ்ந்த எயிற்றியர்கள் புல்லரிசிச்சோற்றுடன் ஈசலை இட்டுச் சமைத்ததும் பசுவின் வெண்ணெய்யுடன் சேர்த்து சமைத்து உண்டதை அறியமுடிகிறது. இதனைப் போன்றே,

***'உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி***
***இருநிலக் கரம்பைப் படுநீறு ஆடி***
***நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்"[33]***

என்ற மேற்கண்ட பாடலானது வைரம் பாய்ந்த மரத்தடியில் (எறும்புப் புற்றை) தோண்டி எடுத்த புல்லரிசியினால் செய்த உணவினைத் உண்டதை அறியமுடிகின்றது.

**நிலம் சார்ந்த ஆடை வகைகள்**

மனித சமுதாயத்தில் நாகரீக வளர்ச்சியினால் மனிதன் மரவுரி ஆடை, தோலாடை, இலையுடை, பருத்தி ஆடை, பட்டு என்று பலவித ஆடையினைக் கண்டறிந்தான். இத்தகைய ஆடையினை கண்டறிந்தது ஒவ்வொரு காலமாற்றமும் அறிவு வளர்ச்சியும் இதனுள்

அடங்கும் என்றே கூறலாம். ஆடைகள் நிலத்தின் தன்மைக்கு ஏற்பவே முதலில் கண்டறியப்பட்டு பயன்படுத்தப்பட்டது.

**குறிஞ்சி நிலத்தார் பயன்படுத்திய ஆடைகள்**

குறிஞ்சி நிலமே நாகரிக வளர்ச்சி பெறுவதற்குத் தோற்றுவாயாக இருந்தது என்று கூறலாம். ஏனெனில் விலங்குகளோடு விலங்குபோல மனிதன் அமைதியில்லாமல் பாதுகாப்பு இல்லாமல் இருந்த காலத்தில் இந்த மலைநிலமே காய்கனிகள் தந்து மறைந்துகொள்ள குகை வீட்டையும் மரப்பொந்துகளையும் இயற்கையாகவே தந்தது எனலாம். இங்குள்ள காய்க்கனிகளைச் சாப்பிட்டு அதன் எச்சத்தை வீசியெறிந்து அது விதைத்ததைக் கண்ட பிறகே மருதநிலம் தோன்றியிருக்க வாய்ப்பு வந்திருக்கும். அவ்வகையில் குறிஞ்சி நிலத்தில் ஆதிமனிதர்கள் பழங்குடி மக்கள் வாழ்ந்தார்கள் என்பதை மெய்ப்பிக்கும் விதமாகவே பழங்குடி மக்கள் மலைகளில் இன்றும் வாழ்ந்துவருகிறார்கள் என்பதை பார்க்கலாம்.

**மரவுரி மற்றும் தோலாடை**

ஆதிகாலத்தில் மனிதன் பயன்படுத்திய முதலிரண்டு ஆடைகளில் மரத்தின் பட்டைகளால் செய்யப்பட்ட மரவுரியும் விலங்குகளின் தோலினால் செய்யப்படுகின்ற ஆடையும் முதன்மையானது. மரவுரியும் தோலாடையும் கனமாக இருந்ததன் காரணமாக ஆண்களே இவ்வாடையை அணிந்தார்கள் என இலக்கியத் தகவல்களால் அறியமுடிகின்றது. அத்தகைய மரவுரி ஆடையை,

*'சீரை தைஇய உடுக்கையர்'*[34]

என்ற மேற்கண்ட அடிகள் மரவுரி என்ற மரப்பட்டை ஆடையினைக் காட்டுகிறது.

இறைச்சியை உண்டு மீதமுள்ள தோலை ஆடையாக உடுத்தினர் என்பதை,

*'.......................................... மானின்*

*உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்'*[35]

என்ற மேற்கண்ட மானின் தோலாடையினை அணிந்ததைக் காட்டுகின்றது..

**குறிஞ்சி – முல்லை நில இலையுடை**

காட்டினைச் சார்ந்த பெண்கள் ஆண்களை மயக்குகின்ற அளவிற்கு அழகு பூக்களையும் கொடிகளையும் இணைத்த இலையுடையை அணிந்திருந்தார்கள் என்று திருமுருகாற்றுப்படை வரிகள் கூறுகிறது. இதனை,

*'முடித்த குல்லை, இலையுடை நறும்பூ,*
*செங்கால் மராஅத்த வால்இணர், இடைஇடுபு*
*சுரும்புஉணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை*
*திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ,*
*மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு'*[36]

என்ற மேற்கண்ட அடிகள் பூக்களைக் கொண்ட ஆடைகளைக் காட்டுகிறது.

**பூவாடை**

பூவைப் போன்ற தொழில்வேலைப்பாடுகள் கொண்ட ஆடையினை பெண்கள் அணிந்தார்கள் என்பதை,

***'கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்***

***பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்"*[37]**

***'நோக்கு நுழைகல்லா நுண்மை பூக்கனிந்து***

***அரவுஉரி அன்ன, அறுவை நல்கி"*[38]**

என்ற மேற்கண்ட அடிகள் பூவைப் போன்ற ஆடையைக் காட்டுகிறது.

**மருதநிலப் பருத்தியுடை**

சங்க காலத்தில் கணவனை இழந்த பெண்டிர் நூல் நூற்பர் என்று கூறப்படுகின்றது. இத்தகைய பருத்தி உடை தயாரிப்பினை,

***"துன்னற் கிதாஅர் நீக்கித் தூய***

***கொட்டைக் கரைய பட்டுடை நல்கி"*[39]**

என்ற மேற்கண்ட பாடல் பருத்திக்கொட்டையிலிருந்து நூலெடுத்து அதன் மூலம் நூற்கப்படும் ஆடையினை அறியமுடிகின்றது.

பூவேலைப் பாடுகளால் ஆன உடைகளை உவர்மண்ணில் ஊற வைத்துத் துவைத்துச் சோற்றின் கஞ்சியினைக் கொண்டு உலர்த்தி இரவிலே காயவைக்கும் ஆடை தயாரிப்பு முறை மருத நிலத்தில் இருந்துள்ளது. அதனை,

**"நலத் தகைப் புலத்தி பசை தோய்த் தெடுத்து"[40]**

**“வறனில் புலத்தி யெல்லித் தோய்த்த**

**புகாப் புகர் கொண்ட புன் பூங்கலிங்க மொடு”[41]**

என்ற மேற்கண்ட பாடல் அடிகளால் பூவேலைப்பாட்டுடன் அமைந்த ஆடையினை காணமுடிகின்றது.

**நெய்தல் நில உடை**

நெய்தல் நிலத்தில் கிடைக்கக்கூடிய புன்னை, தாழை, அடும்பமலர், நெய்தல் மலர் போன்ற மலர்களையும் அதன் இலைகளையும் ஆடையாக உடுத்தினர். **நற்றிணை 299** பாடலில் நல்ல ஆடையை அணிந்து கொண்டனர். அதாவது நெருங்கியப் பிணிப்பு அவிழ்ந்த தாழை என்று வடம வண்ணக்கண் பேரிசாத்தனார் கூறுகின்றார்.

வளைந்த கழியருகில் உள்ள அடும்ப மலரினைப் பறித்தும், தாழம்பூவைப் பறிக்குமாறும் இவளைத் தூக்கிப் பிடித்தும் தாழையுடைய தரிக்க வேண்டிய நெய்தல், அத்தளிரையும் சூடவேண்டிய அதன் மலரையும் பறித்துக் கொடுத்தனர். இக்கருத்தை,

**'கொடுங்கழி மருங்கிள் அடும்புமலர் கொய்தும்**

**கைதை தூக்கியும் நெய்தல் குற்றும்'[42]**

என்ற பாடலடிகளால் அறியலாம். நெய்தல் நில தலைவியானவள் தாழையாடை உடுத்தியிருந்தாள். அவள் உடுத்தியிருந்த ஆடை சிதைந்து, சூடியிருந்த மாலை வாடியது என்பதாக,

**'பைந்தழை சிதையகோதை வாட**

**நன்னர் மாலை நெருனை நின்னொடு'[43]**

என்னும் வரிகள் எடுத்துரைக்கின்றன. நற்றிணையில் நெய்தல் திணையாக அமைந்த பாடல்களில் மூன்று பாடல்களில் ஆடை பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. பழந்தமிழ் மக்கள் பலவகையான ஆடைகளை நெய்துள்ளனர். அந்த ஆடைகள் மிகவும் மெல்லியதாக இருந்தன என்பது குறிப்பிடத்தக்கது. இக்கால மக்களைப் போன்றே அரையில் ஆடையும் மேலாடையும் அணிந்திருந்தனர். கடவுள் திருவுருவங்களுக்கு மிக உயர்ரக ஆடைகள் அணிவிக்கப்பட்டன.

காவிரிப்பூம்பட்டினத்துச் செல்வ மகளிர் பகற்காலத்தில் பட்டு ஆடைகளை உடுத்தினர். இராக் காலத்தில் மென்மையான துகிலை அணிந்தனர். அரசமாதேவியர் மார்பில் 'வம்பு' எனும் கச்சினை வலித்துக் கட்டினர்.

**பாலை நில உடை**

***'நிறை பெயல் அறியா குறைத்து ஊண் அல்லில்***
***துவர் செய் ஆடை செம் தொடை மறவர்***
***அதர் பார்த்து அல்கும் அஞ்சுவரு நெறி இடை***
***இறப்ப எண்ணுவர் அவர் எனின் மறுத்தல்'[44]***

என்ற அடிகள் மழையை அறியாத, குறைந்த உணவையுடைய இரவினில் பழுப்பேறிய ஆடையையுடைய, செம்மையாக அம்பினைத் தொடுத்திருக்கும் மறவர்கள் வழியைப் பார்த்து அமர்ந்திருக்கும் அஞ்சத்தக்க பாதையினில் செல்ல எண்ணுகிறார் என்பதை அறியமுடிகிறது.

**வீரர் உடை:**

இரவு நேரக் காவலர்கள் இரவில் நீல நிறக் கச்சையை அணிந்தனர். தொண்டை நாட்டுக் காவலர்கள் ‘படம்’ எனும் சட்டையை அணிந்திருந்தினர். அழுக்கேறிய கந்தலாடையை ‘சிதாஅர்’ என்றனர்.

## நிலமும் வீடு அமைப்பும்

### குறிஞ்சி நில வீடுகள்

குறிஞ்சி நில மக்கள் தினைபுனம் காத்தல் தொழில்களுக்காகவும், விலங்குகளின் தொல்லைகளில் இருந்தும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள வரலாற்றுக்கு முற்பட்ட காலம் முதல் சங்க காலம் வரையிலான குடில்களாக இருந்தது. பரண் அமைப்பு, குகை வீடுகள், மரப்பொந்துகள் என்று கூறலாம். அதாவது பரண் அமைப்பிலான வீட்டில் தினைபுனம் காவல் காக்கும் நோக்கத்தில் உயரமான மரக்கிளைகளில் வீட்டினை அமைத்து அதில் காவல் காத்தனர்.

குகை வீடு மற்றும் மரப்பொந்துகள் என்பது நாகரீகம் வளராத காலத்தில் இயற்கைச் சீற்றங்களில் இருந்தும் வன விலங்குகளில் இருந்தும் மனிதன் தன்னைக் காத்துக்கொள்ள மனிதன் ஏற்படுத்திக் கொண்ட ஒரு மறைவிடமாக இதனைக் கருதலாம். இத்தகைய பரண் வீட்டையும் குகை மற்றும் மரப்பொந்து அடிப்படையிலான வீடுகள் எட்டுத்தொகை நூல்களில் பல இடங்களில் கூறப்படுகின்றன.

**முல்லைநில கோவலர் குடியிருப்பு:**

முல்லை நிலத்தில் வசிப்பவர்களாக கோவலர்கள் இருக்கின்றனர். இவர்கள் காட்டில் கிடைக்கக் கூடிய மரங்களை இணைத்துக்கட்டி தங்களின் வீட்டினை அமைத்து மூங்கில்களால் கதவுகளை அமைத்துக்கொள்வார். மேலும் இவர்களின் படுக்கை ஆட்டுத்தோலைப் படுக்கையாக,

**”குளகு அரை யாத்த குறுங்கால் குரம்பை**
**செற்றை வாயில், செறிகழைக் கதவின்**
**கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்**
**அதளோன் துஞ்சம் காப்பின் உதள**
**நெடுந்தாம்பு தொடுத்த குறுந்தறி முன்றில்**
**கொடுமுகத் துருவையொடு வெள்ளை சேக்கும்**
**இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்”[45]**

என்ற மேற்கண்ட அடிகள் கோவலரின் அழகிய குடியிருப்பைக் காட்டுவதை உணரமுடிகிறது.

**மருதநில உழவரின் வீடு**

அனைத்து நிலங்களிலும் காணப்படுகின்ற வீட்டைக் காட்டிலும் உழவர்களின் வீடு சற்று அழகாகக் காணப்படும். உழவர்களில் சிலர் தங்களின் விளைநிலத்தின் நெற்கதிர்களைக் கொண்டே வைக்கோல் வீட்டை உருவாக்கியிருந்தனர். இத்தகைய அழகிய வீட்டில் உழவர்கள் இருந்ததை,

**'பகட்டு ஆஈன்ற கொடு நடைக் குழூவிக்**
**கவைத்தாம்பு தொடுத்த காழ்ஊன்று அல்குல்**
**ஏணி எய்தா நீள்நெடு மார்பின்**

**முகடுதுமித்து அடுக்கிய பழம்பல் உணவின்**

**குமரி மூத்தகூடு ஓங்கு நல்இல்"46**

என்ற அடிகளில் சில உழவர்களின் அழகிய வீட்டினைக் காணமுடிகின்றது. இதனைப் போன்றே விளை நிலத்தில் உள்ளவையான கரும்பு தழைகளைக் கொண்டு, தென்னை கீற்றிலும், பனை ஓலைகளிலும் அன்றைய நாளில் உழவர்கள் தங்களின் வீட்டைச் செதுக்கினர்.

**மருதநில அந்தணர் குடியிருப்பு**

சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற அந்தணர்களின் வீடானது சாணத்தால் மெழுகிய நிலையிலும் செழுமையான கன்றுகளைக் கட்டிய சிறிய பந்தல் அமைத்து வாழ்வதை,

**'செழுங்கன்று யாத்த சிறுதாள் பந்தர்**

**பைஞ்சேறு மெழுகிய படிவநல் நகர்"47**

என்ற மேற்கண்ட அடிகள் அந்தணர்களின் வீட்டை அடையாளப்படுத்துகின்றது.

**நெய்தல் நில வலைஞர்கள் குடியிருப்பு:**

கடற்கரையைச் சார்ந்த பகுதிகளில் வாழும் வலைஞர்கள் தென்னைக் கீற்று, கரும்புத்தழைகளைக் கொண்டு வீட்டை அமைத்தனர். அக்கூரைகளை தருப்பைப் புல், தாழைநார் கொண்டு கட்டினர். மேலும் வீட்டின் சுவர்களைப் போன்று தாங்கள் பிடித்துவந்த மீன்களை வைத்திருப்பார்கள் என்பதை,

***'வேழம் நிரைத்து வெண்;கோடு விரைஇ***
***தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த***
***குறியிறைக் குரம்பைப் பறியுடை முன்றில்***

*...............................................................*

*....................................................*

***தோள்தாழ் குளத்த கோடு காத்திருக்கும்***

***கொடுமுடி வலைஞா; குடிவயிற் சேப்பின்"[48]***

என்ற மேற்கண்ட அடிகள் கடற்கரைச் சார்ந்த மக்களின் வீட்டைப் படம்பிடித்துக்காட்டுவதை அறியமுடிகிறது.

**நெய்தல்நில மாடமாளிகைகள்**

நெய்தல் நிலத்தில் அரசர்கள் மற்றும் வசதியானவர்கள் மாடம், மாளிகை, அரண்மனை என்ற பல வடிவங்களில் அமைத்தனர் என்பதை,

**'விண்பொர நிவந்த, வேயா மாடத்து"[49]**

என்ற மேற்கண்ட சான்று விண்முட்டுகின்ற அளவில் (அன்றைய நிலையில்) கட்டியிருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

**பாலை நில எயினர் குடிசை:**

பாலை நிலத்தைச் சார்ந்த எயினர்கள் தங்களின் நிலத்திலுள்ள ஈச்சலைக் கீற்றுகளினால் குடிசை வீட்டைக் கட்டினர். இது அணிகல்களும், எலிகளும் உள்ளே செல்லாவாறு இருந்தது. இதனை,

***நீள் அரை இலவத்து அலங்குசினை பயந்த***

***பூளை அம்பசுங்காய் புடை விரிந்தன்ன***

***வரிப்புற அணிலொடு, கருப்பை ஆடாது***

***யாற்று அறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்***

***வேல்தலை அன்ன வைந்நுதி நெடுந்தகர்***

***ஈத்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை***

***மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி"[50]***

என்ற அடிகளால் எயினர்களின் வீட்டின் அமைப்பினையும் மான்தோல் படுக்கையும் காணமுடிகிறது.

**நிலமும் விளையாட்டுகளும்**

**நெய்தல் நில அழகு உலாக்காட்சி**

உலா மகளிரின் அழகை மதிப்பிட்டு, அவர்களது எழிலைப் பேணியவர்களான நடுவர், உலா வந்தவளுக்குப் புள்ளியிட்டு அடுத்தவருக்காகக் காத்திருக்கின்றனர். இங்ஙனம் அண்மையில் நடைபெற்று வருகின்ற எழில் உலாக் காட்சிகள் அமைகின்றன.

சங்ககாலத்தில் மகளிரின் அழகை மகளிரே ஆராய்ந்து மதிப்பிட்டனர் எனக் குறுந்தொகை கூறுகின்றது.

**"கடலங் கானல் ஆயம் ஆய்ந்த என் நலம் இழந்து"[51]**

இப்படி ஆராய்ந்து மதிப்பிடுவதற்கு ஏதுவாக மகளிர் தம்மை ஒப்பனை செய்துகொண்டு ஒய்யாரமாக நடந்து காட்டியிருக்கின்றனர். இச் செய்தியை அகநானூறு வெளிப்படுத்துகின்றது.

***"கானப் பாதிரி கருந் தகட்டு ஒள்வீ***
***வேனில் அதிரலொடு விரைஇக் காண்வரச்***
***சில் ஐங் கூந்தல் அழுத்தி மெல் இணர்த்***
***தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல்***
***இயங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச்***
***சில் மெல் ஒதுக்கமொடு மென்மெல இயலி"[52]***

**குறிஞ்சி சிறுமியர் விளையாட்டு**

சிறுமியர் வெளியிற் சென்று தம் தோழியரோடு விளையாடுவதே அறம். அவ்வாறு விளையாடுவதால் உடலும் உள்ளமும் ஆக்கம் பெறும். மாறாக வீட்டுக்குள் இருந்தால் அது அறமும் இல்லை, ஆக்கமும் தேய்ந்து விடும்' என்ற செய்தி நற்றிணை என்னும் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது.

***"விளையா டாயமொடு ஓரை யாடாது***
***இளையோர் இல்லிடத் திற்செறிந் திருத்தல்***
***அறனும் அன்றே ஆக்கமுந் தேய்ம்மெனக்....."[53]***

என்ற வரிகள் வெற்றியையும் தோல்வியையும் ஒத்த உணர்வோடு நோக்கும் பாங்கு சங்க இலக்கியங்களில் உணரப்படுகின்றது.

**நீராடல்**

வைகை ஆற்றில் நீராடிய மகளிர் இசைக்கருவிகள் முழங்க ஒருவர் தலைமேல் ஒருவர் நின்று உடல் வளைத்து வித்தை காட்டியிருக்கின்றனர். இதைச் 'சென்னியர்' ஆடல் என்கிறது பரிபாடல் (77-80).

**பந்தாட்டம்:**

சங்ககாலத்தில் பெரிதும் விரும்பி விளையாடப்பட்ட விளையாட்டு பந்தாட்டம் ஆகும். பெரும்பாலும் பெண்களே இவ்விளையாட்டை விளையாடினர். இவ்விளையாட்டு வீட்டு முற்றத்திலும், மாடங்களிலும், மணல் மேடுகளிலும் ஆடப்பட்டது. நூலினால் செய்யப்பபட்ட இந்தப் பந்தில் பல வேலைப்பாடுகள் இருந்தன. வானைத் தொடுமளவுக்கு பந்தை எறிந்தனர் என்ற

செய்தியைக் குறிஞ்சிக் கலி (4:22-23, 21;6-7) குறிப்பிடுகிறது. காலால் பந்தை உதைத்து விளையாடினர் என்பதை நற்றினை (324:7-9) சொல்கிறது.

***"தந்தை இடனுடை வரைப்பின்***
***ஆடுபந்து உருட்டுநள் போல ஓடி"[54]***

நீரில் விளையாடப்பட்ட பந்தாட்டத்தை நீர்ப்பந்தாட்டம் என அழைத்திருக்கின்றனர். ஆண்களும் நீச்சல் பந்தாட்டம் ஆடியதை,

***"தலைப் புணைக் கொளினே, தலைப் புணைக் கொள்ளும்;***
***கடைப் புணைக் கொளினே, கடைப் புணைக் கொள்ளும்;***
***புணை கைவிட்டுப் புனலோடு ஒழுகின்,***
***ஆண்டும் வருகுவள் போலும்"[55]***

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

**முல்லைநில ஏறுதழுவல்**

ஏறுதழுவல் அல்லது சல்லிக்கட்டு (ஜல்லிக்கட்டு) என்பது தமிழர்களில் தொன்மைக் குடிகளான ஆயர்களின் மரபுவழிக் குல விளையாட்டுகளில் ஒன்றாகும். ஏறு என்பது காளை மாட்டைக் குறிக்கும். மாட்டை ஓடவிட்டு அதை மனிதர்கள் அடக்குவது, அல்லது கொம்பைப் பிடித்து வீழ்த்துவதான விளையாட்டு.

சங்க இலக்கியங்களில் முல்லைக்கலியில் மட்டுமே முதன்முதலாக ஏறுதழுவுதல் நிகழ்வு குறித்துச்சுட்டப்பட்டுள்ளது. முல்லை நில ஆயர்கள் இந்நிகழ்வில் பங்குகொள்கின்றனர். ஏறுதழுவல் குறித்து முன்னரே பறையின் மூலமாக அறிவிக்கின்றனர். குறிப்பிட்ட நாளில் ஏறுதழுவல் நடைபெறுகின்றது. முல்லை நில ஆடவர்கள் தலைவியின் காதலைப்பெறும் பொருட்டு தன்

வலுவினை வெளிப்படுத்தி காளையினை அடக்கி, அவளை அடைய முயற்சிப்பர்.

*“கொல் ஏற்றுக்கோடு அஞ்சுவானை மறுமையும்*
*புல்லாளே, ஆயமகள்*
*அஞ்சார் கொலைஏறு கொள்பவர் அல்லதை,*
*நெஞ்சிலார் தோய்தற்கு அரிய-உயிர்துறந்து*
*நைவாரே ஆயமகள்”*[56]

*”கொலைமலி சிலைசெறி செயிர்அயர் சினம் சிறந்து,*
*உருத்து எழுந்து ஓடின்று மேல்.*
*எழுந்தது துகள்;*
*ஏற்றனர் மார்பு;*
*கவிழ்ந்தன மருப்பு;*
*கலங்கினர் பலர்;*
*அவருள்,மலர்மலிபுகழ் எழ,*
*அலர்மலி மணிபுரை நிமிர் தோள் பிணைஇ*
*எருத்தோடு இமிலிடைத் தோன்றினன்; தோன்றி,*
*வருந்தினான் மன்ற அவ் ஏறு”*[57]

என்ற மேற்கண்ட அடிகளால் இதனை அறியலாம்.

**மருத நில நீரில் மண் எடுக்கும் ஆட்டம்**

பெண்கள் பலர் சூழ்ந்து நிற்க ஆடவர்கள் தங்கள் வீரத்தை காட்டும் விதமாக நீர்த்துறை அருகே தாழ்ந்த கிளைகளையுடைய மருத மரத்தினின்று ஆழமிக்க கிணற்றுக்குள் பாய்ந்து மூழ்கி அக்கிணற்றின் அடியில் இருக்கும் மணலை எடுத்து அங்கு சூழ்ந்திருந்த பெண்களிடம் தம் வீரத்தைக் காட்டும் விதமாக அம்மணலை நுகர்ந்து காட்டியதாக புறநானூறு பாடலின்

வாயிலாகவே நமக்கு ஆதாரம் கிடைக்கிறது. அவற்றின் தன்மையைப் பற்றியும் அழகுற விளக்குகிறது.

**“இனிநினைந்து இரக்க மாகின்று திணமணல்**
**செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்**
**தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து**
**தழுவுவழித் தழீஇ”[58]**

என்பதன் மூலம் பெண்கள் அக்கிணற்றைச் சுற்றி நின்றுகொண்டு ஆடியதையும் விளக்குகிறது. அதே பாடலில் வேறொரு வரிகளில் மேலும்

**“உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து**
**நீர்நணிப் படிகோடு ஏறிச் சீர்மிகக்**
**கரையவர் மருளத் திரையகம் பிதிர**
**நெடுநீர்க் குட்டத்துத் துடுமென பாய்ந்து**
**குளித்துமணற் கொண்ட கல்லா இளமை**
**அளிதோ தானே”[59]**

என்பதன் மூலமும் மிக உயர்ந்து வளர்ந்த மருத மரத்தின் தாழ்ந்து இருக்கின்ற கிளைகளிலிருந்து சீரிப்பாய்ந்து அதனடியில் உள்ள மணலை எடுத்துக் காட்டினர் என்பது விளங்குகிறது.

'இவ்விழா நீர்விழா, நீராட்டு, நீராட்டணி என்ற பொருளிலும் வழங்கப்படுகிறது. புனலாட்டு என்னும் பெயரையும் தன்னகத்தே கொண்டுள்ளது. ஆற்றங்கரை சார்ந்த பகுதிகளில் வாழும் மக்களெல்லாம் ஆண்டுதோறும் ஆற்றில் புதுவெள்ளம் பாய்கின்றபோது ஒருங்கே கூடுவர் ஒரு பகலில் பெரும்பாலோர் அவ்வெள்ளத்தில் திளைத்து இன்புற்று விளையாடி மகிழ்வார்கள்.”[60]

**“இரும் பொலம் பாண்டில், மணியொடு தெளிர்ப்ப**
**புனல் நயந்து ஆடும் அத்தி அணி நயந்து**
**காவிரி கொண்டு ஒளித்தாங்கும்”[61]**

என்ற வரிகளால் காவிரி ஆற்றில் வெள்ளம் வருகின்ற போது விளையாடியதால் ஆற்றோடு மணி சென்றதை இப்பாடல் காட்டுகிறது.

### நெய்தல் நில விளையாட்டுகள்

#### அலவன் ஓட்டி

அலவன் ஓட்டி என்பது நண்டுகள் பிடித்து விளையாடுவது. இவ்விளையாட்டு சிறுவர் சிறுமியர்களுக்கு மிகுந்த ஆனந்தத்தை ஏற்படுத்தும். இதனால் கடற்கரை மணலைவிட்டு வெளிவரும் நண்டுகளைப் பிடித்து விளையாடுவதும் அதனை ஓடச்செய்து விளையாடுவதும் அலவன் ஓட்டி என்பர். இதனை,

**“திணிமணல் அடைகரை அலவன் ஓட்டி”[62]**

என்ற மேற்கண்ட அடிகள் சிறுவர்கள் கடற்கரை மணலில் உள்ள நண்டுகளை ஓடச்செய்து விளையாடியதை அறியமுடிகின்றது.

#### ஊசல்

ஒரு மரக்கிளைகளில் கயிற்றைக் கட்டி அதில் பஞ்சு மெத்தை போன்று ஏதேனும் ஒன்றை வைத்து அதன்மீது ஒருவர் அல்லது இருவர் அமர்ந்துகொண்டு பின்னால் ஒருவர் கயிற்றைப் பிடித்து தள்ளிவிடுவர். நெய்தல் நிலச் சிறுமியர் சுறாமீன் கொம்பால் செய்த

பலகையினைத் தாழையின் விழுதால் திரித்த கயிற்றில் கட்டி ஊசல் அமைத்து அதில் மகிழ்ச்சியுடன் ஆடினர். இதனை,

**“தாழை வீழ் கயிற்று ஊசல் தூங்கி”[63]**

என்ற மேற்கண்ட பாடலடிகள் ஊசல் விளையாட்டினை ஆடுகின்ற முறையினைக் காட்டுவதை அறியலாம்.

**சிற்றில் விளையாட்டு**

சிற்றில் என்பது சிறிய குடிசை என்பதாகும். சிறுவர், சிறுமியர் விளையாடுகின்ற போது தங்களுக்கான வீட்டை மணலைக் கொண்டு வடிவமிட்டு விளையாடுவதாகும். இத்தகைய விளையாட்டினை,

**“ஊதை ஈட்டிய உயர் மணல் அடைகரை**
**கோதை ஆயமொடு வண்டல் தைஇ**
**ஒரை ஆடினும்”[64]**

என்ற மேற்கண்ட பாடலடிகள் சிற்றில் விளையாட்டினைக் காட்டுகின்றது.

**பாலைநில வல்லாட்டம்:**

வல்லாட்டம் ஒரு முதியோர் விளையாட்டாகும். ஊர்ப் பொதுமன்றத்தில் இதற்கான வல்லப் பலகை இருந்திருக்கின்றது. முதியோர் மிகுந்த கவனத்தோடு ஆடியிருக்கின்றனர். இவ்வல்லாட்டம் போட்டி விளையாட்டாகவும் ஆடப்பட்டிருக்கின்றது.

*"கொழுங் குடி போகிய பெரும் பாழ் மன்றத்து,*
*நரை மூதாளர் அதிர் தலை இறக்கி,*
*கவை மனத்து இருத்தும் வல்லு வனப்பு அழிய,*
*வரி நிறச் சிதலை அரித்தலின்,"*[65]

என்ற மேற்கண்ட அடிகளால் அறியமுடிகின்றது.

**முடிவுரை**

சங்க இலக்கியங்களில் நிலம் பன்முக ஆய்வு என்ற இவ்வியல் நிலம் சார்ந்த பதிவுகளாக நிலம் என்பதன் பொருள், ஐவகை நிலங்கள், நிலங்கள் சார்ந்த தமிழர் வாழ்வியலில் உள்ள பொழுதுகளும் அவற்றின்வழி அறியப்படுகின்ற வாழ்வுமுறையும் அறிய முடிகின்றது. மேலும் நிலத்தின் தனித்தனி உணவு முறை, உடை வகைகள், உறையுள் அமைப்பு, நிலம் சார்ந்த வழிபாடுகள் மற்றும், நிலம்சார்ந்த விளையாட்டுகள் என்று பன்முக நோக்கில் நிலம் சார்ந்த வாழ்வியலை பதிவுச் செய்கின்றன.

**அடிக்குறிப்புகள்**

1. தொல். அகத்.5
2. தொல். அகம். 4
3. காடுகாண் காதை, 64-66.
4. நம்பியகப்பொருள். 5
5. அகத்.1.
6. குறுந் – 263.
7. குறுந். 362.
8. பரி – 3.
9. ஐங்.62.
10. ஐங்.62 : 1,2.
11. கலி 131:1-3.
12. அகம். 345:3-4.
13. பதிற்று.90.
14. பதிற்று.79.
15. புறம்.6.
16. நற்றிணை . 273:1-5
17. திருமுருகாற்றுப்படை: பழமுதிர்ச்சோலை : 227-244.
18. பரி.10.

19. புறம். 229.

20. மலை. 9-10.

21. நற்.58:5-8

22. மதுரை. 590-605.

23. தொல்.பொருள்.அகம்:16.

24. நம்பி.9.

25. அகம், 107:5-11.

26. அகம். 106:10-12.

27. அகம், 105:4-5.

28. பெரும்.158-164.

29. அகம், 237:8-13.

30. அகம். 60:5-7.

31. அகம், 394:5-6.

32. சிறுபாண்.175.

33. பெரும்.92-95.

34. திருமுருகு.126.

35. திருமுருகு.128-129.

36. திருமுருகு.201-205.

37. திருமுருகு.15-16.

38. பொருநர்.82-83.

39. பதிற்று.12.

40. குறுந்.330:1

41. நற்றி.90.

42. நற் – 349:2-3.

43. நற் – 363:7-8.

44. நற். 33;5-8.

45. பெரும்.148-154.

46. பெரும்.243-247.

47. பெரும்.297-298.

48. பெரும்.263-274.

49. பெரும்.348.

50. பெரும்.83-88.

51. குறுந். 245.

52. அகம். 261.

53. நற். 68:1-3.

54. நற்.324-7.

55. குறுந்.222:1-4

56. அ.விஸ்வநாதன், சங்க இலக்கியம் கலித்தொகை, ப.453.

57. அ.விஸ்வநாதன், சங்க இலக்கியம் கலித்தொகை, ப.446.

58. புறம். 243:1-4

59. புறம்.243:6-11

60. த.மலையரசி, தமிழ் இலக்கியங்களில் விளையாட்டுக் கூறுகள், பக்.53.

61. அகம்.376:9-11.

62. அகம்.280:3.

63. அகம்.20:6.

64. அகம்.60:9-11.

65. அகம். 377:6-9.

## இயல் – இரண்டு

## சங்க இலக்கியத்தில் நிலம் சார்ந்த அகத்திணை வாழ்வியல் கூறுகள்

### முன்னுரை

சங்கப் பாடல்கள் காலம் போற்றும் காதல் ஒழுக்கத்தினைப் பகர்வதாகும். அகவாழ்வில் சிறந்து விளங்கிய ஐந்நிலம் சார் வாழ்வின் வழி எக்காலச் சமுதாயத்திற்கும் உரிய வாழ்வியல் சிறப்புக் கூறுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. சங்கப் பாடல்கள் அவ்வகையியல் நிலம்சார் அகவாழ்வியல் கூறுகள் பாடல்சார் வழி உணர்த்தப்பட்டமை வகைப்படுத்தி ஆய்ந்தறிய முனைகிறது இவ்வியல். ஐந்திணைக் காட்டிய அன்பொழுக்கம், இல்லறமாண்பு, களவு, காதல், கற்பு, வாழ்வொழுக்க முறை, தலைவன், தலைவி, பண்பமைப்பு முறை, பெண், தாய், உழைப்பின் சிறப்பு என்பன அகவாழ்வியல் கூறுகளாக ஆய்ந்தறியப்படுகின்றன.

அகத்திணையின் பாடுபொருள்களுள் அன்பொழுக்கமும் எழுதிணையும் தலையாகக் கூறாகக் காதல் உணர்வு இருந்துள்ளது. இவ்வுணர்வு உள்ளத்தோடு உள்ளம் ஒன்றியதின் விளைவால் தோன்றுகிறது. இவ்வுணர்வின் அடிப்படையில் அக ஒழுக்கங்களைத் தொல்காப்பியர்,

**‘‘கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப”[1]**

என்று ஏழு திணைகளாக வகுத்துள்ளார். அவை, கைக்கிளை, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், பெருந்திணை

என்பனவாம். இவ்வெழுதிணையைக் கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்று ஒழுக்கத்தின் அடிப்படையில் மூன்றாக வகுத்துக் காட்டினர். தொல்காப்பியர் கைக்கிளை, பெருந்திணைக்கட்கு (53, 54) இரண்டு நூற்பாக்களில் திணையின் காதற்செய்கையினைக் கூறியுள்ளாரே தவிர, திணைக்கான இலக்கணத்தைக் கூறவில்லை. அதேபோல், ஐந்திணைக்கும் துறைகளில் திணைக்கான காதற்செய்கையினை வகுத்துக் காட்டினாரே அன்றி, இலக்கணம் கூறவில்லை.

**அகப்பொருள் தரும் விளக்கம்**

தொல்காப்பியத்துக்குப் பின்தோன்றிய அகப்பொருள் விளக்கமே கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்பவற்றிற்குப் பின்வருமாறு இலக்கணம் கூறுகிறது.

**“கைக்கிளை உடையது ஒருதலைக் காமம்”**[2]

**“ஐந்திணை உடையது அன்புடைக் காமம்”**[3]

**“பெருந்திணை என்பது பொருந்தாக் காமம்”**[4]

ஒருதலை, அன்புடை, பொருந்தா என்ற அடைமொழிகளில் திணைகளின் காமத்தன்மையையும், திணைக்கான வேறுபாட்டையும் மொழிகிறார் நாற்கவிராச நம்பி.

கைக்கிளை என்பது சிறிய உறவா? இழிந்த உறவா? என்பதில் கருத்து வேறுபாடும் ஐயப்பாடும் உண்டு. இளம்பூரணர்உரை கூறும் போது ‘பெருமையில்லா தலைமக்கள் உறவு’ என்கிறார். இப்பகுதிக்கு உரைகூறும் நச்சினார்க்கினியர் ‘ஒருமருங்கு பற்றிய கேண்மை’

என்பார். இதற்கு வ. சுப. மாணிக்கனார், கைக்கிளை என்னும் குறியீடானது இருபாலர்க்கும் பொதுவானது. அவ்வாறு பொதுவாயினும், இளையவன் காதலைக் கூறுவதே இலக்கணமாகும் என்கிறார். இதனையே, தொல்காப்பியர் “சொல்லெதிர்பெறாஅன்” என்கிறார். இப்பகுதிக்கு உரை கூறும் கி. இராசா ‘தன்னையும் அவளையும் இணைத்துப் பேசி அவளிடமிருந்து மறுமொழி பெறாதப் போதும் தானே சொல்லி மகிழ்வது’ என்பார். எனவே, சிறிய உறவு முறையினைக் கொண்டது கைக்கிளையென்று தெளிவாகிறது. ஆனால், கைக்கிளை என்பது இழிந்த உறவா? என்பதற்கு இல்லையென்று வ. சுப. மாணிக்கனாரின் விளக்கம் தெளிவுபடுத்துகிறது.

**காதல் நுதலும் ஐந்திணை**

ஐந்திணை என்பது உள்ளப் புணர்ச்சியும் உடற் புணர்ச்சியும் இரண்டறக் கலந்த ஓருயிர்ப் புணர்ச்சியாகும். வ. சுப. மாணிக்கனார், ஐந்திணையாவது புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்ற காமம் நுதலுகிற காமவினைகளைக் கொண்டவை என்கிறார்.

பெருந்திணை என்பதற்கு ஒரு சாரார் வலிந்த காமம் என்றும், மற்றொரு சாரார் ஒவ்வா காமம் என்றும் கருதினர். இருசாரார் கருத்திலும் மாறுபாடு காணப்படுகிறது. இருசாராரின் கருத்தும் தவறானது என்றுக் கூறிய வ. சுப. மாணிக்கனார், தலைவனின் மிகு செயல்களையே பெருந்திணை என்கிறார். உதாரணமாக, காதலியைத் தன் பெருமுயற்சியால் இல்லக்கிழத்தியாக ஆக்குதல்,

காதற்றொடர்பை மடலேறி ஊருக்கு அறிவித்தல் போன்ற தலைவனின் மிகுச் செயல்களைத்தான் பெருந்திணை என்கிறார்.

**அகத்திணைக் குறிக்கோள்**

களவொழுக்கமானது இருவருள்ளத்தும் உள்நின்று தோன்றிய அன்பின் பெருக்கத்தால், 'தான், அவள்' என்ற வேற்றுமை ஏதுமின்றி, இருவரும் ஒருவரேயென ஒழுகுவதே உள்ளப்புணர்ச்சியாகும். இக்களவொழுக்கம் எதிர்பார்த்து நிகழக்கூடியது அல்ல. எதிர்பாராவிதமாக நிகழும் நிகழ்வாகும். இதனை இறையனார் களவியலில்,

**"அதுவே,**
**தானே அவளே தமியர்கரணக்**
**காமம் புணர்ச்சி இருவயின் ஒத்தல்"[5]**

என்று குறிப்பிடுகிறார்.

உள்ளப் புணர்ச்சி நிகழ்ந்த பின்னர் ஒருவரையொருவர் இன்றியமையாதொழுகும் உயிரோரன்ன செயிர்தீர்நட்பே நிலைபெற்று வளர்வதாகும். பின்னர், ஒருவரையொருவர் பிரிவின்றியொழுகும் அன்பின் தூண்டுதலால் உலகறிய மணம் செய்து வாழுகிற கற்பென்னும் நிலையினை அடைவர். இதனை மேலும் உறுதிபடுத்தும் வகையில், **"உயிர்ஓரன்ன செயிர்தீர்நட்பின்"** (நற்.72) என்னும் தொடருக்கு, "நாம் இருவரும் ஓருயிர்ஈருடலாய் இருந்ததால் நினக்கு ஒன்றை மறைத்தல் குற்றமாகும்' என்று உரை கூறுவார்"[6] வ. த. இராமசுப்பிரமணியம்.

**“ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பால தாணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோ னாயினுங் கடிவரை இன்றே”[7]**

ஒன்றுபடுதல், வேறுபடுதல் என்னும் இருதிறத்தினை (நல்வினை, தீவினை) உடைய ஊழால் (முன்வினைப் பயன்) இருவரையும் ஊக்குவிக்கின்ற நல்வினையால் தமக்குள் ஒத்த கூறுபாடுகளையுடையத் தலைவனும் தலைவியும் காண்பதே களவாகும். இவர்களுள் தலைவியைக் காட்டிலும் தலைவன் தகுதி மேம்பட்டவன் எனினும் தவிர்தல் இல்லை என்கிறார் தொல்காப்பிய உரையாசிரியர் கி. இராசா. பாலது ஆணை - எத்தனையோ பேரைப் பார்க்கும் போது தோன்றாத காதல் உணர்வு ஒருவரைப் பார்க்கும் போது மட்டும் தோன்றுவதை பாலின் பொருட்டு அல்லது கடவுளின் செயல் அல்லது விதியின் ஆணையால் நிகழ்வதாக அகப்பொருள் கூறுகிறது.

**ஒத்த அன்பும் ஒருமித்தலும்**

ஒத்த என்னும் சொல்லானது, ஒப்புமையுடைய (பிறப்பு, ஆளுமை, ஆண்டு, வனப்பு, அன்பு, அடக்கம், அருள், உணர்வு, வளம்) என்ற பொருளில் எடுத்தாளப்பட்டிருப்பினும், ‘மிக்கோனாயினும் கடிவரை யின்றே’ என்பதன் மூலம் தலைவன் தலைவியின் மேற்கூறிய ஒத்த நிலைகளிலிருந்து தகுதி மேம்பட்டவனாக இருப்பினும், அவனைத் தவிர்க்கும் உரிமை தலைவிக்குக் கிடையாது என்பது தெள்ளத்தெளிவாகப் புலனாகிறது.

**இயற்கைப் புணர்ச்சியும் உள்ள இசைவும்**

ஒத்த தலைவன் தலைவி எதிர்பட்ட வழி தம்முள் வேறு எந்த நினைப்பும் இல்லாது தம் நிலை மறந்து இணைவதை பண்டைத்தமிழர் ‘இயற்கைப் புணர்ச்சி’ என்றனர்.

ஊழ்வினை கூட்ட இருவர் தம் உள்ளங்களும் இசைவுபடுதலால் அது இயற்கைப் புணர்ச்சியாயிற்று. அவ்வகையில் கபிலர் பாடலில் இயற்கைப் புணர்ச்சித் துறையில் அமைந்த குறிப்புகளைக் காணலாம்.

குறுந்தொகை 142 -ஆம் பாடல் இயற்கைப் புணர்ச்சித் துறையில் அமைந்த பாடலாகும். குறிஞ்சி நிலத்திற்கேற்ற புணர்ச்சி நிகழுதல் தலைவன் தலைவி இசைபடுதல் அறியமுடிகிறது. தலைவியை ஊழின் வசத்தால் காணப்பெற்ற தலைவன் அவளுடன் பேசிவிட்டு நீங்கும் போது தன் உள்ளம் இன்னும் தலைவியிடம்தான் உள்ளது எனவும், இதனைத் தலைவி அறிந்தாளோ இல்லையோ எனத் தன் நெஞ்சிற்குச் சொல்லியதாய் துறைக் குறிப்பு காணப்படுகின்றது.

**“பள்ளியானையின்உயிர்த்தென்**

**உள்ளம்பின்னுந்தன்னுழையதுவே”[8]**

என்பதில் உள்ளத்துக்கு உயிர்த்தல் இல்லை எனினும், நெஞ்சொடு புணர்ந்து உரைக்கும் மரபுப் பற்றி இவ்வாறு உரைத்தார்.

**பாங்கற் கூட்டம் வாயிலாடும்**

தன் அன்புக்குரிய காதற்கிழத்தியை மீண்டும் காண்பதற்கு வாயிலாகும்படி தலைவன் தன் பாங்கனிடம் கூறுதல் 'பாங்கற் கூட்டம்' எனப்படுகின்றது.

**"மால்வரைஇழிதருந்தூவெள்ளருவி**
**கன்முகைத்ததும்பும்பன்மலர்ச்சாரல்**
**சிறுகுடிக்குறவன்பெருந்தோட்குறுமகள்**
**நீரோரன்னசாயல்**
**தீயோரன்னவென்னுரனவித்தன்றே "[9]**

எனும் இப்பாடல் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கிய தலைவன் தலைவியைப் பிரிந்த பின் தன் வேறுபாடுகள் கண்டு வினவிய பாங்கனுக்கு, குறமகள் மேல் தான் கொண்ட காதலே அதற்குக் காரணம் என்பான்.

**பாங்கியற் கூட்டம் வேண்டுதல் இயல்புடன்**

தன் தலைவியை அடிக்கடி காண்பதற்கு உதவி புரியுமாறு தலைவன் தோழியிடம் சென்று வேண்டிக் கொள்வது 'பாங்கியற் கூட்டம்' எனப்படும். குறுந்தொகையின் 13 ஆவது பாடல் தோழியை முன்னிட்டுக் கூடியதாகக் காட்டலாம். இதனை,

**"மாசறக் கழீஇய யானை போலப்**
**பெரும்பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகற்**
**பைதல் ஒருதலைச் சேக்கும் நாடன்**
**நோய்தந் தனனே தோழி**
**பசலை ஆர்ந்தன குவளையங் கண்ணே".(குறுந்.13:1-5)**

தலைவனோடு கூடி மகிழ்ந்திருந்த தலைவி, சிலநாட்களாகத் தலைவனைக் காணாததால் வருந்துகிறாள். குவளை மலர் போன்ற அவளுடைய அழகிய கண்கள் இப்பொழுது பசலை நோயுற்று ஒளி இழந்து காணப்படுகின்றன. தன் நிலையைத் தன் தோழியிடம் தலைவி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இதனைப் போன்றே 142 ஆவது பாடல் தோழியிடம் குறையிரந்து வேண்டியதாகத் துறைக்குறிப்பு உள்ளது.

**பகல் இரவுக் குறிகள்**

தோழி மூலமாகத் தலைவியைப் பகற்காலத்திலும் இரவுக்காலத்திலும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் கண்டுத் திளைக்க சம்மதம் பெற்றுக் கூடுதல் ‘பகற்குறி இரவுக்குறி’ என்ற பெயர் பெற்றன.

குறுந்தொகையின் 198 ஆவது பாடலில் ‘யாம்இயவிற்சேறும்’ என்று தோழிக் கூறியது தலைவனையும் அவ்விடத்தே வருமாறு பொருள் தந்தது.

**இரவுக்குறி**

இரவுக்குறியில் அமைந்த துறைகளையேப் பெரிதும் விரும்பிப் பாடியுள்ளார். இரவுக்காலத்தில் காதலியை ஒரு இடத்தில் சந்தித்துப் பேசி மகிழ்வது ‘இரவுக்குறி’ எனப்படுகின்றது.

**“காமமொழிவதாயினும்யாமத்துக்**
**கருவிமாமழைவீழ்ந்தெனஅருவி**
**விடரகத்தியம்பும்நாடவெம்**
**தொடர்பும்தேயுமோநின்வயினானே”**[10]

இப்பாடல் பகல்குறி நீக்கி, இரவுக்குறி வேண்டிய தலைவனுக்கு தோழி நேர்ந்த வாய்ப்பாட்டான் மறுத்தது என்ற துறைக்குறிப்பு காணப்படுகின்றது.

**அல்ல குறிப்படுதல்**

தலைவன் செய்த குறி இயற்கையாக நிகழ்ந்து தலைவி அல்ல குறிப்படும் நிலைமையும் கபிலர் பாடல்களில் காணமுடிகின்றது. குறுந்தொகையின் 121 ஆம்பாடலை இத்துறையில் அமைந்ததற்குச் சான்று காட்டலாம்.

**மெய்யே வாழி தோழி சாரல்**
**மைபட் டன்ன மாமுக முசுக்கலை**
**ஆற்றப் பாயாத் தப்பல் ஏற்ற**
**கோட்டொடு போகி யாங்கு நாடன்**
**தான்குறி வாயாத் தப்பற்குத்**
**தாம்பசந் தனஎன் தடமென் தோளே.“**[11]

என்ற மேற்கண்ட அடிகள் மலைப்பக்கத்தில் மைப்பட்டாற் போன்ற கரிய முகத்தையுடைய ஆண்குரங்கு கொம்பு தாங்கும்படி பாயாத தவற்றினது பயன் அக்குரங்கை ஏற்றுக்கொண்டு முறிந்த அக் கொம்பினிடத்துச் சென்றாற் போல தலைவன் குறிப்பை வாய்ப்பச் செய்யாத தவற்றின் பொருட்டு என்னுடைய பரந்த மெல்லிய தோள்கள் பசலையை அடைந்தன என்று கூறுவதை அறிய முடிகிறது.

**வரைவிடை வைத்துப் பிரிதல்**

பகற்குறி இரவுக் குறிகளில் தலைவியைப் பெற்று மகிழ முடியாத தலைவன் வரைவிடை வைத்துப் பிரிதலை மேற்கொள்வான். தலைவியின் அருமையை உணர்ந்த பின்னரே

இச்செயலைப் புரிவான். குறுந்தொகையின் 106 ஆவது பாடல் வரை விடை வைத்துப் பிரிந்ததலை மகன் தூது கண்ட தலைவி தூதை ஏற்றுவாயில் நேர்ந்ததைக் கூறுவதாகும்.

**புல்வீழ் இற்றிக் கல்லிவர் வெள்வேர்**
**வரையிழி அருவியின் தோன்றும் நாடன்**
**தீதில் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்**
**வந்தன்று வாழி தோழி நாமும்**
**நெய்பெய் தீயின் எதிர்கொண்டு**
**தான்மணந் தனையமென விடுகந் தூதே.**[12]

என்ற மேற்கண்ட அடிகள் மலைப்பக்கத்தில் வீழ்கின்ற அருவியைப்போலத் தோன்றும் நாட்டையுடைய தலைவன் குற்றமற்ற நெஞ்சினால் நினைந்துக் கூறிய சொற்களை உரைக்கும் தூது நம்மிடத்து வந்தது; நாமும் நெய்யைப் பெய்த தீயைப்போல அத்தூதை ஏற்றுக்கொண்டு அவன் என்னை மணந்த காலத்தில் இருந்த அன்புடைய நிலையினேம் என்று கூறி தூதுவிடுவேம் என்பதை அறியமுடிகிறது.

**வரைவு நீடல்**

வரைவு நீடல் துறையில் கபிலர் பல பாடல்களைப் பாடியுள்ளார். வரைவு நீட்டித்தலில் தலைவனே அதிகம் பங்கு கொள்கிறான். இதனால் தலைவி பெரிதும் துன்பப்படுவாள். 25 ஆவது பாடலில், தனக்கும் தலைவனுக்கும் ஏற்பட்ட களவு மணத்தை அறிவார் யாரும் இல்லாத போது,

**“யாருமில்லைத்தானேகள்வன்**
**தானதுபொய்ப்பின்யானெவன்செய்கோ”**[13]

என்ற கபிலர் பாடல்வழி தலைவனாகவே வரைந்து கொள்ள வேண்டியது போல் வருகின்றது.

**மகிழ மீண்டு வருதல்**

வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவன் மீண்டு வருவதாக ஒரே ஒரு பாடல் செய்துள்ளார். அவன் வரவுணர்ந்த தலைவி "அன்புடையவர்கள் செய்யும் துன்பம் தேவருலக இன்பத்தைக் காட்டிலும் சிறந்தது" என்று கூறுகிறாள்.

**உடன்போக்கு**

உடன்போக்குத் துறையில் ஒரே ஒரு பாடலைச் செய்துள்ளார். குறுந்தொகையின் 115 ஆவதுபாடல் உடன்போக்கு ஒருப்படுத்து மீளும் தோழி தலைவிக்குக் கூறியதாகத் துறைக்குறிப்பு உள்ளது. தலைவிக்குத் தலைவன் பால் உள்ள அன்பை வெளிப்படுத்திய தோழியின் கூற்றாக அமைகின்றது.

**வரைவும் நிகழ்வும்**

வரை பொருளுக்காகச் சென்ற தலைவன் நல்லமுறையில் பொருளீட்டி வந்தான். முதியோர்கள் முன்னின்று வரைவினை மேற்கொள்வான். 361 ஆம் பாடலில் வரைவிற்குரிய நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. தலைவி பிரிவை ஆற்றியிருந்ததைத் தோழி பாராட்டுகிறாள்.

தலைவன் தலைவி இருவரிடையே நிகழும் களவொழுக்கமானது காம உணர்வுகளை வெளிப்படுத்தத் தூண்டும். இதனைத் தொல்காப்பியர்,

**“வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்**
**ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்**
**நோக்குவ எல்லாம் அவையே போறல்**
**மறத்தல் மயக்கஞ் சாக்காடு என்றிச்**
**சிறப்புடை மரபினவை களவென மொழிப”[14]**

ஆகிய ஒன்பதும் களவொழுக்கத்துக்குரிய சிறந்த உணர்வு நிலைகளாகச் சுட்டுவார். இவ்வுணர்வு நிலைகள் தலைமகட்கும், தலைமகற்கும் ஒக்கும் என்பார் இளம்பூரணர். இதில் நோக்குவ எல்லாம் அவையே போறல், சாக்காடு (இறப்பதற்கு இணையான துன்பநிலை) என்ற இருநிலைகள் காம உணர்வின் உச்சக்கட்ட நிலையினைக் காட்டுவதாக உள்ளன.

காம உணர்வானது இருவரிடத்தும் மேலோங்கிக் காணப்பட்டாலும், அக்காம உணர்வினை வெளிப்படுத்தும் முறை தலைவிக்கு இல்லை என்பார் தொல்காப்பியர். இதனை,

**“தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்**
**எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லை”[15]**

தலைவி தனது காதல் வேட்கையினைத் தலைவனுக்கு முற்கிளத்தல் இல்லை என்கிறார். மிகுந்த துன்பம் தரக்கூடிய காமத்தினை தலைவி தலைவனிடம் சொல்லும் முறைமை இல்லை என்பதனை,

**“நோய் அலைக் கலங்கிய மதன்அழி பொழுதில்**
**காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்**
**யானென் பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்கிக்**
**கைவல் கம்மியன் கவின்பெறக் கழாஅ**
**மண்ணாப் பசுமுத்து ஏய்ப்பக் குவிஇணர்”[16]**

என்னும் பாடல் தலைவியின் கூற்றில் அமைந்தது. இப்பாடலுக்கு உரை கூறும் எச். வேங்கடராமன், 'அன்புடன் வந்து அருகிலிருந்து அன்பான இனிய உரைகளைக் கூறி ஆற்றுவித்தல், ஆண் மகனுக்குரிய சிறந்த பண்பாகும். தலைவி என்பவள் தன்னுடைய பெண்மையால் தூய்மை செய்யாத பசியமுத்து தனது நிறைந்த ஒளியை மறைத்துக் காட்டினாற்போல, துன்பம் தரக்கூடிய காமத்தை மறைத்துக் கொள்வாள்' என்கிறார். இது போன்ற செயல்கள் அகத்திணையின் குறிக்கோளை எடுத்துக்காட்டுகின்றன.

**நிலம்சார் இல்லற மாண்பு:**

சங்க கால மக்கள் இல்லறத்தை நல்லறமாகப் போற்றிப் பேணி வளர்த்தமையை பல்வேறு பாடல்கள் மூலம் உணரமுடிகிறது. புதிதாகத் திருமணம் புரிந்த தலைவனும், தலைவியும் இல்லற வாழ்வை இனிதே துவக்குகிறார்கள். தலைவி செல்வர் வீட்டில் பிறந்து செழிப்புடன் வளர்ந்தவள். சமைத்தறியாதவள் இருப்பினும் தன் கையால் தலைவனுக்கு சமைத்துத் தர ஆவல் கொண்டாள். அதன் பொருட்டு தயிர்க் குழம்பைத் தயார் செய்கிறாள். தோய்ந்த கட்டித் தயிரைக் கையாற் பிசைந்து கையைக் கழுவாமல் அப்படியே தன் தூய ஆடையில் துடைத்துக் கொண்டாள்.

குழம்பைத் தாளிக்கும் போது ஏற்பட்ட புகை அவளது மையுண்ட கண்களை கலங்கச் செய்தது. இவ்வாறு அவள் அன்புடன் செய்த குழம்பைக் கணவனுக்கு இட்டாள். அவன் அது மிகவும் இனிதாக உள்ளதாகப் பாராட்டி மகிழ்ந்து உண்கிறான் அவள் முகம் மகிழ்ச்சியால் மலர்கிறது.

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅது உடீ,**
**குவளை உன்கண் குய்ப்புகை கமழக்**
**தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவன் உண்டலின்**
**நுண்ணிதன் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"**[17]

இந்நிகழ்வின் மூலம் இல்லாள் செய்த உணவின் தன்மை எத்தகையதாயினும் அவள் அன்புடன் செய்ததால் அதனை இனிது என்று பாராட்டி மகிழும் தலைவனின் மனப்பாங்கையும் நற்பண்பையும் உணரமுடிகிறது. தலைவன் தலைவியின் அன்பு நிலை, பண்புநிலை ஆகியவை அகம்சார்ந்த வாழ்வியல் கூறுகளை உணர்த்துவதாக அமைகிறது.

கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் எவ்வாறு அன்பு பூண்டு ஒழுக வேண்டும் என்ற நற்கருத்தை வலியுறுத்துவதாக இப்பாடல் அமைகிறது.

**விருந்தோம்பல்**

நம் இல்லம் நாடி வரும் விருந்தினர்களை அன்புடன் வரவேற்று உபசரிப்பது தமிழர் பண்பாடாகும் அவர்கள் அகம் மகிழ மனமுவந்து அமுது படைப்பதை கடமையாகப் போற்றினர். நெய்யோடு வெண்ணெய் அரிசியால் சமைத்த வெம்மையான சோற்றையும் ஏழு கலங்களில் இட்டு காக்கைக்கு வைப்பர். தலைவியின் துன்பத்தை நீக்க விருந்தினர் வருமாறு காக்கைக்கு உணவு வைத்தல் பழங்கால மரபாகும். அவ்வழக்கம் இன்றளவிலும் நடைமுறையில் உள்ளது.

**“எழுகலத்து ஏந்தினும் சிறிது – என் தோழி**
**பெருந்தோள் நெகிழ்ந்த செல்லற்கு**
**விரந்து வரக் கரைந்த காக்கையது பலியே”**[18]

எனும் பாடலால் விளங்குகிறது.

**குடும்பப் பொறுப்பு**

இல்லறத்தை நடத்தும் பெரும் பொறுப்பு கணவனுக்கு வாழ்க்கைத் துணையாக நிற்கும் மனைவியிடம் இருந்தது. மனையின் கண் இருந்து மனையறம் நிகழ்த்தும் உரிமையுடையவள் மனைவி. மனை வாழ்க்கைக்குப் பாலிவினைத் தரும் மனைவியை,

**“மனைக்கு விளக்காகிய வாணுதல்”**[19]

என்று புறநானூற்றுப் புலவர் ஐயூர் முடவனார் பாராட்டுகிறார். இத்தகைய குடும்ப விளக்காகவும், இல்லத்தை ஆள்பவளாகவும் மனைவி இருப்பதால் ‘இல்லாள்’ என்றும் போற்றப்பட்டாள். கற்பொழுக்கத்தில் வாழும் பெண்ணின் பொறுப்பினை,

**“கற்பும் காமமும், நற்பால் ஒழுக்கமும்,**

**மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்**

**விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்**

**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்”**[20]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. அன்பின் ஐந்திணைண ஒழுக்கத்தில் பெண்ணுக்குரிய மாண்புகள் என்றே சிறப்பித்து ஒழுகப்பட்ட இல்லறப் பொறுப்புகளும் பண்புகளும் பொலிந்து அகவாழ்வின் தன்மையைச் சிறப்பிப்பதை ஆய்ந்தறியப்படுகிறது.

இதில் 'விருந்து' என்பது முன்பின் அறியாத புதியவர்கள் என்பதும், 'சுற்றம்' என்பது தன்னைச் சூழ்ந்திருப்பவர்கள் என்று அகராதிகளும் இலக்கண ஆசிரியர்களும் குறிப்பிடுகின்றனர். இல்லறம் இனிது நடைபெறுவதற்கு வேண்டிய செல்வத்தைச் சேர்ப்பது கணவனின் பொறுப்பாக இருந்தது. கணவனை இழந்தோர் பருத்திப் பஞ்சினை நூலாக நூற்றுத் தம் குடும்பத்தைப் பாதுகாத்தனர். இவர்கள் "பருத்தி பெண்டிர்" (புறம்.326) என்ற பெயரால் தமிழிலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றனர்.

கார்காலத் தொடக்கத்தில் குளிர்காற்று வீசும் வேளையில் பிச்சை கேட்டு வந்தவர்களுக்கு வெண்சோற்றுடன் செம்பு நிறைய வெந்நீரைத் தந்து உபசரித்துள்ளதை அறிய முடிகிறது.

**"ஆசில் தெருவில் நாயில் வியன்கடைச்**
**செந்நெல் அமலை வெண்மை வெள்ளிழுது**
**ஓரிற் பிச்சை ஆர மாந்தி**
**அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்**
**சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே**
**மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை**
**எக்கால் வருவ தென்றி**
**அக்கால் வருவரெங் காத லோரே."**[21]

என்று ஓரிற் பிச்சையார் பாடல் மூலம் அறியமுடிகிறது. இக்காட்சியின் மூலம் வறிய ஒருவருக்கு இனிய அமுது தந்ததுடன் குளிர் நீங்கும் பொருட்டு வெந்நீர் பருகத் தந்துள்ள்மால் விருந்தினர்களை எங்ஙனம் உபசரிக்க வேண்டும் என்பதை நமக்குப் புலப்படுவதாக அமைகிறது.

**முன்னோர் செல்வம் – பற்றின்மை**

பொருள்வழிப் பிரிவைப் போற்றும் தலைவி தலைவன் முன்னோர் ஈட்டித் தொகுத்த செல்வத்தை எதிர்பாராமல் தாமே ஈட்டித்தர விழைய விரும்புகிறாள். முன்னோர்கள் சேர்த்து வைத்த செல்வத்தைக் கொண்டு செலவு செய்பவர்களைச் சாடுகிறது. தம் முன்னோர்களின் செல்வத்தை வைத்திருப்பவர்கள் செல்வந்தர்கள் என்று கருதமாட்டார்கள் தாமாக ஈட்டித் தொகுத்த செல்வத்தை இல்லாதவரது வாழ்க்கையானது வளமுடையதாக இருப்பினும் பிறரிடம் பொருள் வேண்டி இரத்தலைக்காட்டினும் இழிவுடையதாகும் என்று தோழிக்கு தலைவி உரைப்பதாக கீழ்காணும் பாடல் அமைகிறது.

**"உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்**
**இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவெனச்**
**சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்**
**சென்றனர் வாழி தோழி யென்றும்**
**கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்**
**ஆற்றிருந் தல்கி வழங்குநர்ச் செகுத்த**
**படுமுடை பருந்துபார்த் திருக்கும்**
**நெடுமூ திடைய நீரில் ஆறே."**[22]

தோழி! தம்முடைய முன்னோரால் தேடி வைக்கப் பெற்றுத் தம்பால் உளதாகிய செல்வத்தைச் செலவழிப்போர் செல்வர் என்று உலகத்தாரால் சொல்லப்படார் தாமாக ஈட்டிய பொருள் இல்லாதார் முந்தையோர் பொருளின் பயனைத் துய்த்து வாழ்தல் இரத்தலைக் காட்டினும் இழிவு உடையது என்று சொன்ன ஆண்மைத் தன்மையை யாம் தெளியும்படி எடுத்துக் கூறி எப்பொழுதும் கூற்றுவனைப்

போன்ற கொலைத் தொழிலைச் செய்யும் வேலை உடைய மறச் சாதியார் வழியின் இடத்தே தங்கி வழிப் போவாரைக் கொன்றதனால் உண்டான புலாலை பருந்துகள் எதிர்நோக்கித் தங்கி இருக்கின்ற நெடிய பழைய இடத்தை உடையனவாகிய நீர் இல்லாத பாலை நிலத்து வழிகளிலே தலைவர் சென்றார். எனவே ஒவ்வொரு தலை மகனும் தானே முயன்று செல்வம் ஈட்டி வாழ்தல் மிகவும் அவசியமான பண்பாக குறுந்தொகை சுட்டுகிறது.

**வினையே ஆண்களுக்கு அணிகலன் எனப் போற்றல்**

வினையின்கண் தலைவியைப் பிரிந்து செல்ல தலைவன் முற்படுகிறான். இதனை அறிந்த தலைவி வருந்தி உடல் மெலிவுற்றாள். அவளைத் தேற்றும் நோக்கில் தோழி

**“வினையே ஆடவர்க்கு உயிரே வாள்ளுதல்**
**மனை உறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என**
**நமக்கு உரைத்தோரும் தாமே**
**அழா அல் - தோழி! அழுங்குபர் செலவே“[23]**

பொருள் தேடிச் செல்லுதல் என்பது ஆண்களுக்கு உயிரைப்போன்றது. அவர்தம் இல்லக் கிழத்தியாகப் போகும் நீயும் அவருக்கு உயிர்போன்றவள். எனவே நீ வருத்தத்துடன் வாடி நின்றாள் அவர் வினையின்கண் செல்லும் எண்ணத்தைக் கைவிட்டு விடுவார். ஆதலால் நீ வருந்தி அழுவதைக் கை விடுவாயாக. அவர் வினையை வெற்றியுடன் முடித்துத் திரும்புவான் என்று கூறுகிறாள்.

இதன் மூலம் பொருள் ஈட்டும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்து நெடுந்தொலைவு சென்று திரும்புவதை சங்ககால மக்கள் போற்றி வந்தமையை அறியமுடிகிறது.

**அளவிடமுடியாத அன்பு:**

தலைவன் மீது தலைவி கொண்ட அன்பை அளவிட முடியாது என்பதை பின்வரும் பாடலால் உணரலாம்.

**நிலத்தினும் பெரிதே: வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர் அளவின்றே – சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருங்தேன் இழைக்கும் நாடனொரு நட்பே“**[24]

மேலும் தலைவனைப் பிரிந்திருக்க நேர்ந்த தலைவி தன் ஆற்றாமையால் தோழியிடம் பின்வருமாறு கூறுகிறாள்.

**“பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன**
**நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்**
**பிரிவரி தாகிய தண்டாக் காமமொடு**
**உடனுயிர் போகுக தில்ல கடனறிந்**
**திருவேம் ஆகிய வுலகத்**
**தொருவே மாகிய புன்மை நாம் உயற்கே.“**[25]

அதாவது தமக்கு இடையே ஒரு பூவினால் தடைபடும் நேரம் ஒரு நொடியானாலும் ஒர் ஆண்டு கழிந்தது போல துன்பத்தை உண்டாக்குவதாக உணர்ந்து வாழும் மகன்றிற் பறவையின் நிலைபோலத் தான் தலைவனைப் பிரிந்து வாடுவதாக கூறுகிறாள் மேலும் முன்பு இருவரும் ஓருயிராய் இருந்த நாங்கள் பிரிந்த போது உடல் வேறு உயிர்வேறாக பிரிந்து இருப்பதாக குறிப்பிடுகிறாள். இப்பாடலில் தலைவி தலைவன் மீது கொண்ட அன்பிற்கு மகன்றிற் பறவையை உவமையாகச் சுட்டுவது சிறப்பாகும்.

சங்ககால மக்கள் அகத்திலும் புறத்திலும் தன்னிகரில்லாத வகையில் வாழ்ந்துள்ளனர் குறிப்பாக காதல் வாழ்விலும் புரிதலுடனும் விட்டுக் கொடுத்துப் போகும் மனப்பக்குவத்துடனும் இருந்ததை உணர முடிகிறது. மேலும் விருந்தோம்பல் பொருள் தேடுதல் கல்வி ஈகை போன்ற நெறிகளை வாழ்வியலோடு வகுத்து வாழ்ந்தனர் என்பதையும் அறிய முடிகிறது.

**குடும்ப வாழ்வியலில் தாய்மை உணர்வும் தாய்ப்பால் அமுதூட்டலும்**

ஒரு பெண் தாய்மை அடைந்து மகவைப் பெற்றெடுத்த பின்பு குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுப்பது என்பது இன்றியமையாதது. இஃது தாயின் உணர்வுப்பூர்வமான செயல்பாடு. தாய்ப்பால் குழந்தைக்கு அமிர்தம் போன்றது. தாய்ப்பாலைவிட உலகில் சிறந்த உணவு எதுவும் இருக்காது என்றே கூறலாம். அதனால்தான் மருத்துவர்கள் குழந்தை பிறந்த ஆறுமாத காலம் கட்டாயமாகத் தாய்ப்பால் குழந்தைக்குக் கொடுக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்றார்கள். சங்ககாலத்திலும் குழந்தைக்குத் தாய்ப்பால் ஊட்டப்பட்ட இன்ப நிகழ்வினை,

**"வாணுதல் அரிவை மகன்முலை யூட்டத்**
**தானவள் சிறுபுறம் கவையினன் - நன்றும்**
**நறும்பூந் தண்புற வணிந்த**
**குறும்பல் பொறைய நாடுகிழ வோனே!"**[26]

என்னும் பாடலடிகள் சான்று பகர்கின்றன.

இன்று போற்றப்பட வேண்டிய வாழ்வியல் கூறாக அமைதல் அவசியம் என்பதை உணரமுடிகிறது.

தலைவி மகனுக்குத் தாய்ப்பால் ஊட்டுகின்ற போது, தலைவன் தன் அன்பை மனைவியிடம் வெளிப்படுத்துகின்ற முறையினையும் காணமுடிகின்றது.

பெண்கள் தாய்ப்பால் கொடுத்தல் இயந்திர உலகமான தற்காலத்தில் குறைந்து வருகின்றன. பெண்கள் தாய்ப்பால் கொடுத்தால் தங்களின் அழகு கெட்டுவிடும் என்று கருதுவதால், குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுப்பதைச் சிலர் தவிர்த்து வருகின்றனர். இது முறையான செயல்பாடு அல்ல. இதன் விளைவு குழந்தைகள் திடகாத்திரமாகவும் அறிவார்ந்தும் வளராமல் நோய்களுக்கு ஆட்படும். தங்கள் குழந்தைகளின் ஆயுள் குறைவிற்குத் தாயே காரணமாக அமையக்கூடும். ஆதலால், தாய்ப்பால் கொடுத்தலின் அவசியத்தையும் நன்மையையும் பெண்கள் புரிந்துக்கொண்டு செயல்படுவது அவசியமாகும்.

## இல்லத்திற்கு விளக்கொளியாகத் தாய் திகழல்

மனிதர்கள் தங்கள் பெறுவதற்குரிய பேறுகளுள் மிக முக்கியமான பேறு பிள்ளைப்பேறாகும். குழந்தை இல்லையென்றால் மனிதர்களை இந்த உலகம் மதிக்காது சமூகம் தழைக்காது என்பது பலர் அறிந்த உண்மையே. குழந்தை பெறுகின்ற தகுதியை ஆணும் பெண்ணும் பெற்றிருக்காவிடில் இச்சமூகம் ஆணிற்கு - மலடன், பெண்ணிற்கு - மலடி என்னும் பட்டங்களைக் கொடுத்து சமூகம் மதிப்பளிப்பதிலிருந்து விலக்கி வைக்கும். அதனால்தான் தான் பிள்ளைப்பேறு பெற்றவள் என்பதை உணர்த்தும் விதமாகப் புதல்வன் தாய் என்ற அடையுடன் தலைவி வருணிக்கப் பெற்றுள்ளாள். மேலும்,

‘பெண்கள் நாட்டின் கண்கள்’ என்பார்கள். விளக்கு எவ்வாறு இருளை அகற்றி ஒளி தந்து சிறப்பிக்குமோ அதனைப் போன்று இல்லச் செயல்பாடுகள் ஒளிபெற்றுச் சிறந்து விளங்குவதற்குப் பெண்கள் அவசியம் என்பது நாடறிந்த உண்மையாகும். இதனை,

**“ஒண்சுடர்ப் பாண்டிற் செஞ்சுடர் போல,**
**மனைக்குவிளக் காயினள் மன்ற - கனைப்பெயர்**
**பூப்பல அணிந்த வைப்பின்**
**புறவணி நாடன் புதல்வன் தாயே!”[27]**

என்னும் பாடலடிகள் விளக்கி நிற்கின்றன.

**தலைவன் தலைவியோடு மகிழ்வோடு இருத்தல்**

குடும்ப வாழ்க்கையில் தலைவனும் தலைவியும் தன் குழந்தைகள் விளையாடுகின்ற காட்சியைக் கண்டு இன்புற்றிருத்தல் என்பது இயல்பாக நிகழக்கூடிய நடப்பியலாகும். அதிலும் தலைவன் தலைவியை அன்புடன் தழுவிக் கொண்டு, தன் மகன் விளையாடுவதைப் பார்த்து மகிழ்வு கொள்ளுதல் சிறந்த குடும்ப வாழ்வியலாகும். இதனை,

**“மாதர் உண்கண் மகன்விளை யாடக்,**
**காதலித் தழீஇ இனிதிருந் தனனே-**
**தாதர் பிரசம் ஊதும்**
**போதார் புறவின் நாடுகிழவோனே”[28]**

எனும் பாடலடிகள் விளக்கிச் செல்கின்றன. இப்பாடலில் சங்ககாலப் பெண்கள் சிறுவயது (3-வயது வரை) ஆண்களும் கண்களில் மைபூசும் வழக்கம் கொண்டிருந்தனர் என்பதும் அறியப்படுகிறது.

**நிலம்சார் பொருளாதார ஏற்றத்தாழ்வும், காதலும்**

மருதமும் நெய்தலும் மிகுபொருள் உற்பத்தி நிகழ்ந்த இடங்கள். இதன் காரணமாக வணிகச்செயல்பாடும் செழித்திருந்தது. பொருளாதாரத்தில் வளத்தை இவ்விரு நிலங்களுமேக் கொண்டிருந்தன. பொருளாதாரத்தை மேலாண்மை செய்ய மனிதன் முற்படும்போது சமூக அமைப்பு சிக்கலாகி விடுகிறது. முல்லையிலும் குறிஞ்சியிலும் உயர்வு தாழ்வு கொண்ட வாழ்வு, பாடல்களில் சித்தரிக்கப்படவில்லை. ஆனால், மருதத்திலும், நெய்தலிலும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் நிறைந்த சமூக அமைப்பினை எதிர்கொள்ளமுடிகிறது. உலக அளவிலும் இன்றைய அளவிலும் நிலம்சார் ஏற்றத்தாழ்வு என்பது இருந்துவருகிறது.

ஒரு பசுவிலிருந்து கிடைக்கும் வருவாயைக் கொண்டு வாழும் நிலையும் உண்டு. அதேசமயம் பெருநில உடைமையாளர்களையும் காணமுடிகிறது. காதலுக்கு இப்பொருளாதார வேறுபாடு தடையாக அமையாது என்றுதான் கவிஞன் உணர்த்த முயல்கிறான். ஆனால் பெரும்பாலும் ஒத்தப் பொருளாதார நிலையைச் சார்ந்த தலைவன் தலைவி மணவாழ்வில் இணைவதையே காணமுடிகிறது. உற்பத்தி செய்பவன் மட்டுமே நிலத்திற்கு உரியவன் ஆவான்.

**"நெய்கனி குறும்பூழ் காய மாக**
**ஆர்பதம் பெறுக தோழி யத்தை**
**பெருங்கனாடன் வரைந்தென வவனெதிர்**
**நன்றோ மகனே யென்றனன்**
**நன்றே போலு மென்றுரைத் தோனே"[29]**

இப்பாடலில் தலைவன் வரைவு மேற்கொண்டச் செய்தியை வந்துரைக்கும் 'மகன் ' நெய்கலந்த உணவு பெறுவதாக, என்கிறாள் தோழி. இவன் தலைவனை ஏவலனாக இருத்தல்கூடும். இவனுக்கும் வாழ்வில் காதல் அரும்பும். ஆனால் அக்காதல் பாடப்படும் தகுதி படைத்தல் அல்ல. பாடல்களைக் கூர்ந்து வாசிக்கும் போது இவர்களுடைய காதலும் பாடல்களில் தலைதூக்குவதைக் காணமுடியும். குறுந்தொகைப் பாடல் - 392ல் சுட்டப்படும் தலைவி,

**"துளரெறிநுண்டுகட்கலளஞர்தங்கை"**[30]

களை எடுப்பவனின் தங்கை என்றாலும் மருதநிலக் காதல்கள் மருத நிலத்தில் காதல் ஒத்தப் பொருளாதாரச் சூழலில்தான் எழுந்துள்ளது என்பதை ஆய்ந்தறிய முடிகிறது.

**நிலம்சார் பெண்ணின் உழைப்பு**

நெய்தல் நிலம் ஏனைய மூன்று நிலங்களிலிருந்து முற்றிலும் வேறாக அமையும். பொருளாதாரத்தின் சமூகநிலை பெரும்பாலும் ஏற்றத்தாழ்வுகள் கொண்டவர்களுக்கு இடையில் காதல் எழுகிறது. தலைவி பெரும்பாலும் மீன் வேட்டம் நிகழ்த்துபவர்களின் மகளாக தங்கையாக அமைகிறாள். ஆனால் இவர்களை நாடிவரும் காதலன் கொடி அசையும் தேரில் வந்து இறங்குகிறான். சமூகப் பொருளாதார நிலையில் வேறுபட்ட நிலையில் உள்ளவர்களுக்கு இடையே நிகழும் காதல் என்ற உணர்வு கவிஞர்களுக்கு இருந்துள்ளது. இதனை,

**"மீன்ஏறி பரதவர் மகளே !நீயே**
**நெடுங்கொடி நுடங்கும் நியமமூதுர்க்**
**கடுந்தேர்ச் செல்வன் காதல்மகனே ;**

**நிணச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி...**
**பெருநீர்விளையும் எம்சிறு நல்வாழ்க்கை**
**நும்மொருபுரைவதோ அன்றோ ;**
**எம்மனோரில் செம்மலும் உடைத்தே"[31]**

பெயர் அறியாத புலவர் பாடிய பாடல் சுட்டுகிறது. தலைவி தலைவனின் சமூகநிலைச் சுட்டப்படுகிறது. தலைவி சிறுகுடியைச் சார்ந்த மீன்ஏறி பரதவர் மகள். தலைவனோ நியமமூதூரிலிருந்து கொடிஅசைய தேரில் வந்து இறங்கும் செல்வம் ஒருவரின் காதல்மகன் பெரும்பாலும் வணிகனாகவோ அதிகாரமையத்தைச் சார்ந்தவனாகவோ இருத்தல்கூடும். அடுத்த மூன்றுவரிகளும் சமூகப் பொருளாதார வேறுபாடு துல்லியமாக முன்வைக்கப்படுகிறது. சுறாவின் கசையை உணக்கமுனையும் தலைவியும் அவளைச் சார்ந்தவர்களுக்கு பறவையை விரட்டுவது அவர்கள் பண்பு ஏறிய வாழ்க்கை, புலவுநாறுதும் 'செல்நின்றிமோ' 'மீன்வாடை வீடும் எங்களிடமிருந்து விலகிச்செல்' எனக் கூறுவாள் தோழி.

**உழைப்பும் பெருமதி வாழ்வும்**

வாழ்வு குறித்த இழிவை அல்ல பெருமிதமே உள்ளது என்பது பதிவு செய்யப்படுகிறது. 'பெருநீர் விளைவும் எம் சிறு நல்வாழ்க்கை' கவிஞன் இந்த வாழ்வு செல்வனின் மகனோடு பொருந்தாது எனப் புலவர் கூறுகிறார். 'எம்மனோரில் செம்மலும் உடைத்தே' எங்கள் இனத்திலும் தலைவிக்குத் தகுதியானவன் உண்டு என்பது கவிஞனின் பார்வையைத் துலக்கி விடுகிறது. சங்கப்பாடல்கள் நெய்தல் திணைப் பாடல்களில் மட்டுமே இத்தகையப் பாடல்களைக் காணமுடிகிறது.

நெய்தல் மீன்வேட்டம் நிகழ்த்தும் பரதவர்களின் நிலம். அதேசமயம் கடல் வணிகம் நிகழ்த்தும் வணிகர்கள் வாழுமிடம் நெய்தலாகத்தான் இருத்தல் வேண்டும். இதனால் சமூகம் பொருளாதார ஏற்றத்தாழ்வு சந்தித்தல் நெய்தலில் இயல்பாக இடம்பெறுகிறது. நெய்தல் பெண்ணின் வாழ்வையும் வாழ்வின்மீதான தாக்கததையும் செலுத்துகிறது. மீன்வேட்டம் நிகழ்த்தும் பரதவர் வீட்டில் பெண்களும் உழைத்தாக வேண்டும். மருதத்தில் இந்நிலை இல்லை. அங்கு இல்லறக் கடமைகள் மட்டுமே பெண்கள் ஆற்றிட வேண்டும் என்பதறிய முடிகிறது. ஒவ்வொரு நிலத்திற்கும் அமைப்பு சார் வேறுபாடு என்பதை,

**“ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக்கெளீஇ**
**திமிலோன் தந்த கருங்கான்வயமின்**
**தழைஅணிஅல்குல் செல்வத்தங்கையர்**
**விழாஅயர்மறுகின்விலை எனப்பகளும்”**[32]

மீன்வேட்டத்தில் ஆண்கள் கொண்டு வந்த மீனைத் தேவைப்படும் இடங்களைத் தேடிச்சென்று விற்பனை செய்யும் கடமை பெண்களுடையது. இதனால் இவர்கள் வாழ்வு அல்லல் நிறைந்ததாக இருந்தமை அவர் உழைப்பின் கடினம், உழைத்தல் மேம்பாடு பெற்றிருந்தனர் என்பதறிய முடிகிறது.

**கூடுதல் பொறுப்புடனான தலைவியின் உழைப்பு**

நெய்தல்நிலக் குடும்பத்தில் தலைவியின் ஒருநாள் வாழ்வைச் சித்தரித்துள்ளது என்பதை,

**"வயற்சுறாவெறித்த புண்டணிற்தெந்தையும்**
**நீனிறப்பெருங்கடல் புக்கனன்யாயும்**
**உப்பைமாறி வெண்ணெற்றரீகிய**
**உப்புவிளை கழனிச் சென்றனள்"**[33]

கணவன் சுறா எரிந்து புண்பட்ட போது அவனையும் குடும்பத்தையும் பாதுகாக்கும் பொறுப்பு அவளுடையதாகிறது. புண்பட்ட கணவனுக்குப் பணிவிடை செய்வதோடு உப்பு விற்றுக் குடும்பச் செலவினுக்கான பொருளையும் திரட்டியாக வேண்டும். கூடவே தன் பெண் பாதுகாக்க வேண்டும். ஏனைய திணைப் பெண்களோடு ஒப்பிடும்போது, நெய்தல்நிலப் பெண் மட்டுமே இப்பெருஞ்சுமையைச் சுமக்க நேரிட்டுள்ளது. மருதநிலப் பெண்கள் கணவரின் பரத்தமை ஒழுக்கத்தால் அல்லலுறுகின்றனர். எனினும், பொருள் தேடும் சுமை அவர்களுக்கு இல்லை. குறிஞ்சி, முல்லை நிலத்தில் வாழ்வு எளிமையானது. உடல் உழைப்பின் மூலம் உணவைப் பயிரிடுவர் அல்லது சேகரிப்பர். அங்கும் பெண்கள் உழைத்திருக்கக் கூடும். ஆனால், நெய்தல் வாழ்வு மருதத்தைப் போல் சிக்கலானது. நெய்தல் பெண்கள் போராடியாக வேண்டும். மேலும், நெய்தலில் உயர்குடியினரும் இருந்திருக்க வேண்டும். இவர்கள் வாழ்வு மீன்வேட்டம் நிகழ்த்தும் பரதவர் வாழ்விலிருந்து வேறானதாக இருந்திருக்க வேண்டும்.

**மாலையில் வாயில் கதவு அடைக்கப்படுதல்**

**"புள்ளும்மாவும் புலம்பொடுவதிய**
**நள்ளெனவந்தநார் இல்மாலை**
**பலர்புகுவாயில் அடைப்பக்கடவுநர்**

**வருவீர்உள்ளீரோ எனவும்**

**வாராதோழி - நம்காதலரே"[34]**

இப்பாடலில் மாலை நேரத்தில் வீட்டின் வாயில் அடைக்கப்படும் செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

வாயிலை அடைக்கும் முன் வீட்டினுள் வர விரும்புகிறவர்கள் உள்ளீர்களாஎனக்கூவி அழைக்கப்படுகிறது. உறுதியாக இது செல்வந்தர்கள் வசிக்கும் வீடுதான். இவர்கள் நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பெரும் வணிகர்களாக இருத்தல் வேண்டும். சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் திணை மாந்தரையும், சமகால வாழ்வின் ஜாதிகளையும் கருத இயலவில்லை. மீன்வோட்டம் நிகழ்த்துபவர்கள் கடல் வாணிபம் செய்பவர்கள் நெய்தல் நில மக்களை வணிகர்கள். உயர் பொருளாதாரச் சூழலில் வாழ்ந்த போது மீன்வேட்டம் நிகழ்த்துபவர்கள் அன்றாடம் வாழ்க்கை செலவிற்காகக் கடலில் போராடினர்.

**"… … … … … அல்கல்**

**இளைஞரும் முதியவர் கிளையுடன்குழிஇ**

**கோர்ட்சுறா எரித்தன சுருங்கிய நரம்பின்**

**முடிமுதிர் பரதவர் மடமொழி குறுமகள்**

**வலையும் தூண்டிலும் பற்றி பெருங்கால்**

**திரைஎழு பௌவம் முன்னிய**

**கொலை வெஞ்சிரா அர்பாறப்பட்டனளே"[35]**

இந்த நற்றிணைப் பாடலின் நெடுந்தேரில் வரும் தலைவனுக்கு மனைவியாக வேண்டிய தலைவி கொலை வெஞ்சிறார்களில் ஒருவனுக்கு மனைவியாக நேரிடும் அவலத்தை எதிர்க்கொள்ள முடிகிறது.

கவி மீன்வேட்டம் இனக்குழு மக்கள் ஒருங்கிணைந்து நிகழ்த்த வேண்டிய தொழில் இளையோரும், முதியோரும் ஒன்று சேர்ந்து பணியாற்றியாக வேண்டும். வணிகரின் தொழில் வேறானது. கவிஞன் அத்தொழிலையே உயர்வாகக் கருதுகிறான். இந்த ஏனைய மூன்று நிலங்களிலும் இந்த அளவிற்கு இடம் பெற்றிருக்க வாய்ப்பில்லை. எனவே நெய்தல் நிலப் பெண்களின் பொருளாதாரச் சூழலில் எழும் வாழ்க்கை சிக்கலை எதிர்கொள்ளும்படியானது. நெய்தல் பாடல்கள் இதை உணர்த்தி உள்ளன என்பது ஆய்ந்தறியப்படுகின்றன.

**முடிவுரை**

அன்பொழுக்கம் சார்ந்தமையும் எழுதிணை அமைப்புமுறை, ஐந்திணை சார்ந்த அகத்திணைச் சிறப்பு, ஒத்த அன்புடன் ஒருமித்து வாழும் முறை ஆய்ந்துணர்த்தப்படுகின்றன.

உள்ள இசைவுடனான இயற்கைப் புணர்ச்சி துணைநிற்கும், வாயில்களாக பாங்கன், பாங்கியர் வரைவு மேற்கொள்ளச் செய்தல், வரைவிடைப் பிரிதல், நீடல், மீண்டுவருதல், தலைவன் தலைவி உளநிலை இவை சிறப்புடன் உணர்த்தப்படுவதை ஆய்ந்துணர்த்தப்படுகின்றன.

உடன்போக்கு இருந்தமையும், இல்லற மாண்புப் போற்றும் பெண்ணின் சிறப்பு, விருந்தோம்பல்  சிறப்புறக் கூறப்படுகின்றன.

முன்னோர் தொகுத்த செல்வத்தின் மீது பற்றுக் கொள்ளாமை அளவற்ற தலைவன், தலைவி அன்பு, தாய்மைச் சிறப்பு, பெண்ணின் உழைப்பு சிறப்பு, மேன்மைகள் சிறந்த அகவாழ்வியல் கூறுகளாக விளங்கியமையை எடுத்துரைக்கப்படுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. தொல்.பொருள்.அகம். 1.
2. அகப்.விள.அகம். 3.
3. மேலது., 4.
4. மேலது., 5.
5. இறை.அகப்.ப. 28.
6. இராமசுப்பிரமணியம்வ.த., உ.ஆ. - சங்க இலக்கியம் நற்றிணை மூலமும் உரையும், திருமகள் நிலையம், சென்னை-2009..
7. தொல்.பொருள்.களவு. 2.
8. குறுந் :142: 4-5.
9. குறுந் : 95:1-5
10. குறுந் : 42:1-4
11. குறுந். 121:1-6.
12. குறுந். 106:1-6
13. குறுந் :25:1- 2.
14. தொல்.பொருள்.களவு. 9.
15. தொல்.பொருள்.களவு. 28.
16. நற். 94:1-5

17. குறுந் -167:1-6

18. குறு-210:4-6

19. புறம் – 314:1

20. கற்பி - நூற்பா 11.

21. குறுந் 277:1-8

22. குறுந் 283:1-8

23. குறுந் . 135:1-4

24. குறு .3:1-4

25. குறுந் . 57:1-6

26. ஐங்குறு.404:1-4

27. ஐங்குறு.405:1-4

28. ஐங்குறு.406:1-4

29. குறுந்.389:1-5

30. குறுந்.392:5

31. நற்.45:3-11

32. அகம். 320:1-4

33. குறுந். 269:3-6

34. குறுந்.118:1-3 .

35. நற். 207:6-12

## இயல் மூன்று

# சங்க இலக்கியத்தில் நிலம் சார்ந்த புறத்திணை வாழ்வியல் கூறுகள்

### முன்னுரை

பழந்தமிழரின் வாழ்வியலை படம்பிடித்ததுபோல காட்டுவதில் புறத்திணைக் கூறுகள் முதன்மை இடத்தைப் பெறுகின்றன. தமிழ் இலக்கியங்களில் புறத்திணை கூறுகளை அதிகமாகக் காட்சிப் படுத்தியது சங்க இலக்கியங்கள் என்று கூறலாம். ஏனெனில் சங்க இலக்கியத்தில் அக நூல்களிலும் புறநூல்களிலும் புறத்திணைக் கூறுகள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. அவ்வகையில் சங்க இலக்கியங்களில் புறத்திணைக் கூறுகளை விவரித்துப் பார்ப்பது இவ்வியலின் முக்கிய நோக்கமாக அமைகிறது.

சமுதாயத்தில் ஓர் உறுப்பாக அமைந்த தனிமனிதனின் சமூகம் குறித்த நினைவுகளையும், உணர்வுகளையும் செயல்முறைகளையும் எடுத்துக்காட்டுவதாக அமைவதை புறத்திணை என்று கூறலாம். அதாவது தனிமனிதனின் கல்வி, வீரம், ஈகை, புகழ் போன்றவற்றை அனைவருக்கும் புலப்படும்படியாக எடுத்து உரைப்பது புறத்திணைக் கூறுகள் என்று கூறலாம்.

### புறத்திணை அமைப்பியல்

தமிழரின் புறவாழ்வியலை ஒருவித கட்டமைப்பில் காட்டுவதாக தமிழ் இலக்கண நூல்கள் உள்ளன. அவற்றின் வழி தமிழரின் புறவாழ்வியலை (செயல்பாட்டை) புதிய தலைமுறைக்கு எடுத்துரைப்பதாக தொல்காப்பியத்தில் கூறப்பட்டது. பின்பு தொல்காப்பியத்தைப் போன்றே அதன்பின்வந்த நூல்களிலும் அதே போன்று கட்டமைப்பில் விரிவுபடுத்தி எடுத்துரைத்துள்ளனர்.

அந்த வகையில் தொல்காப்பியத்தில் கூறப்பட்ட புறத்திணை அமைப்பியல் முறையானது, வெட்சி, வஞ்சி, காஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் என்னும் ஏழு விதங்களாகச் சொல்லப்பட்டன. இந்த கட்டமைப்புகள் எள்ளிலிருந்து எண்ணெய் எடுப்பது போல இலக்கியத்திலிருந்து இலக்கணம் கண்டறிந்தது போல இலக்கியத்தில் சொல்லப்பட்டதற்கு இலக்கணம் வரையறுத்தனர் என்று அறியலாம்.

இவ்வாறு ஏழுவகையில் சொல்லப்பட்ட புறத்திணை அமைப்பானது, பின்னால் எழுந்த புறப்பொருள் நூல்களில் 12 துறைகளாக விவரித்துக் கூறுகின்றன. அத்தகைய புறத்திணை அமைப்பினைக் கொண்டு சங்க இலக்கிய எட்டுத்தொகை புறநூல்களில் எவ்வாறான வகைகளில் செய்திகளின் கூறுகள் அடங்கியுள்ளன என்பதை பின்வருமாறு ஆய்ந்து உணர்த்தப்படுகின்றன.

**தொல்காப்பியம் கூறும் போரின் ஐந்து நிலைகள்:**

தொல்காப்பியர் கூறும் ஐந்து புறத்திணைகளில் போரின் நிலைகளைக் குறிப்பிடுகிறார். அதாவது ஐந்து நிலங்களுக்கும் ஐவகைப் பூக்களை வீரர்கள் அணிந்தனர். அவ்வாறான வீரர்கள் பட்டுடையை அணிந்தனர் என்று குறிப்பால் தெரிந்தாலும், அவர்களுக்குள் தனியே ஆடைகள் இருந்ததாகத் தெரியவில்லை. அதனாலேயே தனித்தனிப் பூக்களையே வீரர்கள் அணிந்தனர் என்று கருதமுடிகிறது. அதன்படி, ஆநிரை கவர்தல் போரின் தொடக்கமாய் அமைந்து (ஆநிரை கவர்பவர்கள்) வெட்சிப் பூ அணிந்து கொண்டனர். அவ்வாறு அணிந்து போர்க்களம் நோக்கிப் புறப்படும் முன்பு நற்சொல் (அ) விரிச்சிக் கேட்பர். பின்னர் ஒற்றரை வைத்து உளவு பார்த்து ஆநிரைகள் மேய்கின்ற இடத்தை நோக்கிப் போவதாக இருத்தல். பின்பு ஆநிரைகளைக் கவர்வதைத்

தடுப்பவர்களுடன் போர் தொடுப்பர் என அறியமுடிகின்றது. இந்த செயலிற்குப் பின் வெற்றிக்குரிய தெய்வமான கொற்றவையை வணங்கி கள் உண்டு கொண்டாடுவர்.

பகைவர் நாட்டைக் கவர எண்ணும் மன்னன் வஞ்சிப்பூ அணிந்து செல்வது அக்கால வழக்கம். போரின் இறுதியில் தோற்ற பகைவர் நாடு எரிக்கப்படும். அதாவது தமக்கு ஆளுமைக்கு அடங்கித் திறை செலுத்தாதவர் நாட்டின்மீது மீண்டும் போர் தொடுக்கப்படும். இப்போரில் உதவுவோர்க்கு மாராயன் பட்டமளிப்பது பிற்காலத்து வழக்கு. போர்க்காலத்தில் வீரர்களுக்குப் பெருஞ்சோற்று உருண்டைகள் பரிசு அளிப்பதும் அவ்வழக்கம் இருந்ததும் அறியமுடிகிறது.

கோட்டையைச் சுறறிவளைத்துப் போரில் ஈடுபடுவோர் உழிஞைப்பூ சூடிக்கொள்வர். முற்றுகைப் போர் உழிஞைப் போர் எனப்படும். முற்றுகையை முறியடிக்கும் போர் நடவடிக்கைகள் நொச்சி எனப்படும். கோட்டைக்குள் இருப்பவர் வெற்றியடைவதும் உண்டு, வெளியிலிருந்து தாக்குவோர் வெற்றியடைதலும் உண்டு. தாக்கச் செல்வோர் வெற்றி பெற்றால் அதன் அடையாளமாக மண்ணுமங்கலம் என்ற வெற்றி நீராட்டு நடைபெறும் என்று கூறலாம்.

கோட்டைக்கு அப்பால் வெளியில் இருபெருவேந்தரும் போர் புரிவது தும்பைப்போர் ஆகும். போரிடுவோர் தும்பைப் பூ சூடிக் கொள்வர். இப்போரில் தான் நால்வகைப் படைகளும் பயன்படுத்தப்பட்டதாக அறியமுடிகின்றது.

போரில் வெற்றிபெற்றோர் வாகைப் பூ சூடுவர். யானை மீதிருந்த வேந்தனைக் கொன்ற மற்றொரு வேந்தன் தன் வாள்வீரர்ச் சூழ ஆரவாரம் செய்தல் பின் ஒள்வாள் அமலை எனப்பட்டது.

இவையாவும் தொல்காப்பியத்தினால் தெரியவரும் செய்திகளாக இருக்கின்றன.

**சங்க இலக்கியத்தில் போர் அறிவிப்பும் போரியல் நெறிமுறையும்**

இன்றைய காலத்தில் நடக்கும் இரவு போர்களைப் போன்றோ மறைந்திருந்து தாக்கும் கொரில்லா போர்முறை போன்றோ அல்லது கன்னிவெடி மற்றும் இராசாய அணுகுண்டு போன்றவற்றை உபயோகித்து போரினை நிகழ்த்தாமல் குடிமக்கள் உயிர்களுக்குப் பாதிப்பு ஏற்படா வண்ணம் போர்முறையினைப் பழந்தமிழர் வரையறுத்து அதனைப் பின்பற்றியே உள்நாட்டளவிலும் அயலக போர் போன்றவற்றையும் தமிழர்கள் மேற்கொண்டனர் என்பதை இலக்கண இலக்கிய நூல்களின்வழி அறியமுடிகின்றது. இதனை,

***"ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்,***
***பெண்டிரும் பிணியுடையீரும், பேணித்***
***தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்***
***பொன்போற் புதல்வர் பெறாஅதீரும்,***
***எம் அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின் என***
***அறத்தாறு நுவலும் பூட்கை"[1]***

என்று பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடிய புறநானூறு 9ஆம் பாட்டினாலும்,

***"பலிபெறு நன்னகரும் பள்ளியிடனும்***
***ஒலிகெழு நான்மறையோர் இல்லும் நலிவொரீஇப்***
***புல்லா; இரியப் பொருநர் முனை கெடுத்த***
***வில்லார்க்கு அருள் சுரந்தான் வேந்து."[2]***

என்ற சங்கப் பாடலால் பழந்தமிழகத்தில் போரினால் (உயிர், உடைமை) அழிவு அதிகரிக்குமென்ற எண்ணத்தின் காரணமாகப் பல

நெறிமுறைகளை வகுத்தனர். அதாவது, பகை நாட்டின் மீது படையெடுக்கும் முன், அந்நாட்டு அறவோரையும் தன்னாட்டு அறவோரையும் பாதுகாப்பது (அரசர்களின்) முதற்கடமை என வகுத்தனர். மேலும் பசு, அந்தணர், மகளிர், நோயுற்றோர், சிறார்கள், புதல்வரைப் பெற்றாதோர் ஆகிய அனைவரையும் பாதுகாத்து வைப்பது தமிழரின் மரபாக இருந்துள்ளதை அறியமுடிகின்றது. இதனால் இவர்களை முரசறைந்து தெரிவித்து வேறு பாதுகாப்பான இடங்களுக்கு அனுப்பிவைத்தனர் என்று அறியமுடிகின்றது.

**3. போரின் காரணங்கள் அன்றும் இன்றும்**

போரின் தோற்றம் எங்கும் பொதுவான சில காரணங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கும். போர்கள் நடைபெற்றதற்கான காரணங்களாக வாழ்வியல் களஞ்சியம் கீழ்க்கண்ட காரணங்களைக் கூறுகிறது.

**“1. போர் மனிதனுக்கு இயல்பானது என்னும் கருத்து**

**2. மரபுப் பகைகள்**

**3. வெற்றிபெற்று அப்பகுதிகளை இணைத்திட வேண்டும் என்ற தனியாத வெறி.**

**4. பொறாமை பிறருடைய ஏற்றம் கண்டு சகித்திட இயலாமை**

**5. போர் மரபினால் தூக்கி நிறுத்தப்படும் போர் உணர்வு**

**6. போரில் மாண்டோர்**

**7. மண உறவுகள் ஏற்படாமை**

**8. படைவலிமை, படை வெற்றிச் சிறப்புச் சேர்க்கும் என்னும் நம்பிக்கை.**

**9. வீரம்; நிலையாகப் போற்றப்படும் நிலை.**

**10. தேசிய அவமதிப்பைச் சகியாமை.**

**11. எல்லைகள் வகுக்கப் பெறாமல் எல்லைகள் மீறப்படுதல்.**

**12. போரே மற்றொரு போரை உருவாக்குதல்.**

**13. இன உயர்வுச் செருக்கு.**

**14. வாணிகத் தடைகள்.**

**15. சமயப் பரப்பு நோக்கம்.**

**16. உலகைக் கட்டியாளும் ஆர்வம் ஆகியன குறிப்பிடத்தகுந்தப் போர்க்காரணங்கள் ஆகும்."**[3]

இதனைப் போன்றே,

**"பழந்தமிழ்ப் போர்க் காரணங்களைத் தமிழரறிஞர் பலர் ஆய்ந்துரைப்பர். நாடு கொள்ளும் நாட்டம், பேரரசு அமைக்கும் பேரவா. திறைதர மறுப்பு, மகள் மறுத்தல், நாடிடைப்பட்ட பகுதிகளின் ஆதிக்கம் விருப்பம் என்பன போர்க் காரணங்களாகக் காணக் கிடைக்கின்றன"**[4] என குறிப்பர்.

**4. போரின் நோக்கம்: நிலவிரிவாக்கம்**

பொதுவாக நாடுபிடிக்கும் போட்டி, பொறாமை, ஆளுமை ஆதிக்க விரிவாக்கம், பிறர்நாட்டு ஆக்கிரமிப்பு, புகழ் எய்துதல் ஆகிய பல காரணங்களால் பண்டைத் தமிழ் மன்னர்கள் இடைவிடாமல் போர் புரிந்தனர் என்று வரலாற்றாசிரியர்கள் கூறியிருக்கிறார்கள். ஆனால் கூர்ந்து நோக்கும்போது இன்னும் தெளிவாகப் போருக்கான

காரணத்தை வரையறுக்க முடிகிறது. 1853-இல் கார்ல் மார்க்ஸ் பண்டைய இந்தியப் பொருளாதாரத்தைப் பற்றி எழுதிய கூற்று இது:

**“பண்டைக்காலத்திலிருந்து ஆசியாவில் (ஆசியாவில் என்று மார்க்ஸ் குறிப்பிடுவது இந்தியாவைத்தான்) மூன்று அரசாங்கத் துறைகள் இருந்துவந்திருக்கின்றன. ஒன்று நிதித் துறை, அதாவது உள்நாட்டுக் கொள்ளை. இரண்டு போர், அதாவது வெளிநாட்டுக் கொள்ளை. மூன்றாவது பொதுப்பணித் துறை. பாசனவசதிகள் முதலியவற்றை அமைத்துத் தருதல்.... இந்தியாவின் கடந்த காலத்தின் அரசியல் தோற்றங்கள் மாறியிருப்பதாகத் தோன்றினாலும் அதன் சமூக நிலைமை மிகப்பழங்காலத்திலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் பத்தாண்டு வரை மாறாமலே இருந்துவந்துள்ளது”.**

போர் என்பதை வெளிநாட்டுக் கொள்ளை என்றே கார்ல் மார்க்ஸ் குறிப்பிடுவது இங்கு நோக்கத்தக்கது. சான்றாக கோப்பெருஞ் சிங்கனும் இரண்டாம் ராஜராஜனும் போரிடுவது சிறிய சண்டையானாலும் அதன் அடிப்படை நோக்கமானது பொருளாதாரம் தான் என்பதை இது எடுத்துக் காட்டுகிறது. ஆயினும் சங்க காலத்தில் நிலம் அடைதல் முதல் குறிக்கோளாக இருந்து நிலவிரிவு வேண்டினர் என்பதன்வழி போர் மூண்டமை அறியமுடிகிறது.

**“அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு”[5]**

என்ற மேற்கண்ட அடிகள் பகை மன்னனைத் தாக்கி அவர்களை முரசுடன் சிறைப்பிடிப்பேன் என வஞ்சினம் கூறுவதை இங்கு இதனுடன் ஒப்பிட்டுக் கூறலாம்.

## பலவித போர்ப் படைகள்

"மன்னன் வழித்தே மலர்தலை உலகம்" என்ற ஒற்றை வரிகளுக்கு ஏற்ப (மக்கள் பாதுகாப்புக் கருதி) மன்னர்கள் போர்ப் படைகளை வைத்திருந்தனர். அப்படைகளானது நால்வகைப் படைகளாக மன்னர்களால் அமைக்கப் பெற்றிருந்தன. பொதுவாக பொன், பொருள், நிலம், பாதுகாப்பு என ஏதேனும் ஒன்றின் காரணமாக போரினைத் தொடங்குவர். அவ்வாறான போர்களில் பயன்படுத்தப்படுபவை யானை, குதிரை, தேர், காலாட்படை என்ற நான்கு வகைகளாக இருந்தது. இத்தகைய நான்கு வகைப் படையின் மீது அமர்ந்து போர்க் கருவி கொண்டும் போரிடுவர். அத்தகைய படையின் முதற்பகுதி தூசிப்படை அல்லது தார் எனப்படும். இதனை,

**"படையும் கொடியும் குடையும் முரசும்,**
**நடைநவில் புரவியும் களிறும் தேரும்,**
**தாரும் முடியும் நேர்வன பிறவும்**
**தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய"**[6]

என்ற நூற்பாவின்வழி போர்க்குரிய படைகள் பற்றி அறியமுடிகின்றது. இதனையே,

களிறு, தேர், நடைநவில், புரவி ஆகிய இணைந்தது நாற்படை. இந்நான்கும் கொண்டிருத்தல் அரசரின் இலக்கணமாகிறது. கொடி, குடை, முரசு, தார் (மாலை), முடி (மணிமுடி), செங்கோல் முதலியன மன்னர்க்குரிய மற்ற அடையாளச் சின்னங்களாகும். இவற்றுள் குடை, முரசு ஆகியன போர்க் கருவிகளாகவும் கொள்ளத் தக்கனவாகும்.

எனவே நாற்படைகளைப் பெருக்கி, மக்களை அமைதியாகவும் பாதுகாப்பாகவும் வாழ வழி செய்ய வேண்டிய கட்டுப்பாடு உடையவனாகத் தொல்காப்பியர் காலத்திலேயே மன்னர்க்குரிய

முறையாக இருந்திருக்கிறது. இந்நால்வகைப் படைகளை மன்னர்கள் பெற்றிருந்தமையைச் சங்க இலக்கியக் குறிப்புகளும் காட்டுகின்றன. ”நெடுநல்யானையும் தேரும் மாவும் படையமை மறவரும் உடையம் யாம் என்று” (புறநானூறு, 72) என்ற பாடலடிகள் வழி போர்ப்படை பற்றிய செய்திகளை அறியமுடிகின்றது.

தரைப்படை என்பது நிலவழி நடந்துசென்று போர் மேற்கொள்வதாக அறியமுடிகிறது. நிலப்படைகள் வழி அரசனின் பெருமை நிலைபெற்றது என்பதனை சங்கப் பாடல்கள் வழி உணரப்படுகின்றன.

**யானைப்படை**

அரசனுக்கு இருக்கவேண்டிய முதலங்கங்களாவது படை, குடிமை, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்ற ஆறினுள் முதலாவதாகக் கூறப்படுவது யானைப் படை. எனவே தமிழ் மன்னர் யாவரும் யானைப் படை வைத்திருந்தனர் என்பதை சங்க இலக்கியத்தால் அறியமுடிகிறது. யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால்வகைப் படைகளோடு கப்பற்படையும் இருந்தது. சங்ககாலத்திலிருந்தே இந்தியாவில் தமிழ் மக்கள் மட்டுமே கப்பற்படை வைத்திருந்தனர்.

யானைப்படை இன்றியமையாத ஒன்று. ஆனால் முன்னணிப் படையில் பயன்படுவதில்லை. பின்னால் சென்று எதிரிகளைப் (பெரிய எண்ணிக்கையில்) அழிக்கவும், அரண்களை உடைக்கவும் யானைகளே உதவுகின்றன. மேலும், ஆண் யானைகள் மதில் கதவுகளை முறித்து கூர்முனை மழுங்கிட கொம்புகளை உடையனவாதலால் அவை உயிரை உண்ணும் எமனைப் போன்றனவாயின. இதனை

**“களிறு கதவு எறியா, சிவந்து, அராஅய்,**
**துதி மழுங்கிய வெண் கோட்டான்,**
**உயிர் உண்ணும் கூற்றுப் போன்றன”[7]**

என்ற புறநானூறு பாடல் சுட்டுகிறது.

மற்றொரு பாடலில் பகைவரைத் தாக்கி அழித்ததால் யானைக்கு முனை முறிந்த கொம்புகளையுடைய அதியமானின் யானையைக் கண்ட பகைவர்கள் கோட்டை மதிலில் உள்ள கணைய மரத்தாலான கதவுகளைப் புதிதாக மாற்றத் தொடங்கினர். இதனை,

**“முனைக்கெவ்வர் முரண் அவியப்**
**பொரக்குறுகிய நூதிமருப்பின் நின்**
**இனக்களிறு செலக்கண்டவர்**
**மதிற்கதலவம் எழுச்செல்லவு”[8]**

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது.

மேலும் அரசனும் முதன்மையான படைத் தலைவர்களும் யானைமீது சென்றனர். அதாவது எண்பேராய உறுப்பினர்களில் ஒருவர் யானை வீரர். இவரை யானைப்படைத் தலைவர் எனக்கருதுவர். பொதுவாக போர்க் காலங்களில் யானைகளுக்கு மதுவூட்டி வெறியேற்றிய பின்பே போர்க்களம் அழைத்துச் சென்றனர். வலிமை மிக்க கோட்டை வாயில்களைத் தாக்கி உடைப்பதற்கு இத்தகைய யானைகளையே பயன்படுத்தினர்.

### சோழநாட்டு யானைப்படை

சோழநாட்டின் வேழப்படைத் திறத்தினைப் பிற நாட்டு அறிஞர் எழுதியுள்ள குறிப்புகளால் அறியலாகும்.

**"சோழநாட்டு அரசாங்கம் அறுபதாயிரம் போர்க் களிறுகளை உடையது. போர்க்களத்திற்கு புகும் பொழுது அவற்றின் முதுகில் அமைந்த வீடுகளில் வீரர் நிறைந்திருப்பர்; தூரத்திலுள்ள பகைவர்கள் மீது வில்லம்பு துரப்பர் ஈண்டிய பகைவர்மீது ஈட்டியைப் பாய்ச்சுவர். போர் முனையில் வீரம் விளைத்து வெற்றி பெரும் வேழங்களுக்கு விருதுப் பெயர் கொடுப்பதுண்டு. அப் பெயர்கள் அவற்றின் கொற்றத்தைக் குறிப்பனவாக அமையும். நாள்தோறும் போர்க் களிறுகளை அரசன் பார்வையிடுவான்" என்று சீனத்து அறிஞன் ஒருவன் எழுதினான்.”[9]**

என்ற மேற்கண்ட அடிகளால் இதனை அறியலாம்.

**பாண்டிநாட்டு யானைப்படை**

பாண்டி நாட்டு வீரமன்னருள் ஒருவன் பெருவழுதி ஆவான். இவன் பகைவர்களை அறப்போரால் வென்று மறக்கள வேள்வி புரிந்தவன். பெருவழுதியின் யானைப்படை சிறந்து விளங்கிற்று. இதனை, "கொல்யானை பலவோட்டிக் கூடா மன்னர் குழாம் தவிர்த்த பெருவழுதி" என்று வேள்விக்குடிச் செப்பேடுகள் பெருவழுதியை வியந்துரைக்கின்றன. (வேள்விக்குடிச் செப்பேடுகள் கி.பி. 8-ஆம் நூற்றாண்டிலே வரையப்பெற்றன.) பாண்டி நாட்டு மீன கொடி அவனது பட்டத்து யானையின்மீது நிமிர்ந்து பறந்த காட்சியைக் கண்ட கவிஞர் ஒருவர்.

**"கொல்களிற்று மீமிசைக்**

**கொடிவிசும்பு நிழற்றும் எங்கோ வாழிய"[10]**

என்ற பாடலடிகளால் யானை சிறப்பு அறியமுடிகிறது.

**குதிரைப்படை**

பொதுவாக விரைந்து தாக்குவதற்குரிய படையாகக் கருதப்படுவது குதிரைப்படை. எனவே போரில் அதன் பயன் மிகப் பெரிது. எண்பேராய உறுப்பினர்களில் இன்னொருவர் குதிரைப்படை மறவதாவார். இவரைக் குதிரைப்படைத் தலைவர் எனக் கருதலாம். இத்தகைய போருக்கான குதிரைகள் எப்போதுமே அரபு நாட்டிலிருந்துதான் நாட்டிற்கு இறக்குமதியாயின.

சான்றாக, பாண்டிய அரசன் 4000 குதிரை வீரர்களை வைத்திருந்ததாக மெகஸ்தனிஸ் என்னும் அறிஞர் (கி.மு.4ஆம் நூற்றாண்டு) கூறுகின்றார். பொதுவாக அக்காலத்தில் குதிரைகளுக்கு இலாடம் அடித்துப் பயன்படுத்தாமையால் ஏராளமான குதிரைகள் விரைவில் இறந்துவிட்டன. இதனால் தமிழர்களுக்குக் குதிரைகளைச் சரியாகப் பயன்படுத்தத் தெரியவில்லை என்றும் வாசப் கூறுகிறார்.

**தேர்ப்படை**

தேர்ப்படை பழங்கால மன்னர்கள் பயன்படுத்திய நாற்படைகளில் ஒன்றாகும். உருவப் பஃறேர் இளஞ் சேட் சென்னி என்ற சோழன் பல அழகான தேர்களை உடையவன் என்று அவன பெயரிலிருந்தே தெரிகிறது. பொதுவாக அக்காலத்தில் தேர்செய்யும் தச்சர்கள் மன்னனால் பணியமர்த்தப் பட்டிருந்தனர். சான்றாக தேர்கள் குதிரைகளால் இழுக்கப்பட்டன. இதனை,

**“திண்தேர் (வலிமையான தேர்), நல்தேர் (நல்ல தேர்) கடுந்தேர், கொடித்தேர் என்னும் சொல்லாட்சிகள்” (புறம்.198:6, 226:5-6, குறள், 496:1)** என்ற மேற்கண்ட சான்றுகளால் தேர்ப்படை பற்றி அறியமுடிகின்றன.

**காலாட்படை**

காலாட்படையில் பங்குபெறுவோர் போர்க்களத்தில் நடந்துசென்றே பகைவரிடம் சண்டையிடுபவர்கள் ஆவர். இத்தகைய காலாட்படை வீரர்களை மறவர், எயினர், வேடர், மழவர், மள்ளர், பரதவர், மலையர், ஒளியர், கோசர் போன்ற பல வீரர்கள் இருந்தனர். தமிழ் மன்னர்களின் படைகளில் யவனர்களும் படைவீரர்களாகப் பணியாற்றினர் என்பதை சங்க இலக்கியத்தின் வழி அறியலாம். மேலும் மழவர்கள் சீறிவருகின்ற நாகம்போல அஞ்சா நெஞ்சம் கொண்டவர்கள் என இலக்கியங்கள் சிறப்பிக்கின்றன. அதாவது போர்ப்படை பிரிவுகளின் முதலில்வரும் படைப் பிரிவானது தூசிப்படை என்று கருதலாம். அதன்பின் இறுதியாக வரும் படைகள் எவை என்பதை,

**“மெய்புதை யரண மெண்ணா தெஃகுசுமந்து**
**முன்சமத் தெழுதரும் வன்க ணாடவர்”**[11]

**“நெடுவேல் பாய்ந்த மார்பின்**
**மடல்வன் போந்தையி னிற்கு மோர்க்கே”**[12]

என்ற மேற்கண்ட அடிகள் காலாட்படை வீரர்களில் வாள் வேல் வீரரின் செயல்பாட்டைக் காட்டுகின்றதை அறியமுடிகின்றது.

இங்ஙனம் தாம் வாழும் நிலத்திற்கேற்ப பலவித வலிமை வாய்ந்த படைகளை உருவாக்கினார்கள். அவை விலங்குகளைக் கொண்டு அரசர்கள், குறுநில மன்னர்கள் உருவாக்கினார்கள். அத்தகைய படைகளைக் கொண்டு தன் ஆளுமைக்கு உட்பட்ட நிலங்களை விரவுப்படுத்தினர் என உணரமுடிகிறது.

**கடற்படையில் சிறத்தல்**

பொதுவாக கடல் வாணிகத்திற்குப் பாதுகாப்பளிக்கவும், கடற் கொள்ளைக்காரர்களை அழிக்கவும் கப்பற்படை பயன்பட்டது. கரிகாலன் இலங்கைமீது படையெடுத்துச் சென்று கைதிகளைப் பிடித்துவந்ததற்குக் காரணம், அவனிடம் வலிமைமிக்க கப்பற் படை இருந்தமையே. கடல் அரண் அமைத்து கடற்கொள்ளையில் ஈடுபட்ட கடம்பர்களை ஒழித்துக் **'கடல்பிறக்கோட்டிய'** என்னும் சிறப்புப்பெற்றான் சேரஅரசன் செங்குட்டுவன்.

**படைநிலா விளங்கும் கடல்மருள் தானை**

**மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்**

**பொருமுரண் பெறாஅது விலங்கு சினம் சிறந்து**

**செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி**

**ஓங்குதிரைப் பௌவம் நீங்க ஒட்டிய**

**நீர்மாண் எஃகம் நிறத்துச் சென்றழுந்தக்**

**கூர்மதன் அழியரோ நெஞ்சே"**[13]

என்று கூறும் கருத்தமைந்த பாட்டில், செங்குட்டுவன் கடலில் பகைவர் மேல் வேலெறிந்து திறத்தைப் பாடிச் சிறப்பித்துள்ளார். இவ்வாற்றலால் செங்குட்டுவனுக்குக் கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவன் என்று பெயர் பிறங்குவதாயிற்று.

**சேரன் காலாட்படை**

தமிழ் நாட்டு மூவேந்தரும் நிலப்படையோடு கப்பல் படையும் உடையராய் இருந்தனர். சேரநாட்டை ஆண்ட செங்குட்டுவன் கப்பல் படையின் வலிமையால் பகைவரை வென்று **"கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்" (பதிற்றுப்பத்து, ஐந்தாம் பத்துப் பதிகம்; புறநானூறு, 369.)** எனப் புகழ் பெற்றான். அவன் தந்தையாகிய நெடுஞ்சேரலாதன்

காலாட்படையை அடுத்துக் கடம்பர் என்ற கடற்பகைவரை வென்றான்.

**கடற்படையில் தனிசிறந்த மன்னர்கள்**

தமிழ் நாட்டு வாணிக வளத்தைப் பாதுகாக்கக் கருதியே கடல்போர் புரிந்தனர் என்று தோற்றுகின்றது. அவர் காலத்தில் கடல்வழி நிகழ்ந்த வர்த்தகத்தால் சேரநாடு சாலவும் வளம் முற்றிருந்தது. அந்நாட்டில் அமைந்த முசிறி துறைமுகம் உலகறிந்த நகரமாய் விளங்கிற்று.

யவன நாட்டிலிருந்தும், அரேபியாவிலிருந்தும், எகிப்து நாட்டிலிருந்தும் வணிக வர்த்தகக் கப்பல்கள் தமிழகத்திற்கு வந்த வண்ணமாய் இருந்தமையால் அத்துறை, **"வளங்கெழு முசிறி" (அகநானூறு, 149)** யாக விளங்கிற்று. ஆயினும், கடற்கொள்ளை அடிக்கடி நிகழ்ந்துவந்தது. கடலின் இடையே அமைந்த வெள்ளைத் தீவை இருப்பிடமாகக் கொண்டனர் இக்கொள்ளைக்காரர். (சேரன் வஞ்சி, 5.) கொள்ளையர்கள் அடித்த வழிப்பறியால் சேரமன்னர் ஆட்சிக்கு இழுக்கு உண்டாயிற்று.

அதாவது, கலமேறிய வாணிக சரக்கு கரை சேர வேண்டுமே என்ற கவலை வர்த்தகர் மனதைக் கலக்கியது. இவ்வாறு கடல் கொள்ளை அடித்துச் சேர நாட்டுக்குக் கேடிழைத்தவர் கடம்பர் என கூறப்படுகிறது. அத்தகைய கலங்களை அறுத்துச் சேரலாதனும் செங்குட்டுவனும் வர்த்தக வளத்தினைப் பாதுகாத்தனர்.

கடம்பர்கள் கொள்ளை அடிப்பதற்கு மூலதனமாக விளங்கிய தீவு வெள்ளைத் தீவாகும் (இலட்சத் தீவு. மேற்கு நாடுகளிலிருந்து வரும் கப்பல்களைக் கொள்ளையடித்தும் வந்த காரணத்தால் தமிழ் இலக்கியங்களில் இவர்கள் கடற்கடம்பர் என குறிக்கப் பட்டுள்ளனர்.

**சோழர் கடலாட்சி சிறப்பு**

சோழநாட்டுக் கப்பற்படை மிகவும் பழமை வாய்ந்தது. கரிகாலன் என்ற திருமாவளவன் காலத்திற்கு முன்னே காவிரி நாட்டை ஆண்ட சோழன் ஒருவன் கடலாட்சி புரிந்தான் என்பது பழம்பாட்டால் விளங்குகின்றது. கடல்காற்றை ஏவல் கொண்டு கப்பலோட்டிய அக்காவலனை,

**"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி**
**வளிதொழில் ஆண்ட உரவோன்"**[14]

என்ற வரிகளால் அறியலாம்.

**திருமாவளவன்**

இமயமலையில் புலிக்கொடியேற்றிய திருமாவளவன் இலங்கையிலும் அக்கொடியை நாட்ட விரும்பினான். அதனால் கலப்படை எடுத்தான்; கடல் கடந்தான்; இலங்கை அரசனோடு போர் புரிந்து வென்றான்; பன்னீராயிரம் சிங்களவரைச் சிறை செய்து தமிழ் நாட்டிற்குத் திரும்பினான் என்று இலங்கைப் பழங்கதை கூறுகின்றது.

சில நூற்றாண்டுகள் சென்றன. தஞ்சையைத் தலைநகராகக் கொண்ட சோழர் குலம் தலை எடுத்தது. அவர்க்குரிய நிலப்படையும் கலப்படையும் வலுப்பட்டன. பராந்தக சோழன் இலங்கையின்மீது படையெடுத்தான்; சிங்களச் சேனையை வென்றான்; அரசனைக் கொன்றான்; சிங்களாந்தகன் என்னும் சிறப்புப் பெயர் பெற்றான்.

**இராஜராஜன்**

அச்சோழன் வழி வந்த பெருவேந்தன் இராஜராஜன். அவனும் கடல் ஆட்சியில் கருத்தூன்றினான்; கப்பல் படையைச் செப்பம் செய்தான்; தமிழ்க்கடல் முழுதும் ஆளக் கருதினான்; சேர மன்னனுக்குரிய கப்பற்படை நிலையத்தைக் கடல் வழியாகச் சென்று

தாக்கினான். காந்தளூர்ச் சாலையின் அருகே இரு திறத்தார்க்கும் கடற்போர் நிகழ்ந்தது. சோழன் வெற்றி பெற்றான்; கடலாதிக்கத்திற்கு அடிகோலினான்.

**இலங்கையில் வெற்றி**

தமிழகத்தைச் சேர்ந்த குணகடல், குடகடல் என இரு கடல் ஆட்சி செய்த இராஜராஜன் இலங்கையின் மீது படையெடுத்துச் சென்றான். அத்தீவகத்தின் தலைநகரம் அநுராதபுரம் எனப்பட்டது. அங்கிருந்து அரசு புரிந்தான் மகிந்தன் என்னும் மன்னன் அவனைத் தாக்கினான் தமிழ் வேந்தன். தமிழ்ப் படையின் முன்னிகமாட்டாது ஈழப்படை உலைந்து ஓடிற்று. இலங்கை வேந்தனும் மனங்கலங்கித் தலைநகரை விட்டு அகன்றான்.

ஆயிரம் ஆண்டுகளாக இலங்கையின் தலை நகராயிருந்த அநுராதபுரம் அழிவுற்றது. ஈழநாட்டிலே தமிழ்க் கொடியை நாட்டினான் சோழன் அந்நாட்டுக்கு மும்முடிச் சோழமண்டலம் என்று பெயர் இட்டான். **சோழர் ஆட்சிக்கு உட்பட்ட மாகாணங்களில் அம் மண்டலமும் ஒன்றாயிற்று. கேடுற்ற அநுராதபுரத்தைக் கைவிட்டு இராஜராஜன் பொலனருவை என்னும் ஊரைத் தலைநகராக்கினான்; அங்குத் தன் வெற்றியின் சின்னமாக ஒரு சிவாலயம் கட்டினான். தமிழ் நாட்டுக் கட்டுமான முறையில் அமைந்த அக் கற்கோவில் 'சிவ தேவாலயம்' என்ற பெயரோடு இன்றும் அவ்வூரில் விளங்குகின்றது. (சோழர், முதற் பகுதி, 206.)**

**இராஜேந்திரன்**

சோழ மன்னன் இலங்கையைத் தமிழ் நாட்டுடன் இணைத்து ஆள விரும்பினான். எனினும் ஈழத்தரசன் ஊக்கம் இழந்தானல்லன்; வாகை சூடிய தமிழ் வேந்தன் திரும்பிச் சென்றதை அறிந்து

காத்திருந்த இடத்தினின்றும் வெளிப்பட்டான்; பெரும் படை திரட்டினான்;

சோழனது தரைப் படையைத் தாக்கினான். அதையறிந்தான் இராஜேந்திர சோழன். இவன் இராஜராஜனுடைய வீரமைந்தன். தந்தையைப் போலவே அவனும் இலங்கையின் மேற் படையெடுத்தான்; சிங்களப் படையை வென்றான்; மகிந்தனுக்குரிய மணிமுடியையும் பொன்னணியைக் கவர்ந்தான்; அவனையும் சோழ நாட்டிற்குக் கொண்டு சென்றான். ஆயினும், இலங்கைப் போர் ஒடுங்கவில்லை.

நாட்டுரிமையில் வேட்கையுற்ற இலங்கையர், மகிந்தன் மகனாகிய இளம்பாலனை மறைவிடத்தில் வைத்து வளர்த்தார்கள்; மகிந்தன் தமிழ் நாட்டில் இறந்தான் என்றறிந்தபோது அம் மைந்தனை இலங்கையில் மன்னனாக்கினார்கள். அது முதல் ஈழப்படைக்கும் சோழப்படைக்கும் நெடும்போர் நிகழ்ந்த்து. ஈழத்தரசர் பாண்டிய மன்னரோடு உறவுகொண்டார்கள். ஆயினும் தமிழ் நாட்டில் சோழர் ஆதிக்கம் நிலைகுலையும் அளவும் இலங்கையில் புலிக்கொடி பறந்து கொண்டிருந்தது.

**கடாரம் கொண்ட சோழன்**

இன்னும், கடல் சூழ்ந்த பல நாடுகளையும் வென்று வீரப்புகழ் பெற்று விளங்கினர் சோழ மன்னர். இந்து மகா சமுத்திரம் என இந்நாளில் வழங்கும் பெருங்கடலில் வளமார்ந்த தீவங்கள் பல உண்டு. அவற்றுள் பன்னீராயிரம் பழந்தீவுகளை இராஜராஜன் கடற்படையால் வென்று கைப்பற்றினான். அவன் மைந்தன் இராஜேந்திரன் **"அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்திய"** பேரரசன்.

நிக்கபார் என்று இக்காலத்தில் வழங்கும் பகுதி அப்பொழுது தேனடைந்த சோலைத் தீவகமாய் விளங்கிற்று. அதைக்

கைக்கொண்டான் இராஜேந்திரன். இன்னும் சாவக நாட்டை அடுத்துள்ள சுமத்திரா என்னும் தீவிலும் முற்காலத்தில் தமிழர் வாழ்ந்தார்கள் என்பதற்கு ஊர்ப் பெயர்கள் ஒரு சான்று. மலையூர் என்பது இங்கே சிறந்திருந்த ஓர் ஊர். அவ்வூரைத் தன்னகத்தே உடைய நாட்டுப் பகுதியும் மலையூர் என்று பெயர் பெற்றது.

அந்நிலப் பகுதியில் ஓடிய ஆறும் மலையூர் எனப்பட்டது. எனவே, ஆதியில் தமிழர் ஊருக்கமைந்த பெயர், பின்னர் நாட்டுக்கும் நதிக்கும் முறையே அமைந்ததென்று தோன்றுகின்றது. அத்தீவகத்திலுள்ள மற்றோர் ஊரின் பழம் பெயர் பண்ணை என்பது. இப்பொழுது அச்சொல் பன்னி என்றும், பனி என்றும் மருவியுள்ளது. இவ்வூர்களையுடைய தீவகத்தை இராஜேந்திரன் கப்பற்படையால் வென்று கைக்கொண்டான்

மலைவளம் சுரக்கும் மலாய் நாட்டிலும் தமிழர் வாழ்ந்த இடங்களை அவற்றின் பெயர்களே காட்டும். காழகம் என்பது அந்நாட்டின் ஒரு பகுதி. பழங்காலத்தில் காழகத்தில் விளைந்த பொருள் கடல்வழியாகக் காவிரிப் பூம்பட்டினத்தில் வந்து இறங்கியது.

(ஈழத்துணவும் காழகத்து ஆக்கமும் - பட்டினப்பாலை) அதுவே கடாரம் என்றும், கேடம் என்றும் நாளடைவில் மருவி வழங்குவதாயிற்று.

இப்பொழுது கெடா என்ற பெயரால் குறிக்கப்படும் நாடு அதுவே. இன்னும், தக்கோலம் என்பது மலாய் நாட்டிலுள்ள ஓர் ஊரின் பெயர். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே அங்குத் தமிழர் வர்த்தக வளம் பெற்று வாழ்ந்தார் என்பது சாசனத்தால் விளங்கும். இவ்வூர் தக்கோபா என்று இக்காலத்தில் வழங்கும்.

இராஜேந்திரசோழன் கடாரம் முதலிய நாடுகளைக் கப்பற்படையால் வென்றான்; அவ்வெற்றிச் சிறப்பு விளங்கும் வண்ணம் 'கடாரம் கொணடான்' என்னும் விருதுப் பெயரும் பூண்டான். இங்ஙனம் கடல்வழி தம்பெருமையை நிலைநாட்டியமை நிலப்பரப்பு விரிவாக்கியமை அறியமுடிகிறது.

**போர் வல்லமை செய்முறைகளும் தன்மைகளும்**

**வெற்றிச்செயல்கள் - எதிரி நாடுகளை எரிபரந்து அழித்தல்:**

பொதுவாக போரில் தோற்ற நாட்டில் ஏர்பூட்டி உழுது அதில் எருக்கு, கொள் போன்றவற்றை விதைத்து, தன் வெற்றியைப் பறைசாற்றுவது அக்கால அரசர் வழக்கம். பதிற்றுப்பத்து-13இல், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாராட்டும் குமட்டூர்க் கண்ணனார்,

***“கூற்றடூஉ நின்ற யாக்கைபோல***
***உள்ளுநர் பனிக்கும் காடு ஆயினவே***
***பூத்தன்று பெரும நீ காத்த நாடே”***[15]

எனப் பாராட்டுகின்றார். அதாவது, “உன் பகைவர்களின் நாடுகள் எமன் உயிரைக் கவர வந்த மக்களின் உடல்கள் போலக் காண்பவர் நினைத்தாலும் கண்ணீர் விடக் கூடிய காடுகள் ஆயின, ஆனால் நீ காக்கும் நாடு மட்டும் பூத்து வளத்தோடு இருக்கிறது” என்பது கருத்தாக இருந்தது என அறியமுடிகிறது. மேலும், எரியூட்டி எதிரி நகரங்களை அழிப்பதும் வழக்கமாக இருந்தது. இதனை,

***“வாடுக இறைவ நின் கண்ணி, ஒன்னார்***
***நாடுசுடு கமழ்புகை எறித்தலானே”***[16]

என்று பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடுகிறார் காரிகிழார் (புறம். 6). “பிறருடைய நாட்டைச் சுடுகின்ற புகையினால்

உன் மாலை வாடட்டும்" எனப் பாடுவது பிறர் நாட்டை அழிப்பதைக் கவிஞர் ஏற்றுக்கொள்வதைக் காட்டுகிறது.

*"நீயே, பிறர்நாடு கொள்ளும் காலை அவர்நாட்டு*
*இறங்குகதிர்க் கழனிநின் இளையரும் கவர்க.*
*நனந்தலைப் பேர் ஊர் எரியும் நைக்க*
*நின் நெடுவேல் ஒன்னார் செகுக்கினும் செகுக்க"*[17]

என்று பாண்டியன் நன்மாறனைக் காரிக்கண்ணனார் புறநானூறு 57-இல் பாடுகிறார். "நீ பிறர் நாட்டைக் கைப்பற்றும்போது, இளைஞர்கள் நாட்டுக் கழனிகளைக் கொள்ளையடிக்கட்டும். பெரிய ஊர்களைக் கொளுத்தினாலும் கொளுத்தட்டும். உன் வேலும் பகைவரைக் கொன்றாலும் கொல்லட்டும்" என்று சொல்வது போர்க் குற்றங்கள் இயற்றுவதைப் பாராட்டும் செயலே ஆகும்.

*"தாய் இல் தூவாக் குழவிபோல*
*ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே"*[18]

என்று பரணர், இளஞ்சேட்சென்னியைப் பாராட்டுவது, (புறநானூறு 4) உள்ள நிலையை அப்படியே காட்டுகிறது. ஒரு புன்முறுவலோடு இக்கொடுமைகளைப் புலவர்கள் ஏற்றுக்கொண்ட நிலையை நெட்டிமையார் பாட்டில் காணமுடிகிறது.

*பாணர் தாமரை மலையவும், புலவர்*
*பூநுதல் யானையடு புனைதேர் பண்ணவும்*
*அறனோ மற்றிது விறல்மாண் குடுமி,*
*இன்னா ஆகப் பிறர் மண் கொண்டு*
*இனிய செய்தி நின் ஆர்வலர் முகத்தே?"*[19]

என்று பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடும்போது, "பிறரைக் கொடுமைப்படுத்தி, உனக்கு வேண்டிய

புலவர் பாணர் போன்றோருக்கு நன்மை செய்கின்றாயே, இது நியாயமா” என்று கேட்கும் தொனியில் இதை நாம் உணரமுடிகிறது.

**அவமானப்படுத்துதல்**

எதிரி அரசனைத் தோற்கடித்து அவமானப்படுத்தினாலே போதும் என்று கருதினார்கள். இதனை,

*“வந்துஅடி பொருந்தி*
*முந்தை நிற்பின் தண்டமும் தணிதி”*[20]

என்று இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் புறநானூறு 10இல் பாடியுள்ளார். இதனால் காலில் விழுந்து இறைஞ்சினால் வேறு தண்டனை எதுவுமின்றிப் பிற அரசர்களை விட்டு விடுதல் வழக்கமாக இருந்தது என்று அறியப்படுகிறது.

**சிறைப்படுத்துதல்**

பெருவேந்தர்கள் எதிரி அரசர்களைக் கைப்பற்றிச் சிறையில் அடைத்ததாகத் தெரிகிறது. சான்றாகக் கணைக்கால் இரும்பொறை என்னும் சேர அரசனைச் சோழன் செங்கணான் சிறையில் அடைத்திருந்தான். அச்சேர மன்னன் கேட்டபோது உடனே குடிக்கும் நீர் கிடைக்கவில்லை. அதனால் அவன் நீர் குடிக்காமலே உயிர் துறந்தான் என்ற செய்தி கிடைக்கிறது. பாண்டியன் நெடுஞ்செழியன் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைச் சிறையில் அடைத்த செய்தியும் சங்க இலக்கியத்தில் வெளிப்படுகிறதை அறியமுடிகின்றது.

**யானைக்காலில் இட்டு கொலை செய்தல்**

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், மலையமான் திருமுடிக்காரியை வென்றதுடன் நிற்காமல், அவனுடைய மக்களை யானைக்காலில் இட்டு இடற நினைத்தான். இதுவும் போர்க்குற்றமே.

அச்சமயத்தில் கோவூர்கிழார் என்னும் புலவர் மலையமானின் பெருமையை எடுத்துக்கூறி, அந்த இளஞ்சிறுவர்களைக் காப்பாற்றிய செய்தியை புறநானூறு 46ஆம் பாடல் தெரிவிக்கிறது.

**ஒற்றருக்கு மரணதண்டனை வழங்குதல்**

எதிரிநாட்டு ஒற்றர்களுக்கு மரணதண்டனை வழங்குவது அக்காலத்திய செயல். அதனால் நலங்கிள்ளியிடமிருந்து வந்த இளந்தத்தன் என்னும் புலவனை ஒற்றன் எனக் கருதி நெடுங்கிள்ளி கொல்லப்புகுந்ததில் தவறில்லை என்றாலும், அவன் கோவூர் கிழாரின் அறிவுரையை ஏற்று அப்புலவனைக் கொல்லாமல் விட்டான் என்ற செய்தி கிடைக்கிறது.

**பழங்கால போரில் போரியல் குற்றங்கள்**

**நேரங்கடந்து போர் புரிதல்**

***"எல்லையும் இரவும் எண்ணாய், பகைவர்***
***ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலைக்***
***கொள்ளை மேவலை ஆகலின்"***[21]

என்று கரிகாற்சோழனைக் கருங்குழலாதனார் பாடுகின்றார் (புறநானூறு 7). இந்த அடிகளில் இரண்டு செய்திகள் தெளிவாகின்றன. அதாவது, 'எல்லையும் இரவும் எண்ணாய்' என்பதனால் போருக்கு இரவோ பகலோ, அதைப்பற்றிக் கவலையில்லை என்பது. இரவிலும் போர் நடைபெற்றதை இந்தப் பாடலின் வாயிலாக அறியமுடிகிறது.

***"எல்லுப்படவிட்ட சுடுதீ விளக்கம்***
***செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரின் தோன்றப்***
***புலம்கெட இறுக்கும் வரம்பில் தானை"***[22]

என்ற பாண்டரங்கண்ணனார் பாட்டிலும் இரவிலும் அக்காலப் போர்கள் நடந்தன என்பதை அறியமுடிகிறது. சில அறிஞர்கள் ஆநிரைப்போர் மட்டுமே இரவில் நடைபெறும், பிற போர்நிகழ்வுகள் யாவும் பகலிலேயே நடைபெறும் என்று கூறியுள்ளனர். மேற்கண்ட புறநானூற்று அடிகள் அக்கருத்தை மறுக்கின்றன.

**பகைவீரர்களைக் கைப்பற்றலும் தண்டனை தருதலும்**

பகைவீரர்களைக் கைப்பற்றிப் போர்க்கைதிகளாகப் பழங்காலத்தில் வைத்திருந்ததாகத் தெரியவில்லை. மாறாக, அவர்களைத் தம் நாட்டுக்கு அழைத்துவந்து பல்வித வேலைகளுக்காகக் குடியமர்த்தியிருக்கிறார்கள் என்பதை,

**"அசோகன் கலிங்கத்துப் போரில் ஒன்றரை லட்சம் போர் வீரர்களை அடிமையாக்கிக் கொணர்ந்தான் என்று அவனுடைய சாசனங்கள் குறிப்பிடுகின்றன. தரிசு நிலங்களில் விவசாயத்திற்கென அவர்கள் குடியேற்றப்பட்டனர் என்று நாம் யூகிக்கலாம்"**[23]

என்று ரொமிலா தாப்பர் குறிப்பிடுகின்றார். இதேபோல் கரிகால் சோழனும் இலங்கைமீது படையெடுத்துப் பல்லாயிரக்கணக்கான வீரர்களைக் கொண்டு வந்து காவிரிக்குக் கரைகட்டினான் என்று சங்க இலக்கியத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தோற்றுப்போன யவனவீரர்களைப் பின்கட்டாகக் கட்டி தலையில் எண்ணெய் ஊற்றி அழைத்துவந்தான் என்ற குறிப்பு வருகிறது. இவ்வாறே பகைமன்னர்களின் அந்தப்புரப் பெண்களைக் கைப்பற்றி ஏவல் மகளிராக ஆக்கிக்கொள்வதும் வழக்கம். இவர்கள் கொண்டிமகளிர் எனப் பட்டனர்.

**போரில் ஈடுபடும் சிறுவர்கள்:**

உலகம் முழுவதும் இன்று சிறுவர்கள் ஆயுதப் போராட்டத்தினால் பாதிக்கப்பட்டவர்களாக உள்ளனர். பலசமயங்களில் அவர்கள் கடத்தப்பட்டும் கட்டாயப்படுத்தியும் இன்றைய போர் படைகளில் சேர்க்கப்படுகின்றனர். பழங்காலத்தில் சிறார்கள் இப்படி கடத்தப்பட்டுப் படைகளில் சேர்க்கப்பட்டதற்கான குறிப்புகள் இல்லை. என்றாலும், சிறுவர்களும் போரில் ஊக்கத்துடன் அக்காலச் சமூகத்தினால் ஈடுபடுத்தப்பட்டதை இலக்கியக் குறிப்புகள் காட்டுகின்றன.

சான்றாக, புறநானூற்றில், "இரு தினங்களுக்கு முன் தன் தந்தையைப் பறிகொடுத்த ஒரு பெண் முந்திய தினத்தில் கணவனைப் பறிகொடுத்தாள். இன்று போர்ப்பறை கேட்டதும் அவள் தன் ஒரே மகனை, இளஞ்சிறுவனைக் கையில் வேல்தந்து போருக்கு அனுப்பிவைத்தாள்" என்றசெய்தி புறநானூற்றில் வருகிறது.

அவற்றில் "போரில் என் மகனுக்கு முதுகில் காயம் பட்டிருந்தால் அவனுக்குப் பாலூட்டிய என் மார்பை அறுத்தெறிவேன்" என்று சூளுரைத்தாள் ஒரு பெண். தன் மகன் மார்பில் காயம் பட்டு மாண்டு கிடப் பதைக் கண்ட பெண் ஒருத்தி அவனைப் பெற்ற நாளில் உற்ற மகிழ்ச்சியைவிட அதிகமான உவகை கொண்டாள் என்றும் சங்க இலக்கியக் கவிதை சொல்கிறது. இன்னொரு தாய் சொல்கிறாள்:

***"சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்***
***யாண்டுளனோ என வினவுதி என்மகன்***
***யாண்டுளன் ஆயினும் அறியேன் ஓரும்***
***புலிசேர்ந்து போகிய கல்லளைபோல***
***ஈன்ற வயிறோ இதுவே***
***தோன்றுவன்மாதோ போர்க்களத்தானே."[24]***

“என் மகன் எங்கிருக்கிறான் என்று எனக்குத் தெரியாது, ஆனால் அவன் போர்க்களத்தில்தான் நிச்சயமாக இருப்பான்” என்கிறாள். இவையனைத்தும் அக்காலத்தில் சிறுவர்கள் போரில் ஈடுபட்ட அல்லது ஈடுபடுத்தப்பட்ட செய்தியைத் தெரிவிக்கின்றன.

சிறுவர்கள், கட்டாயமாகப் போர்புரிய அனுப்பப்பட்டிருந்தால் போரைவிட்டு ஓடி வந்துவிடுவதும் நிகழ்ந்திருக்கக்கூடும்.

***“ஆய்பெரும் சிறப்பின் சிறுவன் பெயரத்***

***தாய்தப வரூஉம் தலைப்பெயல் நிலையும்”*** [25]

என்ற தொல்காப்பியத் தொடருக்கு “போர்க்களத்தில் சிறுவன் புறமுதுகிட்டான் எனக் கேட்டுத் தாய் வருந்தி வரும் தலைப்பெயல்நிலைக் காஞ்சியும்” என்று உரையாசிரியர்கள் பொருள் தருகின்றனர்.

மன்னர்களே சிறுவயது முதலாகப் போரில் ஈடுபட்டனர் என்று சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன. சான்றாக, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் சிறுபிள்ளையாக இருந்தபோதே போர்செய்தவன் என்று புறநானூறு 77 குறிப்பிடுகிறது. “இவ்வளவு இளஞ்சிறுவனாக இருக்கும்போதே மிக்க வீரத்தோடு போர் செய்கின்றானே யார் இவன்?” என்று கேட்கும் புலவர் இடைக்குன்றூர் கிழார்,

***“தார்பூண்டு தாலி களைந்தன்றும் இலனே,***

***பால்விட்டு அயினியும் இன்று அயின்றனனே”*** [26]

என்று கூறுவதை மிகையான கூற்று என்று வைத்துக் கொண்டாலும், பாண்டியன் சிறுவனாகவே இருந்ததை இப்பாட்டு அழுத்தமாகக் குறிப்பிடுகிறது என்று கருதலாம். மன்னன் எவ்வழி குடிகள் அவ்வழி

என்பார்கள். அரசனே சிறுவயது முதல் போரிட்டான் என்றால், குடிமக்களும் அவ்வாறே இருக்க முனைந்ததில் ஆச்சரியமில்லை.

**தமிழ்நாட்டு நிலப் போர்களும் வெற்றி வரலாறுகளும்**

வடநாட்டு வம்பமோரியர் திக்கெட்டும் வெல்வோம் என்று தோள் கொட்டி ஆர்த்துத் தென்திசை நோக்கி வந்தபோது அவர் படை வெள்ளத்தைத் தடுத்துப் போர்ப்புரிந்தான் பழையன் என்னும் தமிழ் வீரன். அப்போது வம்பர் படைத்திறம் தமிழ் நாட்டில் முனைந்து செல்ல மாட்டாது மடங்கி அடங்கிற்று. (இந்தியர் வரலாறு (எஸ்.கே. கோவிந்தசாமி) ப. 96.) அன்றியும் அசோகன் போன்ற அருந்திறல் அரசர்களும் தமிழ் நாட்டின் தன்னரசை மதித்தார்கள். அந்நாளில் வர்த்தகம் கருதி வந்த பிற நாட்டாரைத் தமிழ்நாடு வரவேற்றது; அவரோடு வேற்றுமையின்றிக் கலந்தது ஆனால், தண்டெடுத்து வந்தவரைத் தட்டி முறித்தது என்பதறியப்படுகிறது.

**நிலம் போற்றும் பெருமைமிகு மன்னர்கள்**

தமிழ்நாட்டு முடிவேந்தருக்குள் அடிக்கடி போர் நிகழ்ந்ததுண்டு. சோழ மன்னரில் திருமாவளவனும், பாண்டிய மன்னரில் நெடுஞ்செழியனும் தாமாகவே தலையெடுத்த பெரு வீரர். இளமையில் அரியணை ஏறினான் திருமாவளவன். எளிதில் அவனை வெல்லலாம் என்று கருதினர் பகை வேந்தர். பாம்பு சிறியதாயினும் பெருங்கழியால் அடித்தல் வேண்டும் என்பது அவர் கொள்கை. ஆதலால் சேரனும் பாண்டியனும் பெரும்படை திரட்டினர். சிற்றரசர் பதினொருவர் அவருடன் சேர்ந்தனர். நேசப் பெரும்படை வளவனுக்குரிய நாட்டின்மேற் சென்றது. அப்படையின் வருகையை ஒற்றர் வாயிலாக அறிந்தான் வளவன்; ஊக்கம் உற்றான். மண்ணாசை பிடித்த மாற்றார் அனைவரையும் ஒருங்கே அடித்து

முடிப்பதற்கு நல்லதோர் வாய்ப்பு நேர்ந்தது என்று எண்ணி மன மகிழ்ந்தான்.

வெண்ணிப் போர் சோழியப்படை காற்றெறி கடலெனக் கதித்தெழுந்தது. ஆத்திமாலை அணிந்த திருமாவளவன் முன்னணியில் பெருமிதமாகச் சென்றான். வெண்ணியூரின் அருகே இரு திறத்தார்க்கும் வெம்போர் நிகழ்ந்தது. போர்க்களத்தில் பாண்டியன் அடிபட்டு விழுந்தான்; ஆவி துறந்தான். சேரன் மார்பில் ஓர் அம்பு பாய்ந்து புறத்தே போயிற்று. குறுநில மன்னர் குன்று முட்டிய குருவிபோல் வீறு குன்றி ஓடினர். வளவன் வாகை மாலை சூடினான். கவிகள் பாமாலை சூட்டினர். இதனை,

**"இருபெரு வேந்தரும்**
**ஒருகளத் தவிய வெண்ணித் தாக்கிய**
**வெருவரு நோன்தாள் கண்ணார்**
**கண்ணிக் கரிகால் வளவன்"**[27]

என்ற வரிகளால் திருமாவளவன் பெற்ற வெற்றியை மேற்கண்ட வரிகளால் அறியமுடிகின்றது.

**நெடுஞ்செழியன்**

தமிழ்நாட்டை அரசாண்ட மற்றொரு வீர மன்னன் நெடுஞ்செழியன். அவன் கருவிலே திருவுடையவன்; அஞ்சாத நெஞ்சினன்; செஞ்சொற் கவிஞன். இளமையிலே அவன் அரசாளும் உரிமை பெற்றான். இளமையை எளிமையாகக் கருதினர் மற்றைய இரு வேந்தரும்; படைத்திறமற்ற சிறுவன் என்று ஏளனம் பேசினர். அதனை ஒற்றர் வாயிலாக அறிந்தான் செழியன். பெருஞ் சீற்றமுற்றான். மாற்றார் என் நாட்டைப் பழித்தனர்; என்னையும் இழித்துரைத்தனர். சிறு மொழி பேசிய அவ்வரசரைச் சிதற அடிப்பேன்; சிறை பிடிப்பேன்; வெற்றி பெறுவேன். பெறேனாயின்

என் குடிகள் என்னை இகழ்க; "மாபெரும் புலவர்கள் என் நாட்டைப் பாடாதொழிக" என்று வஞ்சினம் கூறினான்; போர்க்கோலம் கொண்டு எழுந்தான். இதனை,

**"சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை**
**அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு**
**ஒருங்கு அகப்படே எனாயின் பொருந்திய**
**என்னிழல் வாழ்நர் செல்நிழல் காணாது**
**கொடியன்எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்**
**குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக"[28]**

என்ற மேற்கண்ட அடிகளால் இதனை அறியமுடிகிறது.

**தலையாலங்கானப் போர்**

தலையானங்கானம் என்னும் இடத்தில் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கும் சேரன் யானைகட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறைக்கும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்கும் இடையே நடைபெற்ற போரே தலையாலங்கானத்துப் போர் என்பதாகும்.

**"தலையாலங்கானம் என்பது சோழ நாட்டில் தற்போது தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த நன்னிலம் வட்டத்திலுள்ள ஓர் ஊர், பிற்காலங்களில் இது தலையாலங்காடு என்று வழங்கியது. தேவாரக் காலங்களில் இது திருநாவுக்கரசரால் பாடப்பெற்ற சிவநெறிக்குரிய திரு திருப்பதியாயிற்று" என்கிறார் கா. அப்பாதுரை.**

தலையலங்கானத்தில் மாற்றாரைத் தாக்கினான். வாகை மாலை சூடினான். "தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன்

நெடுஞ்செழியன்" என்று தமிழகம் அவனைப் பாராட்டி மகிழ்ந்தது. "தலையாலங்கானத்தில் தன்னொக்கும் இரு வேந்தரைக் கொலை வாளில் தலை துமித்து" என்று கி. பி. பத்தாம் நூற்றாண்டில் வரையப்பட்ட சின்னமனூர்ச் செப்பேடுகளில் இச் செய்தி கூறப்படுகின்றது. இங்ஙனம் அந்நிலம் வென்று பெற்றமையால் நிலம் அடைமொழியாய் பெற்ற போர் வல்லமை உணரப்படுகிறது.

**உறந்தைப் போர்**

பழங்காலத்தில் உறந்தையில் அரசாண்ட வளவன் ஒருவனைத் தாக்கினார் பகையரசர். பகல் முழுவதும் போர் நடந்தது. அந்தி மாலையில் சோழியப் படைநிலை குலைந்தது. போர்வீரர் புறங்காட்டி ஓடினர். சோழனைச் சிறை பிடிக்க மாற்றரசர் நாற்றிசையும் துருவித் திரிந்தார்கள். மாறு கோலம் புனைந்து, நழுவியோடினான் வளவன்.

காரிருள் அவனுக்குப் பேரருள் புரிந்தது. பொழுது புலருமுன்னே நடு நாட்டில் உள்ள முள்ளூர் மலையைச் சென்றடைந்தான் அம் மன்னன் மலையமான் மரபில் வந்த திருக்கண்ணன் என்ற குறுநில மன்னன் அப்போது முள்ளூர்க் கோட்டையை ஆண்டுவந்தான். அவன் தஞ்சமடைந்தோரைத் தாங்கும் தகைமை வாய்ந்தவன்; வருந்தி வந்தடைந்த வளவனை அவன் வரவேற்றான்; கோட்டையில் வைத்து ஆதரித்தான். இதனை,

**“இருள் கண் கெடுத்த பருதி ஞாலத்து**
**இடும்பை கொள் பருவரல் தீரக்கடுந்திறல்**
**அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு**
**அரசு இழந்திருந்த அல்லற்காலை**
**முரசு எழுந்து இரங்கும் முற்றமொடு கரைபொருது...**
**செருப்புகல் மறவர் செல்புறம் கண்ட**
**எள்அறு சிறப்பின் முள்ளூர் மீமிசை**

**அருவழி இருந்த பெருவிறல் வளவன்**

**மதிமருள் வெண்குடை காட்டி அக்குடை**

**புதுமையின் நிறுத்த புகழ் மேம்படுந"[29]**

என்ற மேற்கண்ட அடிகளால் புறமுதுகிட்ட வளவை நல்லறங்கள் கூறி திருக்கண்ணன் மீண்டும் சோழனை அவனது நாட்டுக்குத் தலைமை ஏற்க வைத்தான் என்பதை அறியமுடிகிறது.

**காரியாற்றுப் போர்**

காரியாறு என்னும் இடத்தில் சோழன் நலங்கிள்ளிக்கும், நெடுங்கிள்ளிக்கும் இடையே மீண்டும் நடைபெற்ற போரே காரியாற்றுப் போர். இப்போரில் இருபெருவேந்தர்களும் நேருக்கு நேர் நின்று மறப்போர் புரிகின்றனர் என்பதை,

**"துஞ்சு புவி இடறிய சிதடன் போல**

**உய்ந்தனன் பெயர்தலோ அரிதே மைந்துடைன்**

**கழைதின் யானைக் கால் அகப்பட்ட**

**வண்திணி நீள் முளை போல அவண்"[30]**

என சோழன் நலங்கிள்ளியை எதிர்த்து வந்த பகைவர் வருந்தும்படி போர்ச் செய்யும் ஆற்றல் உடையவன் என்று இப்பாடல் உணர்த்துகிறது.

**திருப்போர்புறம் போர்**

சோழர்களின் ஆட்சிப் பகுதியில் சிறந்த வளமைப் பெற்ற பகுதிகளில் ஒனறான திருப்போர்புறம் எனும் இடத்தில் நடைபெற்ற போர் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி என்ற மன்னனுக்கும், குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் இடையே நடைபெற்றது. இருபெரு வேந்தர்களும்,

“வேங்கையுடன் எதிர்த்ததுபோல் எதிர்த்து நின்று பொருதனர். இருபுறத்துப் படைகளும், அரசரும் முற்றிலும், சரிசம வலிமை உடையவராகவும், வீரமுடையவராகவும் இருந்ததால், இருவருக்குமே வெற்றி கிட்டவில்லை. அதுமட்டுமின்றி இரு பெரும்படைகளும் சாகும்வரை போரிட்டு மடிந்தன. இரு பேரரசர்களும் ஒருவர் மீது ஒருவர் மும்முரமாகத் தாக்கிப் போர் செய்து இறந்தனர். போர்க்களத்தில் வெற்றி இரு வேந்தருக்குமே கிட்டாமல் கூற்றுவனுக்கும், அவன் போர்ப்படைகளுக்கும் கிட்டிற்று” என்கிறார் கா. அப்பாதுரை. இதனை,

**“எனைப்பல் யானையும் அம்பொடு துளங்கி**
**விளைக்கும் வினையின்றிப் படையொழிந்தனவே**
**……………………………………………………**
**பொறுக்கு நர் இன்மையின் இருந்து விளிந்தனவே**
**சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென**
**வேந்தரும் பொருது களத்து ஒழிந்தர்”**[31]

என்று பரணர் திருப்போர்புறம் போர் பற்றிக் கூறுகிறார் என்பதை அறியமுடிகிறது.

**திருக்கோவலூர்ப் போர்**

திருக்கோவலூர் என்னும் இடத்தில் சோழன் கிள்ளிவளவனுக்கும், குறுநில மன்னனாகிய மலையமான் திருமுடிக் காரிக்கும் இடையே நடைபெற்ற போர் திருக்கோவலூர்ப் போராகும். இப்போரில் மலையமான் திருமுடிக்காரி தோல்வியடைந்து களத்திலே இறக்கிறான். மேலும் போர்க்களத்திலே கிள்ளிவளவன் மலையமான் மக்களை அழிக்க முற்படும் போது புலவர் கோவூர்க் கிழார் அவனைத் தடுத்து பிள்ளைகளைக் காப்பாற்றினார் என்பதை,

*"களிறு கண்டு அழூஉம் அழாஅல் மறந்த*

*புன்தலைச் சிறாஅர் மன்று மருண்டு நோக்கி*

*விருந்தின் புண்கணோ உடையார்*

*கேட்டனை ஆயின் நீ வேட்டது செய்ம்மே"*[32]

எனும் புறப்பாட்டுமூலம் கோவூர்கிழார் கிள்ளிவளவனிடமிருந்து மலையமான் மக்களைக் காப்பாற்றியதை அறியமுடிகிறது.

**நேரிவாயில் போர்**

நேரிவாயில் எனும் இடத்தில் சோழன் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் இடையே நடைபெற்ற போரே நேரிவாயில் போர் ஆகும். இதனை கோவூர் கிழார் என்னும் புலவர்.

*"வினைபுனை நல்இல் இனை கூஉக் கேட்பவும்*

*இன்னாது அம்ம, சங்கு இனிது இருத்தல்*

*………………………………………………*

*…………………………………………………*

*திறவாது அடைத்த திண்நிலைக் கதவின்*

*நீள்மதில் ஒரு சிறை ஒடுங்குதல்*

*நாணுத்தகவு உடைத்து, இது காணுங்காலே"*[33]

என்ற மேற்கண்ட பாடலடிகள் சோழன் நலங்கிள்ளி வெற்றி பெறுகிறான் என்பதை நேரிவாயில் போர் உணர்த்துகிறது.

**புறம் போற்றும் பண்பாட்டுச்செயல்கள்**

**போரில் நடுநிலை:**

போர்க்களத்தில் நடுநிலைமை என்று கூறுவது நண்பர்கள், உறவினர்கள் எனப் பாராமல் தம்மை எதிர்த்த பிறநாட்டு வீரர்களுடன் போர் செய்யும் போது வேண்டியவர் இவர் -

வேண்டாதவர் இவர் என்று பாராமல் போரிடுவர். இதனையே போரில் நடுநிலை என்பார்.

**“வெண்குடை மதியம் மேல் நிலாத் திகழ்தர**

**கண்கூடு இறுத்த கடல் மருள் பாசறை**

**குமரிப்படை தழிஇய கூற்று வினை ஆடவர்**

**தமர் பிறர் அறியா அமர் மயங்கு அழுவத்து”[34]**

எனப் பெருந்தலைச் சாத்தனார் பாடியுள்ளார்.

**விழுப்புண்:**

போர்க்களத்தில் பகை வீரர்களுக்கு எப்போதும் அஞ்சாமல் எதிர்த்து நின்று போரிடும்போது அவர்களின் வாள், வேல், அம்பு போன்ற உள்ளிட்ட கருவிகளால் மார்பில் உண்டான பெரும் காயங்களே விழுப்புண் என்பர். தமிழர் விழுப்புண்களை வீரத்திற்குக் கிட்டிய பரிசாக, வெகுமதியாகக் கருதுவர்.

கடந்து போன வாழ்நாட்களில் விழுப்புண்படாத நாட்களை எல்லாம், தான் தவறவிட்ட நாட்களுள் சேர்ப்பவனே நல்ல வீரன் என்கிறார் திருவள்ளுவர் (குறள். 776) வாளினது நுனிப்பட்டு அடையாளம் உண்டாக்கிய விழுப்புண்களை மாட்சிமைப்பட்ட தழும்புகள் எனப் பெருமையைக் குறிப்பிட்டிருப்பதை,

**“வண்முகம் பொறித்த மாண்ரி யாக்கையர்”[35]**

என்ற பாடல் அடிகள் வழி காணலாம்.

போரில் விழுப்புண் பெறாது நோய் போன்ற பிற காரணங்களினால் இறப்பவர்களை வாளால் வடுசெய்து அதன் பின்னரே அடக்கம் செய்திருக்கின்றனர். இதற்கு ‘வாள் போழ்ந்தடக்கல்’ என்று பெயர். வாள்போழ்ந்தடக்கல் என்ற

நிலையைக் காட்டிலும் போரில் விழுப்புண் பெற்று அதனால் மாய்தல் சிறந்த வீரமாகப் போற்றப்பட்டிருக்கிறது. வாள்போழ்ந்தடக்கலைச் சிறுமையாகக் கருதியதை,

**“………………… பீடின் மன்ர்**
**நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்**
**கரின் மறந்தவர் தீதுமருங் கறுமா**
**அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்**
**திறம்புரிய பசும்புற் பரப்பிர் கிடப்பி**
**மறங்கத் தாசு நல்லமா; வீழ்ந்த**
**நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென**
**வாள்போழ்த் தடக்கலு முயந்தர் மாதோ”**[36]

என்ற அடிகளால் அறியமுடிகிறது. விழுப்புண்களால் உண்டாகும் வீரச்சிறப்பு வீரர்கள் வாழ்வில் எப்போதும் எண்ணத்தக்கது. போர் முறைகளிலும், புறவாழ்வு முறையிலும் சிறப்புமிகு வாழ்வினைப் பல வழிகளிலும் போற்றியுள்ளார்.

**மறப்பண்பு**

பொதுவாக அக்கால தமிழர் வாழ்வில் மானம், அவமானம் பெரியதாகக் கருதப்பட்டது. ‘மயிர் நீக்கின் உயிர் வாழ கவுரி மான் அன்ன’ என்பதை போல ஒவ்வொருவரும் மானம் பெரிதென வாழ்ந்தனர்.

சான்றாக, சேரமான் கணைக்காலிரும்பொறை என்பவன் சோழன் செங்கணானுடன் போர்ச் செய்துத் தோற்று சோழனால் சிறையிடப் பட்டிருந்தபோது நீர் வேட்கையால், தண்ணீர் கொண்டு வா எனக் காவலர்களைப் பணித்தான். அவன் அதற்கு அவமதித்துக் காலம் தாழ்த்தி நீர் கொண்டு வந்தான். அந்த அவமானத்தைப்

பொறுக்காமல் சிறையிலேயே தன்னுயிரை மாய்த்துக்கொள்கிறான் சேரமன்னன் என்பதை அறியமுடிகிறது.

அரச குடியிலே குழந்தை இறந்து பிறந்தாலும், தசைப் பிண்டமாகப் பிறந்தாலும், அவற்றை வாளால் வடு செய்தே அடக்கம் செய்வர். அக்குடியிலே பிறந்த நான் இரந்து இந்நீரை அருந்த மாட்டேன் எனக்கூறி இறக்கிறான் என்பதை,

**"குழனி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்**
**ஆளன் றென்று வாளிற் றப்பார்**
**தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரிஇய**
**கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்**
**மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்**
**தாமிரந் துண்ணு மளவை**
**ஈன்ம ரோவிவ் வுலகத் தானே"**[37]

என்றப் பாடல் அடிகளால் அறியலாம். இதனால் இறந்து பிறக்கும் குழந்தைக்குக் கூட விழுப்புண் உண்டாக்கும் மறப்பண்பும், சேரனின் மானப்பண்பும் புலனாகும்.

**புறங்கொடாதல்:**

போர்க்களத்தில் துணிவுடன் முன்வைத்த காலைப் பின் வைக்காது வீரமுடன் போர் செய்பவரே உண்மையான வீரர். அவ்வாறில்லாமல் பகைவர்களைக் கண்டு அஞ்சி புறம் காட்டி தப்பி ஓடுவது வீரர்களுக்கு அழகல்ல. புறங்கொடுத்து அஞ்சி ஓடுபவரைக் கண்டு எள்ளி சமூகத்தார் நகையாடுவர். போரில் புறங்காட்டிப் ஓடுபவர்கள் பின்சென்றும் தாக்க மாட்டார்கள்.

வீரன் மார்பில் புண்பட்டாலே அவை வீரத்தின் அடையாளமான விழுப்புண் எனப் பார்க்கப்பட்டது.

அவ்வாறில்லாமல் முதுகில் புண்பட்டால் புறப்புண் எனச் சமூகத்தார் தூற்றும் நிலையே பெரிதும் காணப்படுகிறது.

**“கடுந்தடு தானைச் சேர லாதனை**
**யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்**
**பொழுதென வரைதி புறங்கொடுத் திறத்தி**
**மாறி வருதி மலை மறைந் தொளித்தி**
**அகலிரு விசும்பி னானும்**
***பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே”[38]***

என்ற இவ்வரிகள் முகில் காயம் பட்ட நிலையிலும் புறமுதுகிடாத நின்ற பகைவர்களின் அஞ்சாமைத் திறத்தினை இங்கு களவழி நாற்பது காட்டும் போர் அறமாகக் கருதப்படுகின்றன.

**விழுப்புண் புறப்புண்**

போர்க்களத்தில் முகத்திலும் மார்பிலும் புண்பட்ட வீரனை எல்லோரும் இன்முகமாய்ப் போற்றுவர். "விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள் வைக்கும்தன் நாளை எடுத்து." விழுப்புண் - முகத்திலும் மார்பிலும் பட்ட புண் என்று உரைத்தார், பரிமேலழகர். விழுப்புண் பெற்றால் என்று வியந்து பேசுவர்; வீரக்கல் நாட்டி வணக்கம் செலுத்துவர். ஆனால், புறத்திலே புண்பட்ட வீரனை எல்லோரும் இகழ்ந்து பேசுவர். ஏனெனில் போர்க்களத்தில் புறங்காட்டி அஞ்சி ஓடியவற்கு அடையாளமாகிய அப்புண்ணைப் பார்க்கும் பொழுதெல்லாம் மக்கள் பழித்தும் இழித்தும் பேசுவது தமிழ்நாட்டின் மரபில் இருந்தது எனலாம். ஆதலால் ஒரு மானமுள்ள வீரர் ஒருபோதும் புறப்புண் தாங்கி உயிர் வாழமாட்டார் அல்லது இசையார். வீர விழுப்புண் பெற்றவர்க்கு அந்நிலம் பெருமைத் தந்துப் போற்றும் என்பதை அறியமுடிகிறது.

**வடக்கிருத்தல்**

வடக்கிருத்தல் என்பதற்கு பெருஞ்சேரலாதன் என்னும் சேர மன்னன் வரலாறு (இவ்வுண்மைக்கு) ஓரு எடுத்துக்காட்டாகும். வெண்ணிப் போர்க்களத்தில் புறப்புண்பட்டதாக எண்ணினான் சேரன். அப்போதே உயிரை வெறுத்தான்; உண்ணா நோன்பிருந்து உயிர் விடுத்தான் என்பது என்றென்றும் நிலம் போற்றும் மறப் பண்பின் அவசியம் உணர்த்துகிறது.

**“சென்றமாக் கடந்தநின் னாற்ற றோன்ற**
**வென்றோய் நின்னினு நல்ல னன்றே**
**கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**
**மிகப்புக ழுலக மெய்திப்**
**புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே”**[39]

என்ற மேற்கண்ட அடிகளால் வடக்கிருந்து உயிரிழத்தலைப் புரிந்துக் கொள்ளமுடிகிறது.

**தமிழரின் வீரம் செறிந்த விளையாட்டுகள்**

**வேட்டையாடல்**

தமிழ் நாட்டு மலைகளிலும் காடுகளிலும் பல வகையான விலங்குகள் உண்டு. அவற்றுள் உருவிலும் திருவிலும் உயர்ந்தது யானை. வீரம் உடையது வேங்கை. கடுமை வாய்ந்தது கரடி. கொழுமைச் சான்றது பன்றி. இவை பகற்பொழுதில் மரமடர்ந்த தூறுகளிலும் மலைக்குகைகளிலும் மறைந்து வாழும். பல்வகை விலங்குகளையும் வேட்டையாடினர் சங்க மக்கள்.

## ஏறுகோள்

காளையின் கொம்பைப் பிடித்தல் ஆண்மை, வாலைப் பிடித்தல் தாழ்மை என்பது தமிழர் கொள்கை. வாலைப் பிடித்தவன் காளையின் காலால் உதைபட்டு மண்ணிடை வீழ்வான். ஆதலால் கொம்பைவிட்டு வாலைப் பற்றுதல் கோழையின் செயல்; தோல்வியின் அறிகுறி. காளைப் போரில் வெற்றி பெற்ற இளைஞரை ஆயர் குலம் வியந்து நோக்கும்; இள நங்கையர் கண்கள் நயந்து பார்க்கும்.

ஏறுடன் போராட முனைவோர் எல்லாம் வெற்றி பெறுவதில்லை. கொம்பை நாடிச் சென்ற இடத்தில் தீங்கு விளைதலும் உண்டு. பிடி தப்பினால் அடிபட்டு விழுவர். எக்கசக்கமாய் அகப்படாமல் இடர்ப்படுவர்; காளையின் கொம்புகளால் குத்துண்டு குடலறுந்து குருதி வடிப்பர். இங்ஙனம் ஈனமுற்ற இளைஞர் நிலை கண்டு ஆயர் வருந்துவர்; ஆர்வமொழிகளால் அவர் துயரத்தை ஆற்றித் தேற்றுவர். வெற்றி பெற்ற காளையும் வீழ்ந்த இளைஞருக்கே வெம்மை நீத்து வாடி நிற்கும். பேராண்மையின் அணியாகிய ஏறாண்மை கண்டு ஆயர்குல வீரர் அகங்களிப்பர்.

## மறமகள்

போர்க்களத்தில் யானையுடன் பொருது உயிரிழந்த வீரரும் பெரும் புகழ் பெற்றார்கள். நெடுங்காலம் பிள்ளையில்லா ஒரு மாது முதுமைப் பருவத்தில் ஒரு புதல்வனைப் பெற்றாள். மலடி பெற்ற மகன் என்று ஊரார் மறைவாகப் பேசினர். அம் மகன் காளைப்பருவம் எய்தியபோது தாயின் தலை கொக்கிறகு போல் வெளுத்தது. அந் நிலையில் நாட்டிலே ஒரு போர் மூண்டது. போர்க்களம் செல்ல ஆசைப்பட்டான் மைந்தன். தன் முதுமையும் கருதாது, அவன்

அருமையும் பாராது உடனே ஆசி கூறி அனுப்பினாள் அத் தாய். அமர்க்களத்தில் ஒரு யானையோடு போர் செய்தான் அவ் வீரன்; அவ் விலங்கைக் குத்திக் கொன்றான்; அந்தக் களத்தில் தானும் விழுந்து மடிந்தான். அச் செய்தியைக் கேட்டாள் தாய்; பிறவிப் பயனைப் பெற்றவள்போல் பேரின்பம் உற்றாள்.

**"களிறெறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே"[40]**

என்று அவ் வீரத் தாயைப் புகழ்ந்தார் ஒரு புலவர்.

**வயிற்றை அறுத்த வீரத்தாய்**

இத்தகைய இன்பம் கிட்டாதவள் மற்றொரு தாய். அவள் மகனும் போர்க்களம் போந்தான். ஆனால், பகைவரை வென்றானல்லன். ஒரு யானையின் மீது வேற்படையை வீசினான். அவ்யானை விழுந்து படவில்லை; வேலோடு ஓடிவிட்டது. அப்போது வெறுங் கையனாய்த் திரும்பினான் மைந்தன்; வீடு வந்து சேர்ந்தான். போர்க்களத்தில் நிகழ்ந்ததை அறிந்தாள் அவன் தாய்; மிக வருந்தினாள்; இதுவரை இவ்வாறு யானையைப் போகவிட்டுப் புறங்காட்டித் திரும்பியவன் என் குடியில் யாருமில்லை. என்றுமில்லாத வசை இன்று உன்னால் வந்தடைந்ததே என்று எண்ணி வருந்தினாள் என்பதை,

**"எம் இல் செய்யாப் பெரும்பழி செய்த**
**எல்லாக் காளையை ஈன்ற வயிறே"[41]**

என்று மனம் நொந்து இவனைப் பெற்ற பாழும் வயிற்றைப் பீறி எறிவேன்" என்று சீறி எழுந்தாள் என்பதை அறியமுடிகிறது.

**நிலமகள் வீரமகளிர்**

ஒரு சிற்றூரில் குடிசையில் வாழ்ந்தாள் மற்றொரு மாது. அவளைக் காண வந்தாள் ஓர் இள நங்கை. தாயே! தள்ளாத வயதில் இக்குடிசையில் தன்னந்தனியாக இருக்கின்றாயே. உன் மகன் எங்கே?" என்று கேட்டாள். அம்மா, என் மகன் எங்கே போனானோ நான் அறியேன். புலியிருந்த குகை போல் அவனைப் பெற்ற வயிறு இதுவே என்பதை,

**"சிற்றில் நல்தூண் பற்றி, நின்மகன்**
**யாண்டு உள்னோ? என வினவுதி என்மகன்**
**யாண்டு உளன்ஆயினும் அறியேன் ஓரும்**
**புலிசேர்ந்து போகிய கல் அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவே"[42]**

என்ற மேற்கண்ட பாடலடிகள் வழி என்மகனை இங்குக் காணாவிட்டாலும் அவனைப் போர்க்களத்திலே காணலாம் என்றாள் வீரத் தாய்.

**வீர உள்ளம்**

ஓர் ஊரிலே கடும்போர் நடந்தது. வீட்டுக்கொரு வீரன் போர்க்களம் போந்தான். மாதர், விருப்புடன் ஆடவரை வழி அனுப்பினர். ஒரு மாது, முதல் நாள் நடந்த போரில் தமையனை இழந்தாள்; மறுநாள் நடந்த போரில் கணவனை இழந்தாள். பின்னும் போர் நின்ற பாடில்லை. குடும்பத்தில் சிறு பையன் ஒருவனே எஞ்சி நின்றான். காலையில் போர்ப் பறை முழங்கிற்று; வீரரைப் போர்க்களத்திற்கு அழைத்தது; அது கேட்டு எழுந்தாள் அம் மாது. இரு நாளிலும் போர் புரிந்து இறந்து பட்ட தமையனையும் தலைவனையும் நினைந்து அவள் தயங்கவில்லை. அருமைப் பிள்ளையை அன்போடு அழைத்தாள்; வெண்மையான ஆடையை உடுத்தாள்; தலையைச் சீவி

முடித்தாள்; வேலை எடுத்துக் கையிலே கொடுத்தாள்; போர்க்களத்தை நோக்கி அவனை விடுத்தாள் என்பதை,

**"வேல் கைக் கொடுத்து, வெளிது விரித்து உடீஇப்**
**பாறு மயிர்க்குடுமி எண்ணெய் நீவி**
**ஒருமகன் அல்லது இல்லோள்**
**செருமுகம் நோக்கிச் செல்க என விடுமே"[43]**

என்ற மேற்கண்ட அடிகளால் இதனை அறியமுடிகிறது.

**தமிழரின் வீரத்தினைப் பறைசாற்றும் நடுகல்**

வீரரை வியந்து போற்றிய நாடு பழந்தமிழ்நாடு. போர் முனையில் விழுப்புண் பட்டு விழுந்தவர்க்கும், கடும்புலியைத் தாக்கி வென்ற காளையர்க்கும், இன்னோரன்ன வீரம் விளைத்தவர்க்கும் வீரக்கல் நாட்டிச் சிறப்பைச் செய்தனர் தமிழ்நாட்டார்.

வீரருக்கு நாட்டுதற்கேற்ற கல்லை முதலில் தேர்ந்தெடுப்பர்; எடுத்த கல்லைப் புனித நீராட்டுவர்; வீரனுடைய பீடும் பேரும் அதில் எழுதுவர்; உரிய இடத்தில் அதனை நாட்டுவர்; மாலையும் மயிற் பீலியும் சூட்டுவர். இவ்வாறு நட்ட கல்லைத் தெய்வமாகக் கொண்டு வணங்குதலும் உண்டு. இதனை,

**"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்**
**சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்"[44]**

என்ற மேற்கண்ட அடிகளால் இதனை அறியலாம்.

## நிலம் போற்றும் மறவர் பெற்ற பட்டங்களும் பெயர்களும்

### ஏனாதிப் பட்டம்

மனத்திட்பமுடைய படைத் தலைவரைத் தமிழ் மன்னர் சிறப்பித்தனர்; ஏனாதிப் பட்டமளித்துப் பாராட்டினர். அப் பட்டத்தின் சின்னம் ஓர் அழகிய மோதிரம். அதனை அரசன் கையால் அணியப்பெற்ற படைத்தலைவர் பெருமதிப்புக்கு உரியவராயினர்;.

**"...........போர்க்கெல்லாம் தானாதி யாகிய தார்வேந்தன்**

**மோதிரம்சேர் ஏனாதிப் பட்டத் திவன்"[45]**

என்று நாட்டார் ஏத்தும் நலம் பெற்றனர். சோழ மன்னரால் ஏனாதிப் பட்டம் வழங்கப் பெற்றவர் சோழிய ஏனாதி என்று சிறப்பிக்கப்பட்டார்கள். அன்னவருள் சிலர் பெருமையைப் பழம்பாடல்கள் உணர்த்துகின்றன.

### ஏனாதி திருக்கிள்ளி

திருக்கிள்ளி என்பவன் சோழிய ஏனாதிகளில் ஒருவன். அவன் சிறந்த போர்வீரன்; எப்பொழுதும் முன்னணியில் நின்று மாற்றாரைத் தாக்கும் மதுகையாளன். அவன் முகத்திலும் மெய்யிலும் கரடுமுரடான தழும்பு நிறைந்திருந்தது. அதனைப் பார்த்துப் பார்த்து அவ்வீரன் பெருமிதமுற்றான்; வீரப் புகழின் சின்னமாகக் கருதி விம்மிதமுற்றான்.

திருக்கிள்ளியைக் கண்டு பரிசு பெறச் சென்றான் மாடலன் என்ற கவிஞன்; விழுப்புண்பட்ட திருமேனியை வியந்து நோக்கினான். ஒவ்வொரு தழும்பின் வரலாற்றையும் அக் கவிஞனிடம் எடுத்துரைத்தான் வீரன். அது கேட்ட மாடலன் திருக்கிள்ளியின் பெருமையைத் தெள்ளிதின் உணர்ந்தான்; 'ஏனாதி நாதனே! உன்

மேனி கண்ணுக்கினிய தன்று; ஆயினும் உன் புகழ் செவிக்கு இனிது. உன் முன்னே புறங்காட்டி ஓடிய பகைவரோ காட்சிக்கு இனியர்; ஆனால், மாட்சியற்றவர் என்று மகிழ்ந்து பாடினான் என்பதை,

**"அவரே நிற்காணின் புறம் கொடுத்தலின்**
**ஊது அறியா மெய் யாக்கையொடு**
**கண்ணுக்கு இனியர் செவிக்கு இன்னாரே**
**அதனால் நீயும் ஒன்று இனியை அவரும் ஒன்று இனியர்**
**ஒவ்வா யா உள மற்றே? வெல்வோர்க்**
**கழலர்புனை திருந்து அடிக்கடுமான் கிள்ளி**
**நின்னை வியக்கும் இவ்உலகம்"[46]**

என்ற மேற்கண்ட அடிகள் ஏனாதிபட்டம் பெற்ற திருக்கிள்ளியின் சேனாதிபதியின் செயல்பாட்டை கூறுவதை அறியமுடிகிறது.

குட்டுவன் என்பவன் மற்றொரு சோழிய ஏனாதி. அவனையும் புகழ்ந்து பாடினான் மாடலன். அப்போது குட்டுவன் முக மலர்ந்தான்; ஒரு யானையைத் தருவித்துப் பரிசளித்தான்; அவ்விலங்கைக் கண்டு அஞ்சிய மாடலன் மெல்லப் பின்வாங்கினான் "கொடுத்த பரிசு போதாது போலும்!" என்று எண்ணி அதனினும் பெரியதோர் யானையை வருவித்துக் கொடுத்தான் குட்டுவன். அந் நிலையில் அவன் கொடைத் திறத்தினை இகழ்வது போலப் புகழ்ந்து பாடினான் மாடலன்; **வயிறு காயும் புலவருக்கு இவன் களிறு தருவான்.** பசித்து வரும் கவிஞர்க்குப் பகடளிப்பான். எனவே அறிஞரே இவன் நாட்டை அணுகாதீர் என்று கூறுவதை,

**"ஒருகண் மார்க் கிணை தெளிர்ப்ப ஒற்றி**
**பாடு இமிழ் முரசின் இயல் தேர்த் தந்தை**
**வாடா வஞ்சி பாடினேனாக**

**அகம்மலி உவகையொடு அணுகல்வேண்டிக்**

**கொன்று சினம் தனியாப் புலவு நாறு மருப்பின்"[47]**

என்ற மேற்கண்ட அடிகளால் இதனை அறியலாம்.

**பாண்டிய ஏனாதி**

மதுரை மாநகரில் மாறன் சடையன் என்ற பாண்டியன் அரசாண்டபோது எட்டி என்னும் வீரன் ஏனாதிப்பட்டம் பெற்று விளங்கினான். மாறனுக்கும் சேரனுக்கும் இடையே பகை மூண்டது. மலை நாட்டின்மீது படையெடுத்தான் மாறன். பாண்டிய ஏனாதி படைத் தலைமை பூண்டான்; மலைநாட்டு மன்னனது அருவியூர்க் கோட்டையை முற்றுகையிட்டான். பாண்டிப் பெரும்படை கோட்டையின் அகழியைத் தூர்த்தது; மதிலை இடித்துத் தகர்த்தது. அவ்வழியாக மண்டிற்று ஏனாதியின் சேனை. அதை மறித்துத் தடுத்து மானப் போர் புரிந்தனர் மலைநாட்டு வீரர். இரு திறத்தார் படையிலும் பொருது வீழ்ந்தவர் பலர்.

ஆயினும் ஏனாதியின் சேனை நெரித்தேறி வெற்றி பெற்றது; கோட்டையைக் கைப்பற்றியது. அன்று முன்னணியில் நின்று அரும்போர் புரிந்த வீரர் இருவர். அவர் எனாதியின் மாளிகைச் சேவகர்; ஒருவன் பெயர் சாத்தன்; மற்றவன் பெயர் சூரன். அவ்விருவரும் போர்க் களத்தில் விழுப்புண் பட்டு வீழ்ந்து மடிந்தனர். அவர் **"கோட்டையை அழித்து நன்றுசெய்து பட்டார்" என்று பாராட்டினான் ஏனாதி நாதன்; உயிர் கொடுத்துப் புகழ் கொண்ட இருவர்க்கும் வீரக்கல் நாட்டிப் போற்றினான்"[48].**

**மாராயப் பட்டம்**

மன்னர் வழங்கிய மற்றொரு பட்டம் மாராயம் என்பது. தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே இப் பட்டம் தமிழ்நாட்டில் வழங்கிற்று. இதனை,

**"மாராயம் பெற்ற நெடுமொழி யானும்"[49]**

**"இராஜராஜசோழன் தஞ்சையில் அரசாண்டபோது மாராயப் பட்டம் பெற்ற சேனாதிபதி ஒருவன் சிறந்து விளங்கினான்; அவன் மலைநாட்டின்மேற் படையெடுத்தான்; சேர பாண்டியரைச் செருக்களத்தில் வென்றான்; விழிஞம் என்னும் துறைமுகத்தைக் கைக் கொண்டான்."[50]**

கீர்த்தி வாய்ந்த அச்சேனாதிபதிக்குப் பஞ்சவன் மாராயன் என்ற பட்டம் வழங்கினான், வீர மன்னனாகிய இராஜராஜன் அவனை வேங்கை நாட்டுக்கும் கங்க நாட்டுக்கும் மகா தண்ட நாயகனாக நியமித்தான். (மாராயம் என்னும் பெயருடைய ஊர்கள் தமிழகத்தில் உண்டு. கீழ்மாராயம் என்னும் ஊர் தஞ்சை நாட்டுக் கும்பகோண வட்டத்தில் உள்ளது)

**நிலம் அடைமொழியாதலும் வெற்றி வாகை சூடலும்**

**பாலாற்று வென்றான்**

பாலாற்றங்கரையில் நிகழ்ந்த போர்கள் பலவாகும். அப் போர்க்களங்களில் பெருகிய செந்நீர் பாலாற்றில் சுரந்த தண்ணீரோடு கலந்து ஓடிற்று. அவ்வாற்றங்கரையில் வெம் போர் புரிந்து வெற்றி பெற்றான் ஒரு வீரன். அவனைப் "பாலாற்று வென்றான்" என்று தமிழ் நாட்டார் பாராட்டினர். அப்படிப்பட்ட பெயர் கொண்ட பல ஊர்கள் இன்றும் ஆர்க்காட்டு வட்டத்தில் உண்டு. (வட ஆர்க்காட்டு ஆரணி

வட்டத்தில் பாலாற்று வென்றான் என்ற ஊர் உள்ளது; வேலூர் வட்டத்தில் அப் பெயருடைய மற்றோர் ஊர் உள்ளது.)

**செய்யாற்று வென்றான்**

செய்யாற்றங்கரையில் நடந்த போரில் மாற்றாரை வென்று மேம்பட்டான் ஒரு தலைவன். அவனைச் "செய்யாற்று வென்றான்" என்று சீராட்டினர் தமிழ் மக்கள். அவ் விருதுப் பெயரும் ஊர்ப்பெயராயிற்று. (வட ஆர்க்காட்டுச் செய்யாற்று வட்டத்தில் செய்யாற்று வென்றான் என்னும் ஊர் உண்டு; தென் ஆர்க்காட்டு விழுப்புர வட்டத்தில் செய்யாற்று வென்றான் என்ற மற்றோர் ஊர் உள்ளது.)

தமிழ்நாட்டார் சீர்குலைந்து சிறுமையுற்றமையால் அவ்வூர்ப் பெயர்களும் சிதைவுற்றன. பாலாற்று வென்றான், செய்யாற்று வென்றான் என்ற பெயர்கள் முறையே பாலாத்து வண்ணான் எனவும், செய்யாத்து வண்ணான் எனவும் இப்பொழுது மருவி வழங்குகின்றன.

**சரந்தாங்கி**

இன்னும் சரமாரி பொழியும் போர்க்களத்தில் சஞ்சலமின்றி நின்று போர் புரிந்தனர் தமிழ் நாட்டு மெய்வீரர். மாற்றார் வில்லினின்று எழுந்து வந்த அம்புகளை மலைபோன்ற தன் மார்பிலே தாங்கி நிலைகுலையாமல் நின்றான் ஒரு வீரன். அவ்வீரத்தைக் கண்டு வியந்தனர் இரு திறத்தாரும்; 'சரந்தாங்கி' என்றும் சிறப்புப் பெயர் அளித்துச் சீராட்டினர். அறந்தாங்கிய சீலன் பெயர் தஞ்சை நாட்டிலே ஓர் ஊருக்கு அமைந்தாற் போன்று சரந்தாங்கிய வீரன் பெயர், பாண்டி நாட்டு நிலக்கோட்டை வட்டத்தில் ஓர் ஊரின் பெயராக நின்று நிலவுகின்றது.

**பேராண்மை**

போர்க்களத்தில் முன் வைத்த காலைப் பின் வைத்தலறியாத மறவரே சுத்த வீரர். தம்மை நோக்கி வரும் படைக்கலத்தைத் துச்சமாகக் கருதுவது அவர் இயற்கை. படைக்கலம் வரும் போது விழித்த கண் இமைத்தல் அவர் வீரத்திற்கு இழுக்கு. அன்னார் மாற்றாரது படைக்கலத்தாற் பெற்ற வடுக்களைப் பொன்னினும் மணியினும் மேலாகப் போற்றுவர்; அவற்றைப் புகழின் சின்னமாகக் கருதிப் பெருமை கொள்வர்.

**தழும்பன்**

முன்னாளில் தழும்பன் என்ற பெயருடைய தலைவன் ஒருவன் தமிழ் நாட்டில் வாழ்ந்தான். அவன் முகத்திலும் மார்பிலும் அடுக்கடுக்காக வடுக்கள் அமைந்திருந்தன. வேலாலும் வில்லாலும் மாற்றார் எழுதியமைத்த வீரப்படம்போல் விளங்கிற்று அவன் கட்டமைந்த மேனி.

பகைவர் படைக்கலத்தால் உழுது வீரம் விளைத்த உடம்பினைப் பார்த்துப் பார்த்து இன்புற்றான் அவ் வீரன்; ஒவ்வொரு தழும்பின் வரலாற்றையும் பேசிப் பேசி பெருமிதம் அடைந்தான். நாளடைவில் அவனுடைய இயற்பெயர் மறைந்து போயிற்று. தழும்பன் என்ற சிறப்புப் பெயரே அவருக்கு உரியதாயிற்று. தமிழ்ப் பெருங் கவிஞராகிய பரணர் முதலியோர் அவன் பேராண்மையை வியந்து பாடினர்.

**புலிப்பல்**

போர் ஒழிந்த காலங்களில் கருங்கை மறவர் காட்டினுள்ளே போந்து கடும் புலிகளைத் தாக்குவர். அவற்றின் வாயைக் கிழிப்பர்; பற்களைத் தகர்ப்பர்; வெற்றிப் பரிசாகிய அப் பற்களைக் கோர்த்துத்

தம் குல மாதர்க்கு அணிகலனாகக் கொடுப்பர். அதுவே மறக்குடி மாதர் மதித்த நற்பரிசு.

**"மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற**
**மாலை வெண்பல் தாலி" (த.பா.தி.7)**

என்று பழந்தமிழ்க் கவிதை அதன் பெருமையைப் பாடிற்று.

**புலிகடிமால்**

முன்னாளில் கடும்புலி வாழும் காட்டிலே முனிவர் ஒருவர் தவம் புரிந்திருந்தார். அவர்மீது பாய்வதற்குப் பதி போட்டது ஒரு பெரும் புலி. வீரம் வாய்ந்த தமிழ் மகன் ஒருவன் அப்போது அவ் வழிப் போந்தான்; புலிக்கும் முனிவருக்கும் இடையே பாய்ந்தான்; அவ்விலங்கைக் கொன்று முனிவர் உயிரைக் காத்தான். அன்று முதல் 'புலிகடிமால்' என்று தமிழகம் அவனைப் புகழ்வதாயிற்று. அவன் குடி வழியில் வந்த தலைவர்க்கெல்லாம் அது பட்டப் பெயராக வழங்கியது.

**வீரப் பெயர்**

இன்னும், அந் நாளில் நிலம்போற்றும் பல வகையான வீரப் பெயரிட்டு வாழ்ந்தனர் தமிழர். வேங்கை மார்பன் என்பது ஒரு சிற்றரசன் பெயர். அச்சொல்லிலே வீரம் வீறுகின்றது. இன்னும் விறல் மிண்டன், கோட்புலி முதலிய பெயர்களும் ஆடவர் பெயர்களாக அமைந்தன. சிங்கன் என்ற பெயரும் அக்காலத்தில் வழங்கிற்று. பொதியமலைக்கருகே சிங்கன் என்ற தலைவனால் ஆளப்பட்ட பாளையம் சிங்கன்பட்டி என்று பெயர் பெற்றது. புலமை சான்ற திருவள்ளுவரின் நண்பராகத் திகழ்ந்த தமிழ்ப்பெருமகன், ஏலேல சிங்கன் என்னும் பெயர் பெற்றிருந்தான் என்பர். இவ்வாறு வீரப் பெயர்பூண்டு, வீரம் விளைத்தனர் பண்டைத் தமிழர்.

**கொற்றவை வழிபாடு**

போர்க்குரிய வெற்றியைப் பெற கொற்றவை வழிபாடு போற்றப்பட்டது. தமிழ் வீரர் வணங்கிய தெய்வம் கொற்றவை என்று பெயர் பெற்றிருந்தமையை,

**"சிலம்பும் கழலும் புலம்பும் சீறடி**

**வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை" (புறம் 156)**

என்ற மேற்கண்ட அடிகளால் இதனை அறியலாம்.

**பழந்தமிழர் போரில் பயன்படுத்திய படைக்கருவிகள்**

**போர்க்கருவிகள்**

வில், அம்பு, வாள், குந்தம், ஆழி, வேல் முதலிய கருவிகள் போரில் பயன்படுத்தப்படும். கருவிகள் தம்மீது பாயாமல் இருக்கும் பொருட்டுக் கிடுகு (கேடயம்) கையாளப்படும். கருவிகளில் வேல் என்பதே முதன்மையானது. போரிடுங்கால் துடி, முரசம், வளை, வயிர் போன்ற இசைக்கருவிகள் முழங்க போர்ச் செயல்பாடுகள் நடத்தப்பட்டன.

**வில்லும் வேலும்**

வில்லும் வேலும் கழலும் கண்ணியும் தாரும் மாலையும் தேரும் மாவும் மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய - (தொல், பொரு, மரபி, 628) என்ற நூற்பாவின்படி வில், வேல், கழல், கண்ணி, தார், மாலை, தேர், குதிரை ஆகியன கொண்டு போர் புரிய, வாழ இலக்கணம் பெற்றுள்ளனர். இந்த நூற்பாவை கூர்ந்து நோக்கினால் தேர்-குதிரை ஏறிப் போர் புரியும் ஏனோர் வில், வேல் ஆகியன கொண்டுப் போர் புரிவர் என்பது பொருள்படும். இவற்றுள் வாள் என்னும் போர்க்கருவி நெருங்கி நின்று போர் செய்கையில் பயன்படுத்தினர்.

வில்லும் வேலும் பகைவரை தூரத்தில் இருந்து தாக்கப் பயன்பட்டுள்ளது. இம் முதன்மைக் கருவிகள் தவிர வேறு சில கருவிகளும் தமிழர்களால் பயன்படுத்தப் பட்டுள்ளன. அடார், அரம், அரிவாள், ஆயுதக்காம்பு, எஃகு, கண்ணாடி தைத்த கேடகம், கணிச்சிப்படை, கலப்பை, கழிப்பிணிப் பலகை, காழெஃகம், கிளிகடிகருவி, குந்தாலி, குறடு, கேடகம், கோடாலி, சக்கரம், சிறியிலை எஃகம், சேறுகுத்தி, தறிகை, துடுப்பு, நவியம், படைவாள், பூண்கட்டிய தண்டு, மழு, வாள், வில், வேலுறை ஆகிய கருவிகளையும் தமிழர்கள் பயன்படுத்தினார்கள் என்று புறநானூற்றின் முன்னுரையில் தமிழறிஞர் உ,வே, சாமிநாதைய்யர் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் போர்க்கருவிகள் தம்மை ஊறு செய்யாவண்ணம் காக்க கரடித்தோல் மற்றும் புலித்தோலாற் செய்யப்பட்ட கேடயமென்னும் கருவிகளைப் பயன்படுத்தியதாக கந்தையாப் பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.

**வாள்**

தொல்காப்பியத்தில் வாளோர் ஆடும் அமலை (தும்பைத்திணை), ஒள்வாள் வீசிய நூழில் (தும்பைத்திணை), வாள்மங்கலம் (பாடண்திணை) ஆகிய இடங்களில் வாள் என்னும் சொல் போர்க்கருவியாக கருதுமளவிற்கு எடுத்தாளப்பட்டுள்ளது, சங்கப்பாடல்களிலும் பல இடங்களில் வாள் என்னும் போர்க்கருவி எடுத்தாளப் பெற்றுள்ளது.

**"போர்க்கு உரைஇப் புகன்று கழிந்தவாள்**
**உடன்றவர் காப்புடை மதில் அழித்தலன்**
**வான்உற மூழ்கி உரு இழந்தனவே"**[51]

**"ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**

**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"[52]**

என்ற சங்கப்பாவடிகள் வாள் வெற்றி காட்டுவனவாகும். வாள் என்பது ஆண்களுக்கு மிகுதியும் பயன்படும் போர்க்கருவி என்றாலும் அதனைப் பெண்களும் கையாண்டுள்ளமை மற்றொரு புறநானூற்றுப் பாடல்வழி புலனாகின்றது.

**"கொண்ட வாளொடு படுபுனம்**

**பெயராச் செங்களம் துழவுவோள்**

**சிதைந்து வேறாகிய படுமகன் கிடக்கை காணுஉ**

**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே"[53]**

என்ற காக்கைப் பாடினியார் பாடலடிகள் வீரத்தாய் ஒருத்தி வாள் கொண்டு போர்க்களம் புகுந்த செய்தி பெண்களின் வாள் பயன்பாட்டிற்குச் சான்றாகும்.

**வேல்**

வேல் முருகக் கடவுளின் கருவியாக சங்க இலக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ளது. வேல் கொண்டாடும் வேலன், அகப்பாடல்களில் முக்கியப் பாத்திரமாக அமைக்கப் பெற்றுள்ளார், புறம் சாராத அகம் சார்ந்த பயன்பாடு இதுவாயினும் வேல் என்னும் கருவியை மக்கள் போற்றியமைக்குச் சான்றாக மேற்கருத்து விளங்குகிறது, தொல்காப்பியத்தில் (பெரும்பகை தாங்கும் வேலினானும்) என்று வேல் குறிக்கப்பட்டுள்ளது. ஔவையார் அதியமானைக் காட்சிப்படுத்தும் போது **கையது வேலே, காலன புனைகழல் (புறம்.100)** என்று வருணிக்கிறார்.**காவின் புனிற்று புலால் நெடுவேல் எழுபொறி நாட்டத்து - (புறம். 99)**.

**"நிழல்படு நெடுவேல் ஏந்தி ஒன்னார்**
**ஒண்படைக் களிறு பெயர்த்து எண்ணினி**
**விண் இவர் விசும்பின் மீனும்"[54]**

**"பீலிக்கண்ணி பெருந்தகை மறவன் மேல்வரும்**
**களிற்றொடு வேல் துறந்து"[55]**

**திறல் ஒளிறிலங்கு நெடுவேல் மழவர்"[56]**

**சாந்தமை மார்பின் நெடுவேல் பாய்ந்தென"[57]**

முதலான குறிப்புகளால் வேல் என்னும் போர்க்கருவி அதிக அளவில் பயன்படுத்தப்பட்டமை தெரிய வருகிறது.

சிறிய பருவத்தின்போததே வேல் என்னும் போர்க் கருவி தாயால் மகனுக்கு அறிமுகப்படுத்தப் பெற்று தரப்பெற்றமை மற்றொரு புறநானூறு பாடலில் குறிப்பிடபட்டுள்ளது. இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி வேல்கைக் கொடுத்து வெளிது விரிந்து உடாஇப் பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி - (புறநானூறு 279). என்ற பாடலில் வேலின் உயரம்கூட இல்லாத சிறுவனுக்கு வேல் என்னும் கருவியைத் தந்து அதனைப் பயன்படுத்தக் கற்றுத்தரும் வீரஉணர்வு தமிழர்கள் இடையே இருந்துள்ளது.

**வில்**

வில், அம்பு, அம்பறாத்தூணி இவை மூன்றும் அமைந்த கூட்டுக் கருவியாக தமிழர்கள் வில்லைப் பயன்படுத்தியுள்ளனர்.

**கணையும் வேலும் துணையுற மொய்த்தலின்“**[58]

என்று இக்கருவியைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

**முடிவுரை**

பழந்தமிழரின் நிலம்சார்ந்த புற வாழ்வியலைப் படம்பிடித்தது போல காட்டுவதில் சங்க இலக்கியங்கள் முதன்மை இடத்தைப் பெறுகின்றன. தமிழ் இலக்கியங்களில் புறத்திணை கூறுகளை அதிகமாகக் காட்சிப்படுத்தியவைச் சங்க இலக்கியங்கள் என்று கூறலாம். ஏனெனில் சங்க இலக்கியத்தில் அக நூல்களிலும் புறநூல்களிலும் புறத்திணை வாழ்வியல் கூறுகள் பற்றி அறியலாகும் குறிப்புகள் அறியும் வண்ணம் இடம்பெற்றுள்ளன.

அவ்வகையில் சங்க இலக்கியங்களில் புறத்திணைக் கூறுகளான வாழ்வியலைப் பற்றி ஆய்ந்தறிவது முக்கிய நோக்கமாக அமைந்த போர், போர்க்காண காரணங்கள், போரியல் விதிமுறை, போர்ப்படை, போர்க்கருவிகள், போரியல் நடைமுறைகள், வீரர்களின் செயல்பாடு, பெண்களின் பங்களிப்பு, நிமித்தங்கள், வழிப்பாடுகள், தமிழகத்தில் நடைபெற்ற வரலாற்றுப் போர்களும், போர் வெற்றியை நிலம் போற்றல், பெற்ற வெற்றிகளும், புறப் பண்பாட்டுச் செயல்பாடுகள் என்று சங்க இலக்கிய நூல்களில் புறத்தினை இடம்பெற்ற வாழ்வியலோடு யாவற்றையும் சிறப்பான முறையில் ஆய்ந்தறியப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. புறம். 9:1-6
2. புறம்.9.
3. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-13, ப.196.
4. இராசமாணிக்கனார், மா., தமிழக ஆட்சி, ப.105.
5. புறம்.72.8.
6. தொல். பொருள். 616.
7. புறம்.4:10-12
8. புறம்.98:1-4
9. சோழர்கள் - நீலகண்ட சாஸ்திரியார், இரண்டாம் பாகம், முதல் பகுதி, ப. 230.
10. புறம்.9:7-8
11. பதிற்று. 52:6-7.
12. புறம். 297: 9-10.
13. அகம்.219.
14. புறம். 66:1-2
15. பதிற்று.13.
16. புறம்.6:21-22
17. புறம்.57:5-9
18. புறம்.4:18-19
19. புறம் 12:1-5
20. புறம்.10:5-6

21. புறம்.7:7-9

22. புறம் 16:7-9

23. வரலாறும் வக்கிரங்களும், ப.51. தமிழில் நா. வானமாமலை. அலைகள் வெளியீடு, சென்னை. .

24. குறுந்.3:1-4

25. குறுந்.57:1-7

26. புறம்.77:6-8

27. பொருநர்.145-147.

28. புறநானூறு.72:7-12

29. புறம்.174:3-16

30. புறம்.66.

31. புறம்.63:1-10

32. புறம்.46:5-8

33. புறம்.243.

34. புறம்.294:1-4.

35. பதிற்று.58.3.

36. புறம்.93:4-11.

37. புறம்.74.

38. புறம்.8:5-13.

39. புறம்.66; 4-6.

40. புறம்.65.

41. புறத்திறட்டு, 1460, சென்னைப் பல்கலைக்கழக பதிப்பு.

42. புறம்.86:1-5

43. புறம்.279:8-11

44. தொல்காப்பியம்: புறத்திணை 5.

45. பெருந்தொகை, 455..

46. புறம்.167.

47. புறம்.394:7-11

48. பாண்டியர் வரலாறு நீலகண்ட சாஸ்திரியார். , ப.86.

49. தொல்காப்பியம், பொருள், 63.

50. முதல் இராஜராஜசோழன், உலகநாத பிள்ளை, ப.30.

51. புறம். 97:1-3

52. புறம்.312:5-6

53. புறம். 63. .

54. புறம்.302:9-10

55. புறம்.274:2-3

56. புறம். 88.

57. புறம். 63:9

58. தொல்காப்பியம், புறத்திணையியல் 16.

# இயல் நான்கு

# நிலம் சார்ந்த தொழில்கள்

**முன்னுரை**

பொதுவாக தொழில்கள் ஐந்து நிலங்களுக்கும் ஒரே மாதிரியாக அமைவதில்லை. ஏனெனில் ஒவ்வொரு நிலத்திலும் வெவ்வேறான சூழ்நிலைகள், நில அமைப்பியல் என ஒவ்வொன்று வெவ்வேறாக அமைவது இயல்பானது. அதன் அடிப்படையில் சங்க கால மக்களின் தொழில்கள் ஐந்து நிலத்தின் தன்மைக்கு ஏற்ப வெவ்வேறாகவும் சில தொழில்கள் எல்லா நிலத்திற்கும் ஒன்றாகவும் அமைந்துவிடுகின்றன. இத்தகைய தொழில்களை நிலத்தின் அடிப்படையில் ஆய்வு செய்வது இவ்வியலின் முதன்மை நோக்கமாக அமைகிறது. மேலும் இதன் துணை நோக்கமாக தொழிலால் பெயர்பெற்ற கலைஞர்களையும் தொழில்கள் ஐவகை நிலத்தில் எத்தகையவாறு அமைந்திருந்தன என்றும் ஆய்ந்தறிவது துணைமை நோக்கமாகக் கொண்டு இவ்வியல் ஆராயப்படுகிறது.

**தொழில் சொல் பொருள்**

பழந்தமிழர்களிடத்தில் தொழில் அமைப்பானது நிலத்திற்கு ஏற்றார் போல அமைந்துள்ளதை இலக்கிய இலக்கண நூல்கள் குறிப்புகளாலும், தொல்லியல் சான்றாய்வுகளாலும், வரலாற்று ஆய்வாளர்களின் கருத்துகளாலும் அறிய முற்படுகிறோம். அவ்வகையில் தொழில் என்னும் சொல்லானது, தமிழ் அகராதிகளில் வினை என்று அறியப்படுகிறது. இலக்கண ஆசிரியர்களும் வினை என்பதை தொழில் என்று கூறுவதை,

**“தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி, யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப”[1]**

தொல்காப்பியத்தில் தொழில் என்பதற்கு செய்தி என்றும் வினை என்றும் கூறுவதை,

**“வினையின் பிரிந்தோன் மீண்டுவரு காலை**

**இடைச்சுர மருங்கில் தவிர்த்தல் இல்லை”[2]**

என்ற மேற்கண்ட நூற்பாக்கள் வழி தொழில் என்பதற்கு வினை, செய்தி, தொழில் என்று முப்பெயர்களில் சொல்லப்பட்டதை அறியமுடிகின்றது.

**ஐந்திணையும் தொழில் அமைப்பு முறையும்**

பழந்தமிழர்களிடத்தில் தொழில் என்பது அந்தந்த நிலத்திற்கு ஏற்றாற் போல காணப்பட்டன. அவை குறிஞ்சி நிலத்தில், கூத்தாடல், கடா விடுதல், கொன்றைக் குழலூதல். வெறியாடல், மலைநெல் விதைத்தல், தினைக் காத்தல், தேன் எடுத்தல், கிழங்கு கிண்டி எடுத்தல், சுனை நீராடல் என்பவையாகவும், முல்லை நிலத்தில், சாமை, வரகு விதைத்தல், கடலாடுதல், நிரை மேய்த்தல், பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவை செய்தலும், மருத நிலத்தில், உழவு, விழாச் செய்தல், நீராடல், நெல் அரிதல், குளம் குடைதல் என்பவையாகவும், நெய்தல் நிலத்தில் மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல், கடலாடுதல், வாணிபம் அல்லது வணிகம், பாலை நிலத்தில் போர் செய்தல், சூறையாடல் என்று ஐந்திணை நிலத்தவருக்குமான தொழில்களின் இலக்கணம் பற்றி இலக்கிய நூல்களில் உரைக்கப்பட்டுள்ளன. ஆனால் இவ்வனைத்து தொழில்களுக்கும் தோற்றுவாயாகக் கருதப்படுவது பண்டமாற்று என்றுதான் சொல்லவேண்டும். ஏனெனில் எல்லா நிலத்திலும் கிடைக்கப்பெற்ற உணவுப் பொருள்களை வேற்று நிலங்களுக்கு சென்று விற்பனை செய்துள்ளனர். அந்நாளில் பணத்தை வாங்காமல் உணவுக்கு ஈடாக உணவினையே பரிமாற்றம் செய்துள்ளனர்.

**பொருளுக்குப் பொருள் மாற்றும் தொழில்**

இலக்கியங்களின் வழி அறியப்படும் கூறும் விற்பனைத் தொழிலின் தோற்றம் என்றே கூறலாம். வணிக அமைப்புமுறை தோற்றம் பெறுவதற்கு முன்பும் பின்பும் ஒரு நாட்டின் எல்லைக்குள் நடைபெறும் பண்ட பரிமாற்றத்தினை உள்நாட்டு வாணிகம் என்று சொல்லலாம். இத்தகைய உள்நாட்டு வாணிகம் ஒரு நிலத்து பொருளை அடுத்த நிலத்தாருக்குக் கொடுத்து அடுத்த நிலத்தாரின் விளைந்த பொருளைப் பெற்று வந்தனர். இத்தொழிலை ஐந்நில மக்களும் செய்தனர். அவ்வாறு பண்டப் பரிமாற்றத்தில் கிடைத்த உணவானது, நெல்லுக்கு உப்பும், தேன் கிழங்குக்கு மீன் நறவையும் (இறைச்சி), கரும்புக்கு அவல் மான் இறைச்சியும், கள்ளுக்கு மீனும், நெய்யிக்கு முத்தும், மோருக்கு தானியங்களும் கொடுக்கப்பட்டன என்பதை அறியமுடிகின்றது.

**குறிஞ்சி நிலம் தொழிலாதாரங்கள்**

குறிஞ்சி நிலம் என்பது மலையும் மலைசார்ந்த பகுதியும் ஆகும். இங்கு மலையில் விளையும் காய்கனிகள், மரங்கள், தேன், கிழங்கு, மலை நெல், ஆரம் மணி போன்ற எண்ணற்ற பொருட்கள் மலையின் விளைப்பொருளாக, உற்பத்தி பொருளாக உள்ளன. இவற்றை எடுத்து வேண்டியவர்களுக்கு விற்பனை செய்யும் தொழிலாளர்கள் பலர் இருந்துள்ளனர். அத்தகைய பலவகைத் தொழில்களில் தினைக்காத்தல், கிழங்கு அகழ்தல், தேனெடுத்தல், வேட்டையாடுதல், குறிபார்த்தல் என்னும் பல தொழில்கள் குறிஞ்சி நிலத்திற்கே சிறப்பாக உள்ள தொழில்கள் என்று கூறலாம். அத்தகைய குறிஞ்சி நிலத்தொழில்கள் பின்வருமாறு விரிவாக ஆய்ந்தறியப்படுகின்றன.

**குறிஞ்சி நிலம்சார் விவசாயம்**

இன்றைய குறிஞ்சி நிலத்தில் மருதத்தில் செய்யப்படுகின்ற விவசாய முறைபோன்று குறிஞ்சி நிலத்திலும் செய்யமுடிந்ததையும். இத்தகைய விவசாய முறை அக்காலத்திலும் இருந்துள்ளன என்பதை

அறியமுடிகிறது. குறிப்பாக விதைத்தல், பராமரித்தல், பன்றி ஓட்டுதல், யானையை விரட்டுதல், கிளியை ஓட்டுதல், அறுவடை செய்தல் என்ற பொதுவான செயல்பாடுகள் குறிஞ்சி நிலத்தில் இருந்துள்ளது.

குறவர்கள் மருத நில மக்களைப் போன்றே மழைப்பொழியும் பருவத்தைப் பயன்படுத்தி ஈரப்பதமான நிலத்தை உழுது விவசாயம் செய்தனர். இதனை,

**“தளிபதம் பெற்ற கானுழு குறவர்”[3]**

என்ற வரிகளால் மழைப்பொழிந்த ஈர மண்ணைப் பதப்படுத்தி உழுதலைச் செய்தனர் என்பதை இவ்வரிகள் எடுத்துக் காட்டுகின்றன. இதனையே,

**“மரம்கொல் கானவர் புனம் துளர்ந்து”[4]**

என்ற மேற்கண்ட அடிகளாலும் ஈரப்பதமான நிலத்தை சமன்படுத்தி பயன்படுத்தியதை எடுத்துரைக்கின்றன. மேலும் இவ்வரியில் இடம்பெறும் “துளர்ந்து” என்னும் சொல்லானது அக்காலத்தில் பயன்படுத்திய ஒருவகை மண்வெட்டியால் வெட்டுதலைக் குறிப்பதாக பாடல் உணர்த்துவதை அறியமுடிகின்றது. இந்த மண்வெட்டியை போன்றே “புன்புலம்” என்று ஐங்குறுநூற்றிலும் (பா.283), “இருங்கல்” என்று நற்றிணை (பா.122)யிலும் சொல்லப்படுகின்றது.

மலையில் உள்ள காட்டு மரங்களை வெட்டி விவசாய நிலங்களை உருவாக்கினான் என்பதை,

**“மலை இடம்படுத்துக் கோட்டிய கொல்லை**

**தனிபதம் பெற்ற கான் உழு குறவர்” (நற்.209, 1)**

வீட்டைச் சுற்றியுள்ள தூறுகளை எரித்து அந்த இடத்தை நிலமாக்கினான் என்பதை,

**எரிதின் கொல்லை இறைஞ்சிய ஏனல் (அகம்.288,5)**

என்ற மேற்கண்ட அடிகள் குறிஞ்சி நில மக்கள் மலையில் உள்ள மரங்களை வெட்டி அவ்விடத்தை பயிர்செய்யும் நிலமாக மாற்றினர் என்பதை அறிந்துகொள்ளமுடிகின்றது.

**விதை விதைத்தல் - பயிரிடுதல்**

குறிஞ்சி நிலத்து மக்களாகிய குறவர்கள் மலை நிலத்தினை விவசாயம் செய்வதற்கு ஏற்ப மண்ணை வளப்படுத்தி, ஒரே இடத்தில் விதைகள் விழாதவாறு பக்குவமாய் விதைகள் விதைப்பர். இதனையே,

**“சிலவித்து அகல வீட்டுடன் பலவிளைந்து”[5]**

என்ற மேற்கண்ட வரிகளால் குறவர்கள் பக்குவமாய் விதை விதைத்து களைப்புடன் காணப்பட்டதைக் காட்டுகின்றது.

**பயிரிடுதலும், பாதுகாப்பு முறையும்**

**ஐவனநெல் விதை விதைத்தல்**

குறிஞ்சி நிலத்து மலை நிலங்களில் ஐவன தினை நெற்களைப் பயிரிட்டு தங்களின் பயன்பாட்டிற்குப் பயன்படுத்தி வந்தனர். இதனை,

**“அருவிப் பரப்பின் ஐவனம் வித்தி”[6]**

**“மையடு சிலம்பின் ஐவனம் வித்தி”[7]**

என்ற மேற்கண்ட வரிகள் மூலம் சங்க காலத்திலேயே குறிஞ்சி நிலத்தில் ஐவன தினை நெற்கள் பயன்பாட்டில் பயிரிட்டு உள்ளதை அறியமுடிகின்றது.

**அவரைப் பயிரிடுதல்**

நார்சத்து மிகுந்து காணப்படுவது அவரைக்காய்.இன்றைய நாட்களைப் போன்றே மலை சார்ந்த நிலங்களில் கொடியில் விளையும் காய்கனிகள் விளைவிக்கப்பட்டுள்ளன. அவற்றுள், அவரைப் பயிரிடுதல் சங்க இலக்கியக் குறிப்புகளால் அறியமுடிகின்றது. இதனை,

*“பெரும்புனக் குறவன் சிறுதிணை மறுகால்*
*கொழுங்கொடி அவரை பூக்கும்”*[8]

*‘………………… குலவுக்குரல் ஏனல்*
*……………………………………..*
*குளிர்புரை கொடுக்காய் கொண்டன அவரை”*[9]

என்ற மேற்கண்ட அடிகள் மலைநிலங்களில் மிகுதியான அளவில் அவரைக்காயைப் பயிரிட்டனர் என்பதை அறியமுடிகின்றது.

**தினைப்புனத்தைப் பாதுகாத்தல்**

*”ஏரியினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்*
*நீரினும் நன்றதன் காப்பு ”* [10]

தினைப்புனத்தைப் பாதுகாத்தல் குறிஞ்சி நிலத்தின் முதன்மை பணிகளில் ஒன்றாக இருந்திருக்கிறது. இப்பணியில் ஆண், பெண், சிறுவர்கள் என அனைவரும் இப்பணியினைச் செய்துள்ளனர். மேலும் ஆண், பெண் காதலுக்கான சந்திப்பிற்குத் தினைபுனத்தைக் காத்தலே மையப் பகுதியாக இருந்துள்ளனர்.

தினை என்ற நெல்வகை உணவுப் பொருளை யானைகளும், பன்றிகளும், பறவை இனங்களும் உண்ண வருகைத் தந்து வயலை அழிக்கும் சூழ்நிலை ஏற்படுகின்றது. இச்சூழ்நிலையில்தான் தினைப்புனத்தை காவல் செய்யும் சூழ்நிலை உருவாகிறது. இதற்காக சங்ககாலத்தில் திணைப்புனத்தை காவல் செய்வோருக்குத் தனியே பரண் வீட்டு அமைப்பும், அவருக்கு உரிய வில் அம்பு போன்ற பெரிய ஆயுதங்களும் அவரிடம் இருந்துள்ளது. அதனை வைத்தே யானைகளையும் பன்றிகளையும் கிளி உள்ளிட்டவைகளையும் வயலினை சேதம் செய்யாதவாறு காத்துள்ளனர் என்பதை பின்வருமாறு பாடல் உணர்த்துகிறது.

**யானை, பன்றிகளிடமிருந்து பாதுகாத்தல்**

திணைப்புனத்தை பாதுகாப்பதில் பெரும்பங்கு யானையிடமிருந்தும் பன்றியிடமிருந்தும் பாதுகாத்தலே பெரும் பணியாக இருந்துள்ளது. அவற்றுள்,

***"கிளைஅமல் சிறுதிணை விளைகுரல் மேய்ந்து***

***கண்இனிது படுக்கும்"***[11]

***"புருவைப் பன்றி வருதிறம் நோக்கி***

***கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய***

***நெடுஞ்சுடர் விளக்கம்"***[12]

என்ற மேற்கண்ட அடிகள் பன்றியை விரட்டிட தீப்பந்தம் போன்ற ஒளியினை எழுப்பி அதன் வெளிச்சத்தில் பன்றிக்கு அச்சத்தை ஏற்படுத்தி விரட்டினர் என்பதை அறியமுடிகின்றது. இதனைப் போன்றே யானையை விரட்ட தீப்பந்தத்தை ஏற்றி மிரட்டி வைத்தனர் என்பதை,

**"துணையின் தீர்ந்த கடுங்கண் யானை**

**அணையக் கண்ட அம் குடிக் குறவர்**

**கணையர் கிணையர் கைபுனை கவணர்"(நற்.108,2-4)**

இவ்வரிகள் யானையினை விரட்ட வில்லம்பு தொழிலாளரும், கிணைப்பறை வாசிப்பவரும், கவணை எறிபவரும் கூட்டமாய்ச் சேர்ந்துவந்து யானையை விரட்டினர் என்பதை அறியமுடிகின்றது.

**2. கிளி உள்ளிட்ட பறவையிடமிருந்து பாதுகாத்தல்**

திணைக்கதிர்களை கொய்து உணவினைச் சேகரிக்க வருகின்ற அனைத்துவிதமான பறவைகளையும் விரட்ட பறையினை வாசித்தும், ஒருசில ஒலிகளை எழுப்பிடும் கிளி போன்ற பறவைகளை விரட்டியுள்ளனர். அவற்றுள்,

*“சிறுதிணை கொய்த இருவி வெண்கால்*
*காய்ந்த அவரைப்படு கிளிகடியும்”*[13]

*‘…………………….. குறமகள்*
*மென்றிணை நுவணை யுண்டு தட்டையின்*
*ஐவனச் சிறுகிளி கடியும்”*[14]

என்ற மேற்கண்ட அடிகளால் கிளியை விரட்ட தட்டையைப் பயன்படுத்தினர் என்பதை அறியமுடிகின்றது.

**பல்வகைப் பயிர் பாதுகாப்பு மேற்கொள்ளல்**

சங்க இலக்கிய காலத்தில் ஆண்களும், பெண்களும் எத்தகையவாறு தினைப்புனத்தை காவல் செய்தனர் என்றால் பறவை, விலங்குகள் இருபெரும் அஃறிணை உயிரினங்களை விரட்டி தினைப் புனத்தை காவல் செய்தவர்கள், கவண்கல் எறிதல், தீப்பந்தத்தைப் பயன்படுத்தி விரட்டுதல், வில் அம்பு எய்து விரட்டுவது என்ற பலவிதங்களில் தினைக்காத்தல் நிகழ்வை குறிஞ்சி நிலத்தவர் செய்துள்ளனர் என்பதை பின்வருமாறு அறியலாம்.

**1. கவண்கல் எறிதல்**

கவண்கல் என்பது உண்டிக்கோல் என்று குறிப்பிடுவர். அதாவது ஒரு கோலினை Y வடிவில் செய்து அதன் இரு முனையிலும் இரப்பரினால் கட்டிவைத்து இதனை உருவாக்குவர். அவ்வாறு உருவாக்கப்பட்ட இந்த கவண்கல்லின் மையத்தில் கல்லை வைத்து குறிவைத்து பறவை, விலங்குகளை விரட்டுவர். இத்தகைய கவண்கல் எறிதல் இன்றைய நாட்களிலும் இருந்துவருகிறது. அவற்றுள், யானையை விரட்ட குன்றுகளின் மேலிருந்து கவண்கல் எறிந்தனர் என்பதை,

*“திணைமேய் யானை இன்னிரிந்து ஓடக்*
*கல்லுயர் கழுதில் சேணான் எறிந்த*
*வல்வாய்க் கவணின்”*[15]

என்ற மேற்கண்ட அடிகளால் யானையை விரட்ட மரத்தின் மேலிருந்து கவண்கல் எறிந்தனர். இதனையே,

*“………………… கானவன்*
*நெடுவரை ஆசினிப் பணவை ஏறிக்*
*கடுவிசைக் கவணையில் கல்லை விடுதலின்”*[16]

என்ற மேற்கண்ட அடிகள் கவன் கல்லைப் பயன்படுத்தி யானையினை விரட்டி அடித்ததை அறியமுடிகின்றது.

**எரிகொள்ளியைக் காட்டுதல்**

இரவுப்பொழுதில் தினைக்கதிர்களை உண்ண வரும் யானைகளை விரட்ட எரிகொல்லி என்ற தீப்பந்தத்தைப் பயன்படுத்தி யானைக்கு அச்சத்தை ஏற்படுத்தி தினை வயல் பகுதியில் இருந்து அவற்றை விரட்டினர் என்பதை,

*“ஏனல்அம் சிறுதினை காக்கும் சேணோன்*
*ஞெகிழியின் பெயர்ந்த நெடுநல் யானை”*[17]

என்ற மேற்கண்ட அடிகள் யானையை விரட்ட தீப்பந்தத்தை வைத்து யானையை விரட்டியதை இவ்வரிகளால் அறியமுடிகின்றது.

**வில் அம்பெய்துதல்**

தினையை உண்ண, வயலினை அழிக்க வரும் பன்றியை வில் அம்புகள் எய்து கொன்று (வேட்டையாடி) பன்றி இறைச்சியைப் பகிர்ந்து உண்பர். அவற்றுள்,

*“………………… அம்குடிக்குறவர்*
*கணையர்”*[18]

*“சிறுகட் பன்றிப் பெருஞ்சின வொறுத்தல்*
*துறுகல் அடுக்கத்து வில்லோர் மாற்றி”*[19]

என்ற மேற்கண்ட அடிகள் பன்றியை விரட்ட வில்அம்பு எய்தனர் என்பதை அறியமுடிகின்றது.

**பொய்ப்புலி வைத்தல்**

யானை, பன்றி உள்ளிட்ட தினைப்புனத்தை அழிக்க வரும் விலங்குகளை புலிபோன்ற பொய் உருவத்தை உருவாக்கி அவற்றிற்கு அச்சத்தை உண்டாக்கி விரட்டுவர் என்பதை பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

*“கண்முகை வயப்புலி கழங்குமெய்ப் படுஉம்*
*புன்புலம்”*[20]

என்று பொய்புலியை வைத்து விலங்குகளை விரட்டினர் என்பதை இவ்வரிகளால் அறியமுடிகின்றது.

**பறை ஒலிப்பு**

பறை மாட்டின் தோலினால் செய்யப்படும் கருவி. பறை எல்லா நிலத்து மக்களாலும் இசைக்கப்படும் கருவி. இப்பறையை வைத்து சடங்குகளுக்கும், கலை நிகழ்ச்சிகளுக்கும், அரசு அறிவிப்புகளுக்கும் என்று இன்ப துன்ப நிகழ்வுகளை மேற்கொண்டுள்ளனர். அவ்வாறே தினையை உண்ணவரும் கிளிகளை விரட்ட தொண்டகப் பறையை வாசித்து அவற்றை அச்சம் உண்டாக்கி விரட்டினர் என்பதையும்,

***“தொண்டகப் பறை கொட்டி கிளிகளை ஓட்டினர் என்பதை,***
***(நற்.104:1-6)***

***கிணைப்பறை கொட்டி யானையை விரட்டினர் என்பதை***
***(நற்.108:2-4)***

என்று இப்பாடல் வரிகள் கிளிகளை விரட்ட தொண்டகப் பறையினை இசைத்தனர் என்பதை அறியமுடிகின்றது.

**தினையை உலரவைத்துக் குற்றுதல்**

உணவுப் பொருட்களை நீண்ட நாட்களுக்குப் பயன்படுவதற்கு சங்கத் தமிழர்கள் உணவுப் பொருட்களை உலரவைத்துப் பயன்படுத்தினர். அதாவது இன்றைய நவீன எந்திரங்கள் வருவதற்கு

முன்பு உணவுப் பொருட்களை உலரவைத்துப் பயன்படுத்தியிருக்கிறார்கள். இத்தகைய உலர வைத்துப் பயன்படுத்திய பொருட்களில் காய்க்கனிகளும், இறைச்சி வகைகளையும் இவ்வாறு உலர்த்தி தேவைக்கேற்ப பயன்படுத்தினர் என்பதை,

*“நிறைவளை முன்கை நேர்இழை மகளிர்*
*இருங்கல் வியல்அறைச் செந்தினை பரப்பி”*[21]

*“முகைவளர் சாந்துஉரல் முத்து ஆர் மருப்பின்*
*வகைசால் உலக்கை வயின்வயின் ஒச்சி*

*பகைஇல் நோய்செய்தான் பயமலை ஏத்தி*
*அகவினம் பாடுவாம் நாம்”*[22]

என்ற மேற்கண்ட அடிகள் மலை நிலமான குறிஞ்சி நிலத்து தினை உணவுப் பொருட்களை வெய்யிலில் பலநாட்கள் உலர வைத்து, பல நாட்களுக்குப் பயன்படும்படியாக பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

**வேங்கை மலர்தல் நோக்கி**

மருத நிலத்து வயல்வெளிகளில் நன்கு காய்ந்து முற்றிய நிலையில் உள்ள நெற்கதிர்களை காலச் சூழ்நிலைக்கு ஏற்ப அறுவடை செய்வதைப் போன்று குறிஞ்சி நிலத்தவர்களும் குறிப்பிட்ட காலத்தை சூழ்நிலையை நம்பிக்கையாகக் கொண்டு அறுவடையைத் துவங்கினர் என்பதை,

*“செங்கோல் கொடுங்குரல் சிறுதிணை வியன்புனம்*
*கொய்பதம் குறுகும் காலை”*[23]

*“செங்கேழ் ஆடிய செழுங்குரற் சிறுதிணைக்*
*கொய்புணம் காவலும் நுமதோ”*[24]

என்ற மேற்கண்ட அடிகளால் வேங்கைப்பூ பூக்கும் பருவமே அறுவடைக்குரிய காலம் என தமிழர்கள் எண்ணியதை அறியமுடிகின்றது. அதுபோன்றே,

***“துய்த்தலைப் புணிற்றுக்குரல் பால்வார்பு இறைஞ்சித்***

***தோடுதலைக் கொண்டன ஏனல்….***

***……………..***

***நன்னாள் வேங்கையும் அலர்கமர் இனியென”[25]***

***“காரரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கை”[26]***

இதனையே, அறுவடை செய்யும்போது உறங்காது இருக்க தொண்டகப் பறை ஒலிப்பர். இதனை,

***“சிறுதிணை விளைந்த வியன்கண் இரும்புனத்து***

***இரவு அரிவாரின் தொண்டகச் சிறுபறை***

***பாணாள் யாமத்தும் கறங்கும்***

***யாமம் காவலர் அவியா மாறே”[27]***

என்ற மேற்கண்ட அடிகள் குறிஞ்சி நிலமக்கள் தினைப்புனங்களை அழிக்க வருகின்ற விலங்கினங்களை விரட்ட தொண்டகப் பறையினை இசைத்து அச்சத்தை ஏற்படுத்தி விரட்டினர் என்பதை அறியமுடிகின்றது.

**கிழங்கு அகழ்தல்**

கிழங்கு அகழ்தல் குறிஞ்சி நிலத்தில் முதன்மை தொழில்களில் ஒன்றாக உள்ளது. அதாவது மலை நிலத்தில் இயற்கையாக விளையக்கூடிய கிழங்குகளை குறிஞ்சி நிலத்தார் அகழ்ந்து அதனை உணவாகப் பயன்படுத்துவர். அவற்றுள்,

***“பழங்குழி அகழ்ந்த காணவன் கிழங்கினொடு”[28]***

*"................................. காணவர்*

*கிழங்கழ் நெடுங்குழி மல்க வேங்கை"*[29]

என்ற பாடல் அடிகள் கானவர் என்ற குறிஞ்சி நிலமக்கள் கிழங்கினை எடுத்து உணவாகப் பயன்படுத்தினர் என்பதை அறியமுடிகின்றது.

**தேனெடுத்தல்**

தேனெடுத்தல் குறிஞ்சி நிலத்தில் முதன்மைத் தொழிலாக இருந்துள்ளது. அதாவது குறிஞ்சி நிலத்தில் வளரும் மிக உயரமான மரங்களில் தேனீக்கள் பெரிய பெரிய அளவில் தேன் கூட்டினைக் கட்டும். அவ்வாறு கட்டப்படும் தேன் கூட்டினை குறிஞ்சி நிலத்தார் சேகரித்து பிற நிலத்தைச் சார்ந்தவர்களுக்கு விற்பனை செய்தனர். அவற்றுள்,

*"அறையுறு தீந்தேன் குறவர் அறப்ப*

*முயலுநர் முற்றா ஏற்றுஅரு நெடுஞ்சினம்"*[30]

*"தேனின் இறால்என ஏணி இழைந்திருக்கும்"*[31]

*'பசுங்கேழ் இலைய நறுங்கொடித் தமாலம்*

*தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும்"*[32]

என்ற மேற்கண்ட பாடல் அடிகளால் தேனெடுத்ததைத் தொழிலாகக் கொண்டிருந்ததை அறியமுடிகின்றது.

**வேட்டையாடுதலும் உணவுத்தேவையைப் பூர்த்தி செய்தலும்**

உணவுத் தேவைக்கான இறைச்சிகளைப் பெறுவதற்கு சில விலங்குகளை வேட்டையாடி உண்ணுவர். அவற்றுள், தினையை உண்ணவரும் விலங்குகளை வேட்டையாடி உண்டுள்ளனர். அதாவது காட்டில் இரவுப் பொழுது உறங்காது குறவர்கள் கண்விழித்து வேட்டையாடினர் என்பதை,

**“மன்உயிர் மடிந்த பானாட் கங்குல்**

**காடுதேர் வேட்டத்து விளிவு இடம் பெறா அது” (அகம்.58:2-3)**

என்ற அடிகளால் இரவு நேரத்தில் குறவர்கள் கண்விழித்து வேட்டையாடினர் என்பதை அறியமுடிகின்றது. இதனைப் போன்றே, அம்பு கொண்டு பன்றியை வேட்டையாடினர் என்பதை,

***”வேட்டம் போகிய குறவன் காட்ட***

***குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர***

***முளவுமாத் தொலைச்சு”[33]***

என்ற அகநானூற்றுப் பாடலடிகளால் குறவர்கள் வேட்டையாடி பன்றிகளைப் பிடித்தனர் என்பதை அறியமுடிகின்றது. அவ்வாறு வேட்டையாடிய பன்றிக்கறியை அனைவருக்கும் பரிமாறினான் என்பதையும்,

***“காணவன் எய்த முளவுமான் கொழுங்குறை***

***தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்துகொடு***

***காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்”[34]***

என்னும் நற்றிணைப் பாடல் உணர்த்துகிறது. வேட்டையில் கிடைத்த பன்றிகறியை குறவர்கள் மலை நிலத்தில் உள்ள சிறுகுடியினருக்கும் பகிர்ந்து அளித்தான் என்பதையும் பாடல் உணர்த்துகிறது.

**மான்வேட்டை**

இன்று மான் வேட்டையாடுவது மட்டுமல்ல காட்டு விலங்குகளை வேட்டையாடுவது மிகப் பெரிய குற்றமாக இருக்கிறது. குறிஞ்சி நிலத்தில் இறைதேடி வரும் மான் கூட்டத்தை குறவர்கள் வேட்டையாடி உண்டனர். அதனை,

***”கோடு துவையாக் கோள்வாய் நாயொடு***

***காடுதேர் நசைஇய வயமான் வேட்டு***

***வயவர்”[35]***

***‘….. புள்ளி வரிக்கலை***

***வீளை யம்பின் வில்லோர் பெருமகன்”[36]***

என்ற மேற்கண்ட நற்றிணைப் பாடல் அடிகள் மூலம் குறவர்கள் மான்வேட்டை செய்ததை அறியமுடிகின்றது.

**யானை வேட்டை**

இன்று கடவுளின் உருவமாகப் பார்த்து வணங்கும் யானைகளை சங்க காலத்தில் பெரும்பஞ்சமான நிலையில் உணவுத் தேவைக்காக பெரும் உருவமான யானையினை கானவர்கள் வேட்டையாடி உண்டனர். இதனை,

*"............... கோல்தெரிந்து*
*வரிநுதல் யானை அருநிறத்து அழுத்தி*
*இகல்இடு முன்பின் வெண்கோடு கொண்டுதன்*
*புல்வேய் குரம்பை ஊன்றி"*[37]

*"பெருமலைச் சிலம்பின் வேட்டம் போகிய*
*செறிமடை அம்பின் வல்வில் கானவன்*
*பொருது தொலையானை வெண்கோடு கொண்டு*
*நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்"*[38]

என்னும் பாடல்கள் யானையை வேட்டையாடி மக்கள் உண்டனர் என்பதை உணர்த்துகின்றன.

**மூங்கில் நெல் சேகரித்தல்**

மூங்கில் மரத்தில் குருத்து நிலையில் காணப்படும் நெல்லினைச் சேகரித்து உணவாகப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

*"............. வயக்களிற்றுக்*
*கோடு உலைக்கையாக நல்சேம்பின் இலைகளகா*
*ஆடுகழை நெல்லை அறைஉரலுள் பெய்து"*[39]

என்ற மேற்கண்ட அடிகள் மூங்கில் சேகரித்து உணவாகப் பயன்படுத்தினர் என்பதை அறியமுடிகின்றது.

**குறத்தி குறிக்கேட்டல்**

குறிஞ்சி நில குறத்தியரின் முதன்மைத் தொழில்களில் ஒன்றாக குறிசொல்லுதல் உள்ளது. இங்கு தலைவியின் காமநோயை அறியமாட்டாத தாயார் அவளது வேறுபாட்டின் காரணத்தை ஆராயும் பொருட்டு அகவன் மகளாகிய கட்டு விரிச்சியையோ அல்லது கழங்குக் குறி பார்க்கும் வேலனையோ அழைத்துக் குறிகேட்பர். அவை முறையே கட்டுக்கேட்டல், கழங்குப் பார்த்தல் எனப்பெயர் பெறுகிறது.

**கட்டுக்கேட்டல்**

கட்டுக்கேட்டல் என்பது முறத்தில் நெல்லை வட்டமாக பரப்பி வைத்துத் தெய்வங்களைப் பாடி எண்ணிப் பார்த்துக் கட்டுவித்தி காணும் குறி என்று கூறுவர். இதனை,

***நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென***

***முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூறக்***

***களம்நன் கிழைத்துக் கண்ணி சூட்டி***

***வளநகர் சிலப்பப் பாடிப் பலிகொடுத்து***

***உருவச் செந்தினை குருதியொடு தூஉய்***

***முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்"***[40]

*என்ற மேற்கண்ட அடிகள் தெய்வத்தை எண்ணி கட்டுக்கேட்டலை அறியமுடிகிறது. மேலும் இந்நிகழ்வில்* முதுவாய்ப் பெண்டிர் என்பது அகவன் மகளை குறிப்பதாக வந்துள்ளது.

**கழங்கு பார்த்தல்**

கழங்குக் குறி என்பது கட்டுக்குறியைப் போன்று வேலன் கழற்சிக் காய்கள் மூலம் குறியறிந்துணர்த்துவதாம்.

***"ஆகுவ தறிவு முதுவாய் வேல***

***கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்***

***மாறா வரும்பணி கலுழுங் கங்கலில்***

***ஆனாது துயருமெங் கண்ணினிது படீஇயர்***

*ஏம்மனை முந்துறந் தருமோ*

***துன்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே"*[41]**

தலைவியின் வருகையைப் பற்றி அறிவதற்கு நற்றாய் கழங்கு பார்க்கிறாள். "உடன்போக்கு சென்ற தலைவி எம் வீட்டிற்கு முதலில் வருவாளா? இல்லை நான் தலைவியை காண தலைவன் வீட்டிற்கு முதலில் செல்வேனோ? என்று நினைத்து நற்றாய் கழங்கு பார்க்கிறாள். குறிப்பார்த்தலின் ஒரு பகுதியாக இம்முறைகள் இருந்துவந்துள்ளன என்பதை பாடல் உணர்த்துகின்றன.

**வேலன் வெறியாட்டு**

அகநானூற்றில் வெறியாட்டு பற்றிய பல செய்திகள் காணப்படுகின்றன. முருகனை வழிபடும் போது ஆடும் ஆட்டம் வெறியாட்டு எனப்படும்.

***"காடுகெழு நெடுவேட் பாடுகொளைக்கு ஏற்ப,***

***அணங்கு அயர் வியனகளம் பொலிய"*[42]**

குறிஞ்சி நிலக் கடவுளாம் முருகனைப் பாடும் பாட்டிற்குப் பொருந்த வெறியாட்டு அயர்கின்ற அகன்ற களம் அழகுறுமாறு" என்பது பாடலின் பொருளாகும்.

**யானைத் தந்தம் எடுக்கும் தொழில்**

குறிஞ்சி நில கானவர்கள் யானைத் தந்தந்தை எடுக்கும் தொழிலை மேற்கொண்டனர் என்பதை,

***'பெரு மலை சிலம்பின் வேட்டம் போகிய***

***செறி மடை அம்பின் வல் வில் கானவன்***

***பொருது தொலை யானை வெண் கோடு கொண்டு***

***நீர் திகழ் சிலம்பின் நன் பொன் அகழ்வோன்'"*[43]**

என்ற அடிகளால் கானவர்கள் யானைத் தந்தத்தைச் சேகரித்தனர் என்பதை அகநானூற்றுப் பாடல் உணர்த்துகிறது.

**முல்லை நிலம் தொழிலாதாரங்கள்**

முல்லை நிலம் என்பது காடும் காடுசார்ந்த பகுதியும் ஆகும். இங்கு ஆயர், ஆய்ச்சியர், இடையர், கோவலர் என்னும் மக்கள் வாழ்ந்தனர். இங்கு ஆநிரை மேய்த்தல், ஆநிரைகள் மூலம் பெறப்படும் பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் எடுத்தல் போன்றன சிறப்பான தொழில்களாகவும், மாலைக் கட்டுதல், ஆடுமேய்த்தல், சாமை – விரகு பயிர் வைத்தல், மாலை கட்டுவிற்றல், கிணறு தோண்டுதல், தச்சு தொழில் போன்றவை முல்லை நிலத்தார் செய்த தொழில்களாகப் பின்வருமாறு ஆய்ந்தறியப்படுகின்றன.

**ஆநிரைப் பாதுகாத்தல்**

மாடுகளை பராமரித்து அவற்றிடமிருந்து பால்கரந்து அதனை தயிர், மோர், வெண்ணெய், நெய்யாக மாற்றி விற்பனை செய்வது அன்றைய காலம் முதல் இன்றைய காலம் வரையில் ஆயர்களின் தொழிலாக இருக்கிறது. அதாவது காடுசார்ந்த பகுதியில் வாழும் மக்களின் முதன்மைத் தொழிலாக இருக்கிறது. அவ்வாறு மாடுகளை பராமரித்தலில் சேறு நிறைந்த இடத்தில் படுக்கவிடாமல் மரத்தில் கயிற்றைத் தூக்கிக்கட்டி வைத்திருந்தனர் என்பதை,

***"துளியுடைத் தொழுவின் துணிதல் அற்றத்து***
***உச்சிக் கட்டிய கூழை ஆவின்"*[44]**
***"வேய்பயி லிறும்பிற் கோவலர் யாத்த***
***ஆபுண் தெண்மணி இயம்பும்"*[45]**

என்ற மேற்கண்ட அடிகள் மாடுகளை சேறானப் பகுதியில் கட்டாமல் நல்ல இடங்களில் கட்டிவைத்தனர் என்றும் மாடுகளின் கழுத்தில் மணி கட்டி வைத்திருந்தனர் என்றும் அறியமுடிகின்றது.

வேற்றுவர் நிலங்களுக்குச் செல்லாமல் புல் உள்ள இடங்களில் மட்டும் மேயவைத்தனர். இதனை,

***"திரிமருப்பு இரலை புல்லருந்து உகள***
***முல்லை வியன்புலம் பரப்பி"*[46]**

***தினைக் காலுள் யாய்விட்ட கன்று மேய்க்கிற்பதோ”47***

என்றுரைக்கிறது மேற்கண்ட அடிகள் இதன் மூலம் மாடுகளை புல் உள்ள இடங்களில் மேயவைத்தனர் என்பதை அறியமுடிகின்றது. அவ்வாறு மேய்க்கையில் மழையில் நனைந்து கொண்டே மேய்த்து நடந்தனர் என்பதை,

***“.................... கோவலர்***

***எல்லுப்பெயல் உழந்த பல்லான் நிரையொடு***

***நீர்திகழ் கண்ணியர், ஊர்வயின் பெயர்தர”48***

என்ற மேற்கண்ட அடிகள் மாடு மேய்த்தல் தொழியினை எவ்வாறு நேசத்துடன் செய்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

**ஆடு மேய்த்தல்:**

முல்லை நிலத்து ஒரு மாந்தர்களாக இருப்பவர்கள் இடையர்கள். இவர்கள் ஆடுமேய்த்தனர் என்று இலக்கியப் பதிவாக இருக்கிறது. அதனை,

***“ஆடுதலைத் துருவின் தோடுதலைப் பெயர்க்கும்***

***வன்கை இடையன் எல்லிப் பரீஇ”49***

என்ற நற்றிணைப் பாடல்வழி இடையர்கள் ஆடுகளை மேய்த்தனர் என்பதை அறியமுடிகிறது. அவ்வாறு மேய்க்கின்ற போது விலங்குகளிடமிருந்து பாதுகாக்கும் விதமாக கவனத்துடன் காத்திருந்தனர் என்பதை,

***“.................... இடையன்***

***மடிவிடு வீளை கடிதுசென்று இசைப்பத்***

***தெறிமறி பார்க்கும் குறுநரி வெரீஇ***

***முள்ளுடைக் குறுந்தூறு இரியப்போகும்”50***

என்று அகநானூற்றுப் பாடல் உணர்த்தும் குள்ளநரியிடமிருந்து காக்கும் விதமாய் ஆடுமேய்த்தனர் என்பதை இப்பாடல்வழி அறியமுடிகின்றது.

**பால் விற்றல்**

முல்லை நிலத்து ஆயர்கள் மாடு மேய்த்தல் தொழிலைச் சிறப்பாகச் செய்தனர். முல்லை நிலத்தில் வாழும் கோவலர் என்பவர்களும் மாடுகளை மேய்த்து பராமரித்து அவற்றிடமிருந்து பாலினைக் கறந்து மற்ற நிலங்களுக்குக் கொண்டுச் சென்று விற்றுள்ளனர். இதனை,

***"கழுவொடு கடுபடை சுருக்கிய தோற்கண்"*** [51]

எனும் பாடல் அடிகள் மாடுகளிடம் கோவலர்கள் பால்கறந்தை உணர்த்துகின்றது. அவ்வாறு மாடுகளிடம் பாலினைச் சேகரிக்க சில நேரங்களில் மாடுகள் மேயும் இடத்திற்கே சென்று பால் கறந்தனர் என்பதை,

***"கலத்தொடு யாம் செல்வழி நாடி புலத்தும்"*** [52]

எனும் பாடல் வரிகள் பாலினைக் கலத்தில் சேகரிக்கும் விதத்தினைக் காட்சிப்படுத்துகின்றது. அவ்வாறு சேகரித்த பாலினை சிறுவர்கள் மற்ற நிலங்களுக்கு எடுத்துச் சென்று பாலைக் கொடுத்து பண்டமாற்றாக கூழை வாங்கினர் என்பதை,

**பாலொடு வந்து கூழொடு, பெயரும்**

**பாடுடை இடைமகன் சென்னி" (குறுந்.221:3-4)**

என்ற மேற்கண்ட அடிகள் வழி சிறுவர்கள் பெற்ற பண்ட மாற்று நிகழ்வையும் அறியமுடிகின்றது. கோவலர்களைப் போன்றே இடையர்களும் ஊருக்குள் பாலைவிலை கூறி விற்றனர் என்பதை,

**"பறிப்புறத்து இட்ட பால்தொடை இடையன்"** [53]

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் இடையர்கள் பாலினை விலைகூறி ஊருக்குள் விற்றதை அறியமுடிகின்றது.

**தயிர் கடைந்து மோராக விற்றல்**

ஆயர்குலப் பெண்கள் மாடுகளில் கரந்த பாலினை தயிராக மாற்றி அதனை மத்து என்ற கருவியைக் கொண்டு நன்கு கடைந்து

மோராக செய்து அதனை மற்ற நிலங்களுக்கு எடுத்துச்சென்று விற்றனர் என்பதை சங்க இலக்கியம் கூறுகிறது. அவற்றுள்,

***'மத்தம் பிணித்த கயிறுபோல்"[54]***

*ஆயர்குல பெண் தயிர் கடைந்த செய்தியை,*

***"பல்ஊழ் தயிர் கடையத் தாஅய............."[55]***

***"பேர்வரும் சிற்றூரும் கௌவை எடுப்பவள் போல்***
***மோரொடு வந்தாள்"[56]***

என்ற மேற்கண்ட அடிகள் ஆயர்குலப் பெண்கள் மத்தினை வைத்து சிறந்த முறையில் மோர் எடுப்பதைக் காட்டுகிறது. அவ்வாறு எடுத்த மோரினை சிற்றூரின் கண் ஆரவாரமாக சென்று மோர் விற்றனர் என்பதை,

***"............................ அளைமாறி யாம்வரும்***
***செல்வம் எம்கேள்வன் தருமோ....."[57]***

இப்பாடல் அடிகளால் ஒருவித குரலோசையினால் ஒலித்துச்சென்று மோரினை விற்றிருப்பர் என்பதை உணர்ந்துகொள்ள முடிகின்றது. இதனையே (மு.க.8, 5) இவ்வரிகளாலும் அறியலாம். இங்ஙனம் அவ்விடமே ஆதாரமாக இருக்கக் கூடியவற்றை வைத்து அவற்றிலிருந்து கிடைக்கக் கூடிய பொருள்களைக் கொண்ட தொழில் செய்தனர் என்பதை அறியமுடிகிறது.

**வரகு பயிரிடல்:**

முல்லை நிலத்தார் காடுகளில் ஓரங்களில் உள்ள மரங்களை வெட்டி எடுத்துவிட்டு நிலப்பரப்பாக வரகு சாமை உள்ளிட்ட உணவு உற்பத்தியைச் செய்துள்ளனர். அவற்றுள், காட்டை அழித்து வயல்வெளியாக மாற்றினர் என்பதை அகநானூறு 393: 4, 394: 3 என்ற அடிகளாலும் அறியமுடிகின்றது. அவ்வாறு காட்டை அழித்து உருவாக்கப்பட்ட நிலத்தில் வரகினை விதைத்து வளர்த்தனர் என்பதை,

*"பேர்உறை தலைஇய பெரும்புலர் வைகறை*
*ஏர்இடம் படுத்த இறுமாறு பூமிப்*
*புறமாறு பெற்ற பூவல் ஈர்த்து*
*ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்*
*வித்திய மருங்கின் விதைபல நாறி"*[58]

எனும் அகநானூற்று அடிகளால் வரகினை விதைத்து வளர்த்தனர் என்பதை அறியமுடிகிறது.

**வரகினை காவல்செய்து காத்தல்**

செழித்து விளைந்த வரகினை மயில்களும் முயல்களும் உண்ண வருவதிலிருந்து காத்தனர் என்பதை,

*"............... வரகின்*
*சுவைக்கதிர் இரும்புறம் கதூஉ உண்ட*
*குடுமி நெற்றி நெடுமாத் தோகை"*[59]

*"................ குறுமுயல்*
*முடந்தை வரகின் வீங்குபீள் அருந்துபு"*[60]

இப்பாடல் வரிகள் மூலம் வரகரிசியினை உண்ண வரும் முயல்களிடமிருந்தும் மயில்களிடமிருந்தும் பாதுகாக்குமாறு காவல்தொழில் செய்ய ஆட்கள் இருந்ததை அறியமுடிகின்றது.

**வரகு அறுவடையும் பயன்படுத்திய முறையும்**

முற்றி வளர்ந்த வரகினை அறுத்து பாறையில் காயவைத்தனர் என்பதை,

*"முதைச் சுவற் கலித்த ஈர்இலை நெடுந்தோட்டுக்*
*கவைக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி*
*கவட்டடிப் பொருத"*[61]

இதில் வரகினை அறுத்து பாறைகளில் நன்கு காயவைத்து எடுத்துப் பயன்படுத்தினர் என்பதை அறியமுடிகின்றது. மேலும் காயவைத்து எடுத்த வரகினை கதிரிலிருந்து பிரித்து எடுத்து வரகரிசி வேறு

புழுதியான தூசிகள் வேறாக பிரித்தும் தூய்மை செய்தும் பயன்படுத்தினர் என்பதை அகநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது.

*"கழல்மரம் சொலித்த சுளகுஅலை வெண்காழ்*

*தெடிமமாண் உலக்கை ஊழின் போக்கி*

*உரல்முகம் காட்டிய கரைதிறை கொள்ளை"*[62]

என்று பயன்படுத்திய முறையைச் சுட்டுகிறது.

**வேட்டைத்தொழில்**

குறிஞ்சி நிலத்தார் போன்றே முல்லை நில மக்களும் வேட்டையாடுதலை செய்தனர். அவ்வாறு வேட்டையாடும் முல்லை நில மக்கள் உடும்பு, மான், வரித்தவளை, ஈசல், முயல் போன்றவற்றை வேட்டையாடி உண்டுள்ளனர். அவற்றுள், முயல் வேட்டையாடினர் என்பதை,

*"மாலை வெண்காழ் காவலர் வீச*

*நறும்பூம் புறவின் ஒடுங்குமுயல் இரியும்"*[63]

என்று முயலினை வேட்டையாடினர் என்பதை இப்பாடல் மூலம் அறியமுடிகின்றது. அவ்வாறான முயல்வேட்டைக்குச் செல்பவர்கள் தடி கொம்புகளை கையில் எடுத்துச்சென்று முயல்வேட்டையாடி செய்தியை,

*"குறுங்கோல் எறிந்த நெடுஞ்செவிக் குறுமுயல்"*[64]

எனும் புறநானூற்றுப் பாடல்வழி உணர்த்தி நிற்கின்றது. அந்நிலப்பக்கத்தில் நடக்கும் முயல் வேட்டையைக் காட்சிப் படுத்துவதை அறியமுடிகின்றது.

**பூ விற்கும் தொழில்**

பூக்கள் எல்லா நிலங்களிலும் பூக்கின்றன. அவற்றுள் பூக்களை மாலையாகக் கட்டி விற்பனை செய்வது அக்காலத்திலேயே இருந்துள்ளது. முல்லை நிலத்தில் வசிக்கும் உழவர் குலப்பெண் சண்பக மலர்களை விற்பதை,

**“துய்த்தலை இதழ பைங் குருக்கத்தியாடு**

**பித்திகை விரவு மலர் கொள்ளீரோ” (நற்.97, 6-7)**

எனும் நற்றிணைப் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. முல்லை நிலத்து பெண் பூ விற்பனை செய்வதை இம்முல்லைநிலப் பாடல் சுட்டி நிற்கிறது.

**தச்சன் தொழில்**

மரத்தை அறுத்து அதன் மூலம் சிறு பொருள்களைச் செய்வோரே தச்சர் எனப்பட்டனர். தச்சன் செய்த சிறு தேரோடு குதிரைகள் பூட்டியபடி அத்தேரினை இழுத்து விளையாடுவர். தாம் வாழும் அக்காட்டில் உள்ள மரம் வழி பயன்பாடு அடைந்தனர்.

***“................................வைகல்***

***எண்தேர் செய்யும் தச்சன்***

***திங்கள் வலித்த கால் அன்னோனே”[65]***

***“தச்சன் செய்த சிறுமா வையம்”[66]***

முல்லை நிலத்து சிறுவர்கள் விளையாட சிறு தேர்களை செய்யும் தச்சுத் தொழிலில் இருந்துள்ளனர். மரம் கொண்டு தச்சுத் தொழிலை மேற்கொண்டனர் என்பதை இப்பாடல்கள் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

**கிணறு தோண்டும் தொழில்**

செம்மண் கலந்த முல்லை நிலத்தில் ஆடுமாடுகளுக்கு தண்ணீர் தரும்பொருட்டு கிணறுகள் தோண்டும் தொழிலை ஆயர்கள் செய்தார்கள். இதனை,

**“களர்படு கூவல் தோண்டி நாளும்**

**புலைத்தி சூழீஇய தூவெள் அறுவை” (புறம்.311, 1-2)**

என்ற மேற்கண்ட புறநானூற்றுப் பாடல் அடிகள் விலங்கினங்களும், பறவைகளும் தண்ணீர் அருந்தும் வகையில் கிணறுகளைத் தோண்டிய ஆயர்களின் செயல்பாட்டை அறியமுடிகின்றது.

**கூடை முறம் முடைதல்**

முல்லை நிலத்தில் கிடைக்கும் கோரை புற்களைக் கொண்டும், பனை ஓலை, நார் பொருட்களைக் கொண்டும், மூங்கில் மரத்தைப் பயன்படுத்தியும் கூடை முறத்தினை ஆயர்கள் செய்தார்கள். இதனை,

**வண்ணம் நீவிய வணங்கு இறைப் பணைத்தோள்**
**ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுக" (புறம்.32, 3-4)**

**"புலைத்தி ஒருத்தி பனை ஓலையைக் கிழித்த போழில்**
**தந்த கூடை வைத்திருக்கிறேன்" (கலி.117, 7-8 )**

என்ற அடிகளால் அறியலாம்.

**மருதநிலத் தொழிலாதாரங்கள்**

மருத நிலம் வயலும் வயல்சார்ந்த பகுதியாகும். இம்மருத நிலத்தைச் சுற்றி கிணறு, குளம், குட்டை, ஏரி, ஆறு என்ற நீர்நிலைகளும் வயல்வெளிகளும் அதிகமாக இருப்பதால் அவை சார்ந்த தொழில்களே அதிக அளவுக்கு இருந்திருக்க வேண்டும். மேலும் ஊர்ப் பகுதியினைக் கொண்ட இந்நிலத்தில்தான் அரசாட்சியும், கோயில் நிலைகளும் இருந்திருக்க வேண்டும். ஏனெனில் நெய்தல் நிலங்களில் மாட மாளிகைகள் இருந்தாலும் அவை அந்தப்புரங்களாக இருந்ததை பட்டினப்பாலை வரிகள் காட்டுகின்றது. அதன்வழி மருத நிலத்தில் விவசாயம் சார்ந்தும், அரசாட்சிகள் சார்ந்த தொழில்களும் அதிக அளவில் நடந்திருக்கும் என்பதை குறிப்பினால் உணரமுடிகின்றது. அவ்வகையில் மருத நிலத்தொழில் அமைப்புகள் ஆதாரங்கள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதை பின்வருமாறு ஆய்ந்தறிப்படுகின்றன.

**விவசாயம்**

**“சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்”**[67]

**“உழுவார் உலகத்தார்க்கு ஆணி”**[68]

வள்ளுவரின் வரிகளுக்கு ஏற்பச் சூழலும் இந்த உலகிற்கு ஆணிவேறாக இருக்கும் தொழிலாக விவசாயம் இருக்கிறது. ஏனெனில் உணவு இல்லாமல் எவராலும் வாழமுடியாது. விவசாயமே மனிதனின் உயிரைப் பாதுகாக்கும் முதன்மைத் தொழிலாக உள்ளது. மற்றவை யாவும் அதனைச் சார்ந்து வரும் பிறதொழில்களாகவே அமைவன. உணவு தேடியலைந்த மனிதனின் வாழ்வடிப்படையே அனைத்திற்கும் ஆதாரம். அதற்கு ஆதாயமாகத் திகழ்வது மருத நிலமாகும்.

**உழுதல்**

மருத நிலத்தின் தன்மை வயல்வெளிகளுக்கு ஏற்ப மண் வளம் பொருந்தி அமைந்திருப்பதாகும். ஏனெனில் மருத நிலத்தைச் சுற்றி நீர்நிலைகள் பல அமைந்திருப்பதால் விவசாயம் செய்ய ஏற்ற மண் அமைப்பு காணப்படுகின்றது. அவ்வாறு இருந்தாலும் மண்ணை நன்கு பக்குவப்படுத்திய நிலையிலேயே பயிரினங்களை விளைவிக்கமுடியும். இந்நிலையில் உழுவுதல் (ஏர் ஓட்டுதல்) முதன்மைத் தேவையாக உள்ளது.

உழவுத் தொழிலே மருதநில மக்களின் முதன்மை தொழிலாகும். இவர்கள் உழவுத்தொழிலை செய்வதால் உழவர்கள் எனப்பட்டனர். இவர்கள் தங்கள் நிலத்திற்கும் மற்ற நிலத்தாருக்கும் கூட உழவுத் தொழிலைச் செய்தனர். அவற்றுள்,

**“தண்துளிக்கு ஏற்ற பலஉழு செஞ்செய்**
**மண்போல் நெகிழ்ந்து”**[69]

எனும் பாடல் வரிகள் உழுதலைச் செய்ததையும் மண் வளத்திற்கேற்ற வன்மை உழுதலை மேற்கொண்டனர் என்பதை உணர்த்தி நிற்கின்றன.

**நெல் பயிரிடல்**

நெல்லை விதைக்கும் அளவுக்கு நன்கு மண்ணைப் பக்குவப்படுத்திய நிலையில் நெல் விதைகளை விதைப்பர். அவ்வாறு விதைக்கும் போது தங்களுக்கான கடவுளை வணங்கிய பின்னரே விதைகளை விதைப்பர். அவற்றுள், ஈரமான சேற்றில் பழந்தமிழர் நாற்றுகளை நட்டனர் என்பதை,

***"அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்***
***மறுகால் உழுத ஈரச் செருவின்***
***வித்தொடு சென்ற வட்டி"[70]***

***"நீர்உறு செறுவின் நாறுமுடி அழுத்த நின்***
***நடுநரொடு சேறி ஆயின்"[71]***

எனும் நற்றிணைப் பாடல் அடிகளின்வழி நாற்றினை ஈரமான சேற்றில் நட்டனர் என்பதை அறியமுடிகின்றது.

**எருவிடுதல்**

விதைக்கப்பட்ட பயிர்கள் நன்கு செழித்து வளர எருவிடுதல் தேவைப்படுகிறது. எரு(உரமாக)வாக சங்க காலங்களில் விலங்கினங்களின் (மாட்டுச் சாணம், ஆட்டுப் புழுக்கை) கழிவுகளைப் பயன்படுத்தினர். அச்செயல்கள் இன்றைய காலம் வரை தொடர்ந்து வருகின்றன. அவற்றுள், சாணத்தை காயவைத்து எருவாகப் பயன்படுத்தினர் என்பதை,

***"மூன்றில் உணங்கால் மாந்தி மன்றத்து***
***எருவின் நுண்தாது குடைவன ஆடி"[72]***

என்ற குறுந்தொகை பாடல் அடிகள் மருதநிலத்து மக்கள் மாட்டுச் சாணத்தை உரமாகப் பயன்படுத்தியதை உணர்த்துகின்றது. இதனையே, மலைபடு.531 பாடலும் உணர்த்துகிறது.

**களைப்பறித்தல்**

களைகள் நாம் வளர்க்கும் பயிருக்கும் வளர்ச்சிக்கும் உரிய தன்மையைக் கெடுக்கும் பிறச்செடிகள், பயிர்கள் வளர்வதை களைகள் என்று கூறலாம். எனவே நாம் பயிரிடும் பயிர்கள் நன்கு வளர்வதற்கு களைப்பறித்தல் முதன்மை தொழிலாகவும், தேவையாகவும் இருக்கவேண்டும். ஏனெனில் களைகள் வளர்வது பயிரை பாதிக்கும் செயலாக அமைந்துவிடும்.

***"............................ அவண***

***சாயும் நெய்தலும் ஓம்புமதி"[73]***

என்ற மேற்கண்ட அடிகளால் களைப்பறிப்பு பற்றி அறியமுடிகின்றது. அவை போன்றே பயிர்களுக்கு இடையில் வளர்ந்திருந்த ஆம்பல் மலர்களைப் பறித்து வெளியில் எடுத்தனர் என்பதை,

***"................... பழனத்து***

***ஏந்து எழில் மாலர தும்புடைத் திரள்கால்***

***ஆம்பல் குறுநர்"[74]***

என்று குறுந்தொகைப் பாடல் அடிகள் பயிரினத்துக்கு இடையில் ஆம்பல் மலர் வளர்ந்திருப்பதைக் கண்டு களையெடுத்ததை அறியமுடிகின்றது.

**கழனி காவல் செய்தல்**

மழையினாலும், மக்களாலும், விலங்கு, பறவைகளாலும் பயிருக்கு பாதிப்பு ஏற்படுவதைத் தடுக்க சங்க காலத்தில் கழனிகளில் காவலர்கள் இருந்துள்ளனர். இவர்களை கழனி காவலர் என்று நற்றிணை 280:7 என்ற அடிகளால் சுட்டப்படுவதை அறியமுடிகின்றது. அவற்றுள், மழையால் நெற்பயிர்கள் பாதிக்காமல் இருக்க அருகிலேயே காவலர்கள் இருந்தமையை,

*“மாரி கடீகொளக் காவலர் கடுக”*[75]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் வயலினைப் பாதுகாக்க காவலர்கள் இருந்ததை உணர்த்துகின்றது.

**நெல்லறுத்தல்**

முற்றிய நிலையில் உள்ள நெற்கதிர்களை உரிய காலத்தில் அறுவடை செய்யவேண்டும். ஏனெனில் உரிய காலத்தில் அறுக்காவிடில் யாருக்கும் பயன்தராமல் பாழ்பட்டுப் போகும். எனவே உரிய காலத்தில் நெல்லறுத்தலை சங்கத் தமிழர் முறையோடு பின்பற்றினர். அத்தொழில் அவ்வாறு நெற்கதிரை அறுவடை செய்யும் முன்பு அக்கதிர்களை வைக்கும் களத்தினையும் தயார் செய்தனர் என்பதை,

***“வேங்கைக் கண்ணியர் எருதுஏறி களமர்***
***நிலம்கண் டன்ன”***[76]

என்ற நற்றிணை அடிகளால் களத்தினை தயார் செய்தமையை அறியமுடிகின்றது.

**நெல்லறுவடை செய்யும் தனிமுறை**

நெல்லறுக்கும் போது நெற்கதிர்களை பறவைகள் கொய்து செல்லாமல் இருக்க தண்ணுமை எனும் பறை இசைக்கருவியை இசைத்தபடியே நெல்லறுத்தனர் என்பதை நற்றிணை, அகநானூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் நெல்லறுக்கும் தொழில் செய்யும்போது மனமகிழ்வுடன் செய்தனர்.

***“எரியகைத் தன்ன தாமரை இடைஇடை***
***அரிந்துகால் கவித்த செந்நெல் விளைஞர்”***[77]

***“வெண்ணெய் அரிநர் தண்ணுமை வெரீஇப்***
***பழனப் பல்புள் இரீய”***[78]

*“நெல்விளை கழனி நேர்கண் செறுவின்*

*அரிவலர் இட்ட சூட்டயல்”*[79]

*கதிரை கட்டுபோல கட்டினர்“*[80]

பல்வேறு பாடல் அடிகளால் நெற்கதிர்களை அறுத்துக்குவித்தனர் என்பதை அறியமுடிகிறது. அவ்வாறு அறுத்த நெற்கதிர்களை காளைகளைவிட்டு மிதிக்கச் செய்து நெற்பயிரினைப் பிரித்தனர் என்பதை,

***“நீர்சூழ் வியன்களம் பொலியப் போர்ப்பழித்துக்***

***கள்ளார் களமர் பகடுதளை மாற்றி”*[81]**

என்ற மேற்கண்ட அடிகள் மூலம் நெல்லைக் கட்டடித்து பிரித்த நெல்லைத் தூற்றிச் சேகரிப்பர் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும், அறுவடைக்குப் பின்னரும் தொடர்ந்து அதே பயிர் செய்தனர் என்பதை,

**“அரிகாற் பெரும்பயறு நிறைக்கும் ஊர்”**[82]

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் வரியும் அறுவடைக்குப் பின்னரும் அதே நெற்பயிரையே மீண்டும் முறைப்படி செம்மை செய்தனர் என்பதை இவ்வரிகளால் அறியமுடிகின்றது.

**கரும்பு பயிரிடுதல்**

பணப்பயிரில் ஒன்றாகக் கருதப்படும் கரும்பினை இறக்குமதிப் பொருளாகவே தமிழர் நிலங்களுக்குக் கொண்டுவரப்பட்டது. ஆயினும் மருத நிலத்தில் பெரும்பாலும் பயிரிடும் பயிராக அன்றைய காலம்முதல் இருந்துள்ளது.

கரும்பு நடுதல் என்பது ஏரோட்டி நன்கு பக்குவப்படுத்திய பின் சமம்செய்து (பரம்பு அடித்த ) அவற்றைப் பாத்திகள் போல பிரித்து கரும்பை நட்டனர் என்பதை கீழ்வரும் குறுந்தொகைப் பாடல்,

***“கரும்புநடு பாத்தி அன்ன***

***பெருங்களிற்று அடிவழி”*[83]**

எனும் பாடல் வரிகள் மூலம் பாத்திகளாகப் பிரித்து பின்னர் அவற்றில் கரும்பினை நட்டனர் என்பதை உணர்த்துகின்றது.

**கரும்பாலைத் தொழில்**

கரும்பு விளைச்சல் மிகுகின்ற இடங்களில் முதன்மைத் தேவையாக இருக்கவேண்டியது கரும்பாலையாகும். இந்த கரும்பாலைகளில் இருந்து வெள்ளம், கருப்பட்டி சர்க்கரை போன்றவை தயாரித்து எடுப்பர். அத்தகைய கரும்பாலைகள் கொண்டு உணவுப் பொருட்களைத் தயாரிப்பதை சங்க காலத்திலேயே தமிழர்கள் தொழிலாகச் செய்து பயன்படுத்தியிருந்தனர் என்பதை,

**"கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும்"[84]**

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் வரி கரும்பு இயந்திரத்தைச் சுட்டுவதாக அமைகிறது.

**மீன்பிடித்தல்**

நீர் நிலைகள் மிகுந்திருந்த மருத நிலப்பகுதியில் பாணர்கள் விவசாயம் செய்யாமல் மீன்பிடி தொழிலைச் செய்தனர் என்பதை,

***"நாள்துறைப் பட்ட மோட்டிரு வராஅல்***
***துடிக்கண் கொழுங்குறை"[85]***

என்ற மேற்கண்ட அடிகள் பாணர்கள் வைகறை பொழுதில் மீன் வேட்டையில் வராஅல் மீனைப் பிடித்தனர் என்பதை அகநானூற்றுப் பாடல் வரிகள் உணர்த்துவதாக அமைகிறது. இதனையே மதுரைக்காஞ்சி 263 அடிகளாலும் அறியமுடிகின்றது. அவ்வாறு மீன் பிடிக்கும் பாணர்கள் தூண்டில் போட்டும், வலைகள் வீசியும் மீனைப் பிடித்தனர். பாணர்கள் பிடிப்பதைப் போன்று மற்றவர்களும் மீனைப் பிடித்தனர் என்பதை,

***"கரும்புனல் அடைகரை நெடுங்கயத்து இட்ட***
***மீன்வலை மாப்பட் டாஅங்கு"[86]***

*“தூண்டில்வேட்டுவன் வாங்க வாராது”*[87]

*“நோன்ஞாண் வினைஞர் கோளறிந்து ஈர்க்கும்*
*மீன்முதிர் இலஞ்சி”*[88]

இங்ஙனம் குறுந்தொகை, அகநானூற்றுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. பாணர்களும் மற்றவர்களும் மருத நில நீர்நிலைகளில் தூண்டிலைப் பயன்படுத்தியும் வலையைப் பயன்படுத்தியும் மீனினைப் பிடித்தார்கள் என்பதையும் அறியமுடிகின்றது.

பாணர்கள் பாட்டுப் பாடி மன்னர்களிடம் பரிசில் பெறாத நாட்களில் மீன்பிடி தொழிலைச் செய்திருப்பார்கள் என்பதை உணர்ந்தறியமுடிகிறது.

**எருமை மேய்த்தல்**

ஆயர் மக்களைப் போன்றே மருத நில மக்களும் தங்கள் வயல்வெளிகளில் கால்நடைகளை மேய்த்து வளர்த்தும், அவைகளிடமிருந்து பால், தயிர், மோர், வெண்ணை, நெய் போன்றவற்றைப் பிரித்தெடுத்திருக்க வேண்டும். அவற்றுள் மருத நில சிறுவர்கள் எருமையை மேய்த்த குறிப்பினை நற்றிணைப் பாடல்கள் உணர்த்துகின்றன.

*“இரும்புனிற் றெருமைப் பெருஞ்செவிக் குழவி*
*பைந்தா தெருவின் வைகுதுயில் மடியும்”*[89]

*”ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்*
*பெரும்புலவர் விடியலின்”*[90]

இப்பாடல் வரிகளால் மருத நில சிறுவர்கள் எருமைகளை மேய்த்தல் தொழில் செய்தனர் என்பதை அறியமுடிகின்றது. எனவே அந்தந்த நிலம் சார்ந்த ஆதாரங்களைப் பயன்படுத்தி நிலத்திற்கேற்ற வண்ணம் தொழில் மேற்கொண்டனர் என்பதறியப்படுகிறது.

## நெய்தல் நிலம் தொழிலாதாரங்கள்

நெய்தல் நிலமானது கடலும் கடல்சார்ந்த பகுதியாக உள்ளது. இங்கு பரதவர்கள், உமணர் உள்ளிட்ட பலரும் திணை மாந்தர்களாக இருக்கிறார்கள். இவர்களின் தொழில்களாக இலக்கண இலக்கிய நூல்களில் காணப்படுவன மீன்பிடித்தல் –விற்றல், உப்புக் காய்ச்சுதல் – விற்றல், சங்கறுத்தல், முத்தெடுத்தல், கள் விற்பனை, அங்காடி வணிகம் செய்தல் ஆகிய தொழில்கள் பொதுவாகச் சொல்லப்படுகின்றன. அத்தகைய நெய்தல் நில தொழில் அமைப்புகள் பின்வருமாறு காணலாம்.

**மீன்பிடித்தல் தொழிலாதாரங்கள்**

பரதவர்கள் தங்களுக்கு அருகாமையில் உள்ள கடல் பகுதியில் கட்டுமரம், படகு, நாவாய் உள்ளிட்ட மிதவைகளைப் பயன்படுத்தி இரவு நேரத்தில் வலைகளை எடுத்துக்கொண்டு மீன்வேட்டைக்குச் செல்வர். அவ்வாறு இரவு செல்பவர்கள் இரவு முழுமையும் மீன்பிடித்து மறுநாள் காலையில் கரை திரும்புவர் என்பதையும்,

*'அம் கண் அரில் வலை உனக்கும் துறைவனொடு'*[91]

*'வேட்டம் பொய்யாது உலைவளம் சிறப்ப"*[92]

*"நீல் நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு*
*மீன் எறி பரதவர் மகளே; நீயே,"*[93]

*"முடிவலை முகந்த முடங்கு கிறாப் பாவைப்"*[94]

*"நெடுங்கடல் அலைத்த கொடுந்திமிற் பரதவர்*
*கொழுமீன் கொள்ளை அழிமணல் குவைஇ"*[95]

*"நடுநாள் வேட்டம் போகி வைகறைக்*
*கடல்மீன் தந்து கானற் குவைஇ"*[96]

மேற்காணும் நற்றிணைப் பாடல்கள் வழி அறியமுடிகிறது. அதனோடு பரதவர்கள் மீன்பிடிக்கச் சென்று திரும்பும் நிகழ்வையும் அறியமுடிகின்றது. மேலும், முறுக்குண்ட வலையைப் பிரித்துக் காயவிடுவதையும், மீன்வேட்டை வாய்க்க மழை பொய்க்காமல் பெய்யும். அதனால் வலைவளம் சிறக்கும் என்பதையும், நீல நிறத்தையுடைய பெரிய கடலும் கலங்குமாறு அதன் மேற் வலை வீசி மீனைப் பிடிக்கின்ற பரதவர்மகள் ஆவாள் என்பதையும் மேற்கண்ட சான்றுகளால் அறியமுடிகின்றது.

**மீன் விற்பனை – பெண்கள் பங்களிப்பு**

முந்நீர் வழக்கம் பெண்களிடம் இல்லை என்பதால் பரதவ ஆடவர் பிடித்த மீனை விற்பனை செய்வதில் பெண்களே பெரும்பங்காற்றினர் என்பதை இலக்கியச் சான்றுகளாலும் இன்றை வரை காணுகின்ற காட்சிகளாலும் அறியமுடிகின்றது. அவ்வாறு பரதவ மகளிர் மீன்கள் விற்பனை செய்ததை,

***“.....மாலை மகிழ்ந்த பரதவர்***

***இனிது பெறுமீன் எளிதினின் மாறி”***[97]

என்ற மேற்கண்ட அடிகள் வழி பெண்கள் மீன் விற்பனை அறியமுடிகின்றது. அவ்வாறு விற்பனை செய்வதில் நெய்தல் கடற்பரப்பில் இருக்கும் அங்காடிகளிலும் மீன் விற்பனை செய்ததை,

***“அகலங் காடி அசைநிழல் குவித்த***

***பச்சிறாக்”***[98]

என்றமேற்கண்ட சான்றுகள் அங்காடிகளில் மீன்விற்பனை செய்ததை உணர்த்துகின்றன.

**உப்பு காய்ச்சலும் விற்பனையும்**

சுவையான உணவினை உண்ணுவதற்கு “உப்பு” உவர்ப்பு சுவை அடிப்படையாகத் தேவைப்படுகின்றது. அத்தகைய உப்பினை கடல்நீரினைக் காய்ச்சிய பின்னரே உப்பாக மாற்றி எடுப்பர்.

அத்தகைய உப்புக்காய்ச்சி அதனை நெய்தல் நிலத்தார் மற்ற நிலங்களுக்கு விற்பனை செய்ததை,

***"வறப்பின் மாநீர் தாஅய்ச் சோறுபுலர்ந்து***

***இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்"***[99]

இங்ஙனம் காய்ச்சிய உப்பினைக் கொண்டு சென்று மற்ற நிலங்களில் பண்டமாற்றுச் செய்து நெல்லைக் கொண்டுவந்த பரதவர்கள் சோறு செய்து உண்டனர் என்று நற்றிணைப் பாடல் சுட்டுவதை அறியமுடிகின்றது.

உமணர் தங்களது வண்டிகளில் ஏற்றிக்கொண்டு சென்று விற்றனர் என்பதை நற்றிணை354: 8-9 வரிகளால் அறியலாம். இதனையே,

***"வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றிக்***

***கணநிரை கிளர்க்கும் நெடுநெறிச் சகடம்"***[100]

என்ற மேற்கண்ட அடிகள் உமணர்கள் உப்பை விற்பனை செய்ததை அறியமுடிகின்றது.

**முத்து எடுத்தலும் விற்றலும்**

கடலில் சிப்பியில் பிறக்கும் முத்தினை அணிகலனாக அணிவதற்கு சங்க காலம்முதலே பெண்கள் விரும்பியிருக்கிறார்கள். இதன் காரணமாக முத்து எடுப்பதையே தொழிலாக நெய்தல் நில பரதவர் இருந்துள்ளனர். இம்முத்தெடுத்தலை அனைவராலும் செய்ய இயலாது. மூச்சுப்பிடிக்கும் திறனுடையவர்களே ஆழ்கடலுக்குள் சென்று சிப்பியில் உள்ள முத்தினை எடுத்துவர முடியும். அத்தகைய திறனுள்ள முத்து எடுக்கும் திறன் சங்கத் தமிழர்களிடத்தில் இருந்துள்ளதை,

***"............. விரிதிரைக்***

***கண்திரள் முத்தம் கொண்டு ஞாங்கர்த்***

***தேனிமிர் அகன்கரைப் பகுக்கும்***

***கானலம் பெருந்துறைப் பரதவன்"***[101]

என்ற அகநானூற்று வரிகளால் ஆழ்கடலில் முத்தெடுக்கும் செயலை அறியமுடிகிறது. இத்தகைய முத்தை எடுப்பது முத்துக்குளித்தல் என்ற சொல்லால் இன்று அழைக்கப்படுகின்றது. இத்தகைய முத்தை அப்படியே பயன்படுத்துவதில்லை. அவற்றை கழுவித்தூய்மை செய்து முத்துக்கான மெருகூட்டுப் பணிகள் செய்து அணிந்தனர் என்பதை,

***'கை வல் கம்மியன் கவின் பெறக் கழா"***[102]

என்று நற்றிணை பாடல் வரியும் கைத்தொழில் வல்ல கம்மியன் அழகு பெறக் கழுவித்தூய்மை செய்து மெருகூட்டுவதை இவ்வடிகளால் அறியமுடிகின்றது. அத்தகைய சிறப்புமிகு முத்தினை பரதவர்கள் பிற நில மக்களுக்கு விற்றனர் என்பதை,

***"வளைபடு முத்தம் பரதவர் பகரும்"***[103]

என்று ஐங்குறுநூற்றுப் பாடல் வரியும் முத்தினை விற்பனை செய்யும் தொழிலையும் செய்ததாக உணர்த்துகின்றது. மேலும், முத்தினை அயல்நாட்டிற்கு ஏற்றுமதி செய்ததை "பட்டினப்பாலை" 189 வரிகளால் அறியலாம்.

**சங்கு அறுத்து விற்பனை**

கடலில் கிடைக்கக்கூடிய சங்கினை அறுத்து விற்பனை செய்வது நெய்தல் நில மக்களின் முதன்மைத் தொழிலாக இருந்திருக்கிறது. ஏனெனில் மற்ற நிலங்களில் சங்குகள் கிடைக்காது. கடலில் மட்டுமே சங்கு கிடைக்கிறது. இச்சங்குகளில் வலம்புரி சங்கும் சிறப்பான ஒன்றாகக் கருதப்படுகிறது. அத்தகைய சங்கினை அப்படியே பயன்படுத்தாமல் அதனை சுத்தம் செய்துசெய்து பயன்படுத்துவதை சங்கு அறுக்கும் தொழில் என்று கூறுவர். இதனை இன்று வேறு பொருளிலும் (கொலை செய்தல்) கூறுவர். அத்தகைய சங்குகறுக்கும் தொழிலை,

***"கோடுஈர் இலங்கு வளை நெகிழ்த்த***
***பீடுகெழு குரிசில்"***[104]

***"வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த"***[105]

சங்கு அறுக்கும் தொழிலைப் பற்றியக் குறிப்புகள் குறுந்தொகை, அகநானூறு பாடல்களிலும் இடம்பெற்றிருந்ததை அறியமுடிகின்றது.

**அயல்நாட்டினருடன் வணிகத்தொடர்பு:**

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர்கள் அயல்நாட்டினரோடு கொண்டிருந்த தொடர்பை சங்க இலக்கியம் மிகத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது.

**பல் ஆயமொடு பதிபழகி**
**வேறு வேறு உயர்ந்த முதுவாய் ஒக்கல்**
**சாறு அயர் மூதூர் சென்று தொக்காங்கு**
**மொழி பல பெருகிய பழிதீர் தேயத்துப்**
**புலம்பெயர் மாக்கள் கலந்தினிது உறையும்**
**முட்டாச் சிறப்பின் பட்டினம்“**[106]

என்னும் பாடல் வரிகளில் இதனை அறியலாம்.

அரிசி, இஞ்சி, தோகை முதலிய தமிழ்ச்சொற்கள் ஈப்ரு முதலிய மொழிகளில் இடம் பெற்றிருக்கின்றன. தமிழக வணிகர்கள் மிளகு வியாபாரத்தில் ஈட்டிய பெருஞ்செல்வத்தைப் பற்றியும், ரோமாபுரிக்கும் தமிழகத்திற்கும் உள்ள தொடர்பை பெரிபுளுசு, பிளினி போன்றோர் ஆய்வில் குறிப்பிட்டுள்ளனர்.

பிற நாட்டிலிருந்து பலமொழிகள் பேசக் கூடியவர்களும் தமிழகத்திற்கு வந்து இங்குள்ளவர்களிடம் ஒன்றாகக் கலந்து இனிதாக வாழும் நகரமாகக் காவிரிப்பூம்பட்டினம் விளங்கியிருக்கின்றது. பிறநாட்டிலிருந்து வந்து தமிழகத்தில் வாழ்ந்தவர்களைச் சங்க இலக்கியம் யவனர்கள் என்றும் மிலேச்சர் என்றும் குறிப்பிடுகின்றது. இதனை முல்லைப்பாட்டு என்கிற இலக்கியம் எடுத்துக்காட்டுகின்றது.

**வணிக நீதியும் வணிகர்களின் சிறப்பு:**

வணிகம் சிறந்த புகார் நகரத்திலே சிறந்த வணிகர்கள் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்களின் சிறப்பினை-

*"நெடு நுகத்துப் பகல் போல*

*நடுவு நின்ற நன்னெஞ்சினோர்*

*வடுவஞ்சி வாய்மொழிந்து*

*தமவும் பிறவும் ஒப்ப நாடி*

*கொள்வதூஉம் மிகை கொளாது*

*பல் பண்டம் பகர்ந்து வீசும்*

*தொல் கொண்டித் துவன்று இருக்கை"*[107]

என்று கருத்தாழமிக்க வரிகளில் பாடியிருக்கிறார் கடியலூர் உருத்திரங்கண்ணனார். வணிகர்கள், நீண்ட நுகத்தடியில் தைத்திருக்கும் நடு ஆணி போல் நடுவு நிலைமையோடு வாழும் நல் நெஞ்சத்தை உடையவர்கள். பழிக்கு அஞ்சி உண்மையே பேசுவார்கள்.

தம்முடைய பொருளையும், பிறருடைய பொருளையும் ஒரு தன்மையாகவே எண்ணுபவர்கள். பொருளை வாங்குவோரிடம் அளவுக்கு மேல் அதிகமாக வாங்கமாட்டார்கள். தாங்கள் கொடுக்கும் பண்டத்தையும் குறைத்துக் கொடுக்காமல் வணிகம் செய்பவர்கள் என பட்டினப்பாலை வணிக நீதியைக் காத்து நன்மைக் கருதினர் என்று உணர்த்துவதிலிருந்து அக்கால வணிகர்களின் வணிக மேலாண்மையை அறிய முடிகின்றது.

**நாளங்காடி, அல்லங்காடி**

சங்க காலத்தில் உள்நாட்டு வணிகமும், அயல்நாட்டு வணிகமும் சிறப்புற்று விளங்கின. கடற்கரை நகரங்கள் பட்டினங்கள் என்று அழைக்கப்பட்டன. மருவூர் பாக்கம், பட்டினப்பாக்கம் என இரண்டு பிரிவாக அவை விளங்கின. இப்பாக்கங்களில் நாளங்காடி, அல்லங்காடி என அங்காடிகள் பெயரிட்டு அழைக்கப்பட்டன. 'நாளங்காடி' என்பது பகலில் வணிகம் செய்த கடைகளுக்கும்,

'அல்லங்காடி' இரவில் வணிகம் செய்த கடைகளுக்கும் வழங்கிய பெயர்களாகும்.

**பல்வகைப் பொருள் குவியும் வணிக நகரம் ஆதலும்**

காவிரிப்பூம்பட்டினத்துத் தெருக்களிலே பல செல்வங்கள் குவிந்து கிடக்கின்றன. சூரியனின் சூடான கதிர்கள் நுழைய முடியாதபடி நிழல்தந்து கொண்டிருக்கும் வளமும் செழுமையும் நிறைந்த பூம்புகார் நகரம் என்றும் புகழ் மணம் மாறாது காக்கப்பட்டு வருவதாலே இங்கே வேற்று நாடுகளிலிருந்து கடல் வழியாகக் கொண்டுவரப்பட்ட குதிரைகளும், வண்டிகளில் ஏற்றிப் பக்கத்து ஊர்களில் இருந்து வந்த கரு மிளகு மூட்டைகளும், வடக்கே உள்ள மேரு மலையில் விளைந்த சந்தனமும், அகிலும், தெற்குக் கடலில் தோன்றிய முத்தும், கீழ்க்கடலில் வளர்ந்த பவளமும், கங்கைக் கரையில் இருந்து வந்த பொருட்களும், காவிரிக்கரை வளம் வழங்கிய பொருட்களும், கடாரத்தில் இருந்து வந்த நுகர் பொருட்களும் மற்றும் சீனம், யவனம் முதலிய பல நாடுகளில் இருந்து வந்த பல வகை வண்ணங்களும், இலங்கைத்தீவிலே உண்டான உணவுப்பொருள்களும் ஏராளமாகக் குவிந்து கிடக்கின்றன.

'காழகத்தீவு' என்று பெயர் பெற்ற பர்மாவிலிருந்து பல செல்வப் பொருட்கள் குவிந்துக் கிடக்கின்றன. இத்தகைய பல செல்வங் களுடன் சிறந்து விளங்கிய வணிக நகரம் தான் காவிரிப்பூம்பட்டினம். இதனைத்தான்,

*செல்கதில் நுழையாச் செழுநகர் வரைப்பின்*
*செல்லா நல்லிசை அமரர் காப்பின்*
*நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்*
*காலின் வந்த கருங்கறி மூடையும்*
*வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்*
*குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்*
*தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்*

*கங்கை வாரியும் காவிரிப் பயனும்*

*ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்*

*அரியவும் பெரியவும் நெரிய ஈண்டு*

*வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்"*[108]

என்கிற பாடல் வரிகள் எடுத்துக்காட்டுகின்றன.

**சுங்கம் வசூலித்தத் தொழிலாளர்கள்**

வெளியிலிருந்து நகருக்குள் வரும் பொருள்களுக்கு வரி வாங்கும் வழக்கம் இருந்துள்ளது. 'உல்கு' என்பது 'வரி'. அதனையே பின்னாளில் 'சுங்கம்' என வழங்கினர். அரசனுடைய ஆட்களே நடுநிலையிலிருந்து சுங்கம் வாங்குவார்கள். யாரும் அவர்களை ஏமாற்றிவிடமுடியாது. இந்தச் செயலை-

*மாகாவிரி மணம் கூட்டும்*

*தூஉ எக்காத் துயில் மடிந்து*

*வால் இணர் மடல் தாழை*

*நல்லிறைவன் பொருள் காக்கும்*

*தொல்லிசைத் தொழில் மாக்கள்*

*காய் சிதைத்த கதிர்ச் செல்வன்*

*தேர் பூண்ட மாசு போல*

*வைல் தோறும் அசைவின்றி"*[109]

என்ற பட்டினப்பாலையின் பாடல் வரிகள் விளக்கிக் குறிப்பிடுகின்றன. சுங்கம் வசூலிப்பதில் அவர்கள் எப்படி உண்மையாக நடந்து கொண்டார்கள் என்பதை இப்பாடலின் பொருள் விளக்குகின்றது. சுங்கம் வாங்குவோர் நள்ளிரவிலே காவிரியாற்று வெள்ளம் சூழ்ந்த மணல் மேட்டிலே உறங்குவார்கள். அவர்கள் உறங்கும் போது கூட தங்கள் கடமையில் கண்ணும் கருத்துமாயிருப்பர் என்றும் குறிப்பிடுகின்றது.

## பாலைநிலம் தொழிலாதாரங்கள்

பாலை நிலம் என்பது மணலும் மணல் சார்ந்த பகுதியாகும். இந்நில அமைப்பு நேரடியாக பழந்தமிழகத்திலும் இன்றைய தமிழகத்திலும் இல்லை. ஆனால் அதற்கான சூழ்நிலையை மாற்றிக்கொண்டு பயிர்கள் விளைவிக்கப்படாத வறண்ட நிலத்தை பாலை நிலம் என்று வழங்கியுள்ளனர். எனவேதான் நம் இலக்கண நூலில் நான்கு நில அமைப்பும், ஐந்திணை கருப்பொருட்களும் பேசப்பட்டுள்ளன. அதாவது குறிஞ்சி, முல்லை, மருத நிலங்களிலும் பயிர்செய்ய முடியாத வறண்ட நிலத்தை பாலை நிலம் என்றுதான் சொல்லவேண்டும். அத்தகைய பாலை நிலமானது அக்கால ஊர் எல்லைகளில் அமைந்திருந்தன. இவ்வெல்லைப் பகுதியில் வசிப்பவர்களாக மறவர்கள், எயினர், கள்வர்கள் போன்றோர் இங்கு வாழ்ந்திருந்தனர். இவர்களின் தொழிலாகச் சூரையாடுதல், வேட்டையாடுதல், புற்றரிசி எடுத்தல், பூ விற்றல், சுங்கக்கட்டணம் வசூலித்தர், கள்வர் வரிபெறல் போன்ற தொழில்கள் பாலை நிலத்தில் நடைபெற்றுள்ளன என்பதை பாடல்கள் உணர்த்துகின்றன.

### சூரையாடல்

சூரையாடல் என்பது கொள்ளையடித்தல், ஒருவரிடமிருந்து அடித்துப்பிடுங்குவது என்று பொருள் கொள்ளலாம். சங்க காலங்களில் வில்அம்பு கொண்ட வீரர்கள் வழிப்போக்கர்களைத் தாக்கி அவர்களிடம் இருந்து பொன் பொருள், உணவு உள்ளிட்டவற்றை கொள்ளையடிப்பர். அத்தகைய செயல் செய்பவர்களை ஆறலைக் கள்வர்கள் (திருடர்கள்) என்று கூறுவர். இவர்கள் எங்கேனும் மறைந்திருந்து வழிப்போக்கர் எல்லைக்குள் கடந்துசெல்லும் போது அவர்களிடமிருந்து தேவையானவற்றை அவர் உடைமைகளைத் தாக்கி பெறுவர். இதனை,

***“கடுங்கண் ஆடவர் ஏழுமுயல் கிடக்கை”***[110]

என்று கள்வர்கள் மறைந்திருந்து தாக்கி சூரையாடியதை இப்பாடல்வழி அறியமுடிகின்றது. மேலும், மரக்கிளையில் பதுங்கியிருந்து வழிப்போக்கரைத் தாக்கி சூரையாடினர் என்பதை,

***“ஆறுசெல் வம்பலர் வருதிறம் காண்மார்***
***வில்லவர் ஆடவர் மேலான் ஒற்றி***
***நீடுநிழலையா அத்துக் கோடுகொள் அருஞ்சுரம்”***[111]

என்ற மேற்கண்ட அடிகள் மூலம் மரக்கிளைகளில் சூரையாடுவோர் பதுங்கியிருந்து தாக்கியதை அறியமுடிகின்றது. இதனையே, குறுந்தொகை 274, 3-4 வரிகளாலும் அறியமுடிகிறது. சூரையாடலின் போது கொலை செய்வதும் 4 தம் பணியாக ஆறலைக் கள்வர்கள் செய்திருந்தனர் என்பது பற்றி எடுத்துரைப்பதாக,

***“அன்பில் ஆடவர் அலைத்தலின் பலருடன்***
***வல்பலர் தொலைந்த அஞ்சுவரு கவலை”***[112]

எனும் பாடல் சுட்டுகிறது. சூரையாடலின் போது நிகழும் கொலையினை கூறுவதை இதன் மூலம் அறியமுடிகின்றது.

**“ஆறசெல் வம்பலர் தொலைய மாறுநின்று**
**கொடுஞ்சிலை மறவர் கடற்கூட் டுண்ணும்”** (குறுந்.331, 2-3)

இதனையே (அகநானூறு 161, 2-4) என்ற பாடல் வரிகளாலும் அறியமுடிகின்றது.

**வரி பெறல்**

பாலை நிலத்தின் வழியே கடந்து செல்பவர்களிடம் கள்வர்கள் திறை பெற்றனர் என்பதை,

***“பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய***
***திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த***
***படுபுலாக் கமழும் ஞாட்பில்”***[113]

என்ற மேற்கண்ட அடிகளால் கள்வர்கள் வழிப்போக்கரிடம் வரிபெற்றனர் என்பதையும் அறியமுடிகின்றது.

**பூவிற்றல் தொழில்**

பூக்கள் எல்லா நிலத்திலும் வளர்கிறது. மற்ற நிலத்தவரைப் போன்று பூவிற்கும் தொழிலை பாலைநில பெண்களும் செய்துள்ளனர். பாலை நிலத்தில் கிடைக்கும் இலுப்பை மரத்தின் பூக்களைச் சேகரித்து சிற்றூர்களுக்கு எடுத்துச்சென்று விற்றுள்ளனர். இதனை,

*"பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்*
*கண்திரள் நீள் அமைக் கடிப்பின் தொகுத்து*
*குன்றகச் சிறுகுடி மறுகுதொறும் மறுகும்"*[114]

என்ற அகநானூற்றுப் பாடல் அடிகள் பூவிற்பனை செய்வதை உணர்த்தி நிற்பதை அறியமுடிகின்றது.

**கள்விற்பனை**

கள் உணவு அனைவராலும் உண்ணும் உணவாக அக்காலத்தில் இருந்துள்ளதை சங்க இலக்கியப் பாடல்களால் அறியமுடிகின்றது. கள் செய்முறையும் ஆற்றுப்படை நூல்களிலும் பட்டினப்பாலை நூலிலும் தெளிவாகச் சொல்லப்படுகின்றது. இன்றைய கள் செய்முறைக்கும் அன்றைய கள் செய்முறைக்கும் பல்வேறு மாற்றங்கள் இருந்திருக்கின்றன.

கள் விற்பனையை கடைகள் அமைத்தும், கள் கடைக்கு என்றே கொடியினைப் பறக்கச்செய்தும் கள் விற்பனை செய்தனர் என்பதை பட்டினப்பாலை கூறுகிறது. இத்தகைய கள் விற்பனையைப் பெண்கள் செய்தனர் என்பதை எட்டுத் தொகைப் பாடலிலும் குறிப்புகள் உள்ளன.

*"அரியற் பெண்டிர் அல்குற் கொண்ட*
*பகுவாய்ப் பாளைக் குவிமுலை கரந்த*
*வரிநிற கலுழி ஆர மாந்திச்*
*செருவேட்டுச் சிலைக்கும் செங்கண் ஆடவர்"*[115]

என்ற மேற்கண்ட அடிகள் உணர்த்தும் கள்விற்பனை செய்த பெண்களைக் காட்டுவதை அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகின்றது.

**வேட்டைத் தொழில்**

வேட்டைத் தொழில் பாலை நிலத்திலும் நடைபெற்றுள்ளது. அவ்வேட்டைகளானது பறவை வேட்டை, முயல் வேட்டை, மான் வேட்டை உள்ளிட்டவைகளைச் செய்தனர். அவற்றுள், வலையைப் பயன்படுத்தி பறவையைப் பிடித்ததை,

**"பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ**
**நெருங்காற் கணந்துளம் புலம்பிகொள்"[116]**

**"கொலைவல் வேட்டுவன் வலைபரிந்து போகிய**
**கானம் புறவின் சேவல்"[117]**

மேற்கூறிய நற்றிணைப் பாடல்கள் பறவைகளை வலையைப் பயன்படுத்தி பிடித்தனர் என்பதை அறியமுடிகின்றது. பாலை நிலங்களில் உள்ள முயலைப் பிடிப்பது எயினர்களின் ஒரு தொழிலாக இருந்துள்ளது. அதனை நற்றிணை 252:10-11 பாடல்கள் உணர்த்தும். இதுபோன்றே மான் வேட்டையாடுவதும் இருந்துள்ளதை,

***"தினைக்கள் உண்ட தெறிகோல் மறவர்***
***விதைத்த வில்லர் வேட்டம் போகி***
***முல்லைப் படப்பையும் புல்வாய் கொண்டு"[118]***

என்ற மேற்கண்ட அடிகளால் மான்வேட்டையாடும் பாலை எயிற்றியர் பற்றி அறியமுடிகின்றது.

## திணைசார் பொதுத்தொழில்கள்

**பொன் தொழில் செய்வோர்**

பொன்தொழில் செய்பவர்களைப் பொற்கொல்லர் என்பர். பொற் கொல்லர்களை உருக்குத்தட்டார், பணித்தட்டார் என்னும்

இருவகைகளாகப் பிரிக்கலாம். பொற்கொல்லரைப் பற்றியும் அவர்கள் தொழிலுக்கு உபயோகப்படுத்திய உரைகல்லைப் பற்றியும்

**“பொன் செய் கன்னம் பொலிய வெள்ளி”**[119]

என்னும் தொடர் மூலம் அறியலாம். இவ்வாறு சங்க கால சமுதாயத்தில் நிலப் பிரிவுகளுக்கு ஏற்ற தொழில் முறைகள் மாறுபட்டாலும் ஒரு நிலத்தாருக்கும் மற்றொரு நிலத்தாருக்குமிடையே நெருங்கியத் தொடர்பு இருந்தது. சங்க இலக்கியத்தில் பொன் உடைக்கும் கல்லைப் பற்றிய பதிவுகள் உள்ளதை,

***‘கட்டளை அன்ன இட்டு அரங்கு இழைத்து’***[120]

***“நறுந் தாது ஆடிய தும்பி பசுங் கேழ்ப்***
***பொன் உரை கல்லின் நல் நிறம் பெறூஉம்”***[121]

***'தூத் தகட்டு எதிர் மலர் வேய்ந்த கூந்தல்”***[122]

என இங்ஙனம் நற்றிணைப் பாடல்கள் பொன்தொழில் செய்கின்றவற்றைச் சுட்டிக் காட்டுகின்றன. தங்கத்தைப் போன்றே வெள்ளியின் பயன்பாட்டையும் செயல்பாட்டையும் பொன் கொல்லர்கள் செய்ததை,

***‘......................................, வெள்ளி***
***உருக்குறு கொள்கலம் கடுப்ப, விருப்புறத்***
***தென் நீர்க் குமிழி இழிதரும்”***[123]

என்ற மேற்கண்ட அடிகள் வெள்ளியை உருக்கிச் சாய்க்கும் கொள்கலத்தை ஒத்து வடியும் தெளிந்த நீர்க்குமிழியைக் காட்டுவதையும் கொண்டு வெற்றியால் செய்திருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

**இரும்புப் பொறி:**

இரும்புப் பொறி என்பது இரும்புத் தொழிலைக் குறிக்கும். அதாவது இரும்பை தீயில் உருக்கி வேண்டிய வடிவில் மாற்றுகின்றத் தொழிலாகும். இதனை,

*'.................................................... கொல்லன்*

*எறி பொன் பிதிரின் சிறு பல தாஅய்"*[124]

கொல்லனின் உலைக்களத்தில் அடிக்கும் இரும்பின் பொறி சிதறுவது போல பல காயை உடையது என்றும்,

*"இரும்பு செய் கொல்லன் வெவ் உலைத் தெளிந்த*

*தோய் மடற் சில் நீர் போல"*[125]

இரும்பு வேலை செய்யும் கொல்லன், தனது வெம்மை மிகுந்த உலையிலே பனைமடலில் தோய்த்துத் தெளிக்கும் சிலவாகிய நீர்த்துளிகள் உலையின் நெருப்பினைச் சிறிதே குறைப்பது போன்றது என உவமையாகவும் இரும்புத் தொழிலைக் காட்டுகின்றதையும் அறியமுடிகிறது.

**குயவுத் தொழில்:**

குயவுத் தொழிலைச் செய்பவர்கள் குயவர் என்று அறியப்பட்டனர். மேலும் குயவர்கள் களிமண்ணால் சக்கரத்தின் உதவினால் செய்த மட்பாண்டம், தாழி போன்றவற்றின் செய்திகளைச் சங்கப்பாடல்களால் கூறப்படுவதையும்,

*"இலங்கு மலை புதைய வெண் மழை கலைஇக்*

*கலஞ் சுடு புகையிற் றோன்றும்"*[126]

என அகநானூற்றுப் பாடல் உணர்த்தும். களிமண்ணில் சக்கரத்தின் உதவியால் செய்யப்பெற்ற மட்கலம் தீயில் சுடுகின்ற பொழுது நெருப்பினால் ஏற்படும் புகை வெள்ளிய மேகம் போன்று தோன்றி மலையையே மறைத்து நிற்கும் அளவில் தாழி செய்தனர் என்று கூறப்படுவதைக் காணமுடிகின்றது. இத்தகைய சான்றுகள் பலவும் அகழ்வராய்ச்சியின் மூலம் ஆதிச்ச நல்லூர், அரிக்கமேடு, மதுரை,

கரூர், பூம்புகார் போன்ற இடங்களில் காணப்பட்ட தாழிகளும் இதற்குச் சான்றுகளாகும். இன்றைய நிலையில் சற்று நவீனத்துடன் பல்வேறு வகையானப் பொருட்களைச் செய்யும் நிலை காணப்படுகின்றது.

**தச்சுத் தொழில்:**

தச்சுத் தொழிலின் சிறப்பை நெடுநல்வாடை உணர்த்துகிறது. அரசனின் கட்டிலைத் தச்சர் செய்தனர். அதன் கால்கள் வன்மை மிகு போரில் பொருதுபட்ட யானைக் கொம்பினால் திண்மையுடன் ஆக்கப்பட்டன என்பதை அறியமுடிகிறது. கதவு நிலை பல மரங்களை இறுகச் சேர்த்து அமைத்தது போலவும், அக்கதவின் நிலைக்கு மேலே குவளைப் பூவும் திருமகள் குலவும் பெண் யானைகள் சித்திரவடிவில் விளங்கியதையும் அறியலாம். யவனநாட்டுத் தச்சர்கள் தச்சுத் தொழிலில் திறமையுடன் விளங்கியமையால் இவர்கள் தச்சுத் தொழிலில் சிறந்து விளங்கினர் என்பதை அறிய முடிகிறது.

*“பொறற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்*
*முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்.”*[127]

என்று தச்சர்கள் செய்த தேரையும் சிறுவர்களின் முக்கால் வண்டியைப் பற்றியும் கூறப்படுவது தச்சுத் தொழிலை விவரிப்பதாகக் கருதலாம்.

**தொழிலும் தொழில்சார் பெயர்களும்**

பெயர்களால் அறியப்படும் தொழிலாளர்கள். புலவர் (கவிபாடுபவர்) ஓவியர் (வரைபவர்), பாடினி (பாடுபவர்), பாணர் (பண் இசைத்துப் பாடுபவர்), கூத்தர் (கூத்தாடுபவர்), துடியன் (துடியிசைக்கருவி இசைப்பவர்), பறையன் (பறை இசை இசைப்பவர்), மறவன் (போர் வீரர்கள்), வினைஞர் (ஏவல் தொழிலாளர்கள்), பார்ப்பனர் (ஆறுவகைத் தொழில் செய்பவர்), பருத்திப்பெண்டீர், கொன்டி மகளிர் உள்ளிட்ட பலரும் தொழிலாளர்களாக இருக்கிறார்கள்.

இங்ஙனம் நிலங்களுக்கேற்ற வண்ணம், சூழலுக்கேற்ற வண்ணம் செயல் மேற்கொண்டு, வாழ்வின் ஆதாரமாகத் தொழில்களைக் கொண்டிருந்தனர். தொழில்களில் வாழ்விற்குரியத் தேவைகளைப் பூர்த்தி செய்தனர். வாழ்வை வளப்படுத்தினர் என்பதும் தொழில் அடிப்படையில் பல்வகையிலும் சிறந்து தமிழ் மண்ணுக்குரிய வாழ்வாதாரத் தொழில்களாக கொண்டிருந்தனர் என இவ்வியல் ஆய்ந்துணர்கிறது.

**முடிவுரை**

நிலம் தொடர்பான ஐந்திணை மக்களிடத்தில் சங்க இலக்கியக் குறிப்புகளால் அறியப்படுகின்ற நிலம்சார்ந்த தொழில்கள் பற்றி ஆய்ந்துணர்த்தப்படுகின்றன. அவற்றுள் குறிஞ்சி நிலத்தின் தொழில்களாகத் திணைக்காத்தல், விவசாயம், தேனெடுத்தல், வெறியாடல், குறிச்சொல்லல், வேட்டையாடுதல் என்று தொழில்களை ஆதாரமாகக் கொண்டிருந்தனர் என்பதாய்ந்தறியப்பட்டுள்ளன.

முல்லை நிலத்தின் தொழிலாக வரகுசாமை விதைத்ததல், பால், தயிர், மோர், நெய் எடுத்து விற்றல், கிணறுதோண்டுதல், மாலை கட்டுதல் போன்றவையும் அந்நிலம்சார் உயிரிமைப் பொருள் கொடுக்கும் பொருள்களையே ஆதாரமாக்கி தொழிலாகக் கொண்டிருந்தனர் என்பதை ஆய்ந்துணர்த்துகின்றன.

மருத நிலத்தின் தொழிலாக விவசாயம், மீன்பிடித்தல், வேட்டையாடுதல் போன்றனவும், நெய்தல் நிலத்தின் தொழிலாக மீன்பிடித்தல், உப்புக்காய்ச்சுதல், சங்கறுத்தல், முத்துக்குளித்தல், கள்விற்றல் போன்றவையும், பாலை நிலத்தவர் தம் தொழிலாக சூரையாடுதல், வேட்டையாடுதல், புற்றரிசி எடுத்தல், பூ விற்றல், சுங்கக்கட்டணம் வசூலித்தல், கள்வர் வரிபெறல் போன்ற தொழில்கள் மேற்கொண்டு வாழ்வை வளப்படுத்தினர் என்பதை பாடல்கள் வழி ஆய்ந்துணர்த்தப்படுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. தொல்.அகம்.30 .
2. தொல்.பொருள்.192 .
3. நற்.209, 2 .
4. குறுந்.214:1 .
5. நற்.209: 3 .
6. குறுந்.100:1 .
7. குறுந்.371:2-3 .
8. குறுந்.82: 4-5 .
9. மலை.108-110 .
10. குறள்.1038 .
11. அகம்.178, 12-13 .
12. அகம்.88, 4-6 .
13. ஐங்குறு.286: 1-2 .
14. ஐங்.285:1-3 .
15. அகம்.392, 13-15 .
16. கு.க.5,8-10 .
17. குறு.357, 5-6 .
18. நற்.108, 3-4 .
19. ஐங்.267:1-2 .

20. ஐங்.246,2-3 .

21. குறுந்.335:1-2 .

22. கு.க.4, 4-7 .

23. நற்.57, 8-9 .

24. நற்.213, 9-10 .

25. நற்.206: 1-7 .

26. நற்.373: 6 .

27. குறுந்.375, 3-6 .

28. குறுந்.379:2 .

29. ஐங்குறு.208:1-2 .

30. அகம்.322:12-13 .

31. கு.க.3:9 .

32. நற்.292: 2-3 .

33. அகம்.182: 6-8 .

34. நற்.85: 8-10 .

35. நற்.276, 1-3 .

36. நற்.265: 2-3 .

37. அகம்.172, 7-10 .

38. அகம்.282, 1-4 .

39. கு.க.5, 1-3 .

40. அகம்:6-11

41. அகம்.202

42. குறுந்.382:5-6

43. அகம் 282;1-4 .

44. நற்.109, 7-8 .

45. நற்.264, 7-8 . .

46. அகம்.14, 6-7 .

47. மு.க.,33 .

48. அகம்.264, 4-6 .

49. நற்.169, 6-7 .

50. அகம்.274, 8-11 .

51. மு.க.6, 1-2 .

52. மு.க.16,16 .

53. நற்.142, 4 .

54. மு.க.10, 10 .

55. அகம்.224, 6 .

56. மு.க.9, 6-7 .

57. மு.க.6, 44-45 .

58. அகம்.194, 1-5 .

59. அகம்.194, 9-11 .

60. அகம்.284, 2-3 .

61. அகம்.393, 4-6 .

62. அகம்.393, 10-120 .

63. ஐங்.421, 1-2 .

64. புறம்.339, 4 .

65. புறம்.87, 3-5 .

66. குறுந்.61,1-3 .

67. குறள்.1031 .

68. குறள்.1032 .

69. அகம்.26, 24-25 .

70. நற்.210, 1-3 .

71. நற்.60:7-8

72. குறுந்.46:3-4 .

73. நற்.60: 8-9 .

74. குறு.178,1-3 .

75. ஐங்.29, 1 .

76. நற்.125, 9-10 .

77. அகம்.116, 1-2 .

78. நற்.350, 1-2 .

79. நற்.400, 2-3 .

80. அகம்.86:11-13 .

81. அகம்.83:1-2 .

82. ஐங்.47,3 .

83. குறு.262, 7-8 .

84. ஐங்.55, 1 .

85. அகம்.196, 2-3 .

86. குறுந்.171, 2-3 .

87. அகம்.36, 6 .

88. அகம்.186, 2-3 .

89. நற்.271, 1-2 .

90. நற்.80, 3-4 .

91. நற்:4.4 .

92. நற்-38:1 .

93. நற்-45:2-3 .

94. நற்-49:3 .

95. நற்.175: 1-2 .

96. நற்.388: 5-6 .

97. நற்.239, 2-3 .

98. நற்.258, 7-8 .

99. நற்.311, 3-4 .

100. நற்.4, 8-9 .

101. அகம்.280, 11-14 .

102. நற்- 94:4-5 .

103. ஐங்.195:1 .

104. குறு.31, 5-6 .

105. அகம்.24, 1 .

106. பட்டி.221-224

107. பட்டி. 231-237

108. பட்டி.133-145

109. பட்டி.141-156

110. அகம்.365: 7 .

111. அகம்.263: 6-8 .

112. நற்.352: .

113. அகம்.89, 12-14 .

114. அகம்.331, 5-7 .

115. அகம்.157, 1-4 .

116. நற்.212, 1-2 .

117. நற்.189, 7-8 .

118. அகம்.284, 8-10 .

119. அகம்.317:8

120. நற்.3:3 .

121. நற்-25.3,4 .

122. நற்-52:2 .

123. நற்-124:6-8 .

124. நற்-13:5,6 .

125. நற்-133:9-10 .

126. அகம்.330 .

127. பட்டி.24-25 .

# இயல் ஐந்து

## ஐந்நில மக்களின் வாழ்வியல் நெறிகள்

**முன்னுரை**

சங்க கால மக்களின் வாழ்வியல் நெறிகளை எடுத்துரைப்பதாக உள்ளது சங்க இலக்கியமாகும். இவற்றின் வழி பண்டையத் தமிழர் கடைபிடித்த ஒழுக்க நெறிகளை மேன்மைப் பண்பாட்டை, தனிமனித பண்புகள், சமூதாய உணர்வுகள், மக்களின் செயல்பாட்டு உணர்வுகள் என அனைத்தும் உள்ளடக்கிய செய்திகளை அறிவதே இவ்வியலின் முதன்மை நோக்கமாக அமைகின்றது.

**வாழ்வியல் நெறி:**

வாழ்வியல் நெறி என்பது ஒவ்வொரு மனிதனும் இப்படிதான் வாழவேண்டும் என்று தன்னுள் நெறிமுறைகளை வகுத்துக்கொண்டு வாழ்தல் ஆகும். வாழ்வியல் நெறிகள் என்பதை ஆங்கிலத்தில் Ethics என்றழைப்பர். Ethics என்ற ஆங்கிலச் சொல்லுக்கு தமிழில் நன்நெறிகள், அறவியல், அறநெறிக் கோட்பாடுகள், வாழ்வியல் ஒழுகலாறுகள், பண்புகள், ஒழுக்க முறைகள் முதலான சொற்களால் வழங்கி வருகின்றன. அவற்றுள் வாழ்வியல் நெறிகள் என்ற சொல்லே பெரிதும் வழக்கில் இருந்து வருகின்றன.

சமூகத்தில் அமைதி நிலவவேண்டும் எனில் தனிமனிதர்கள் தனக்கென்று கடமை, கட்டுப்பாடு, ஒழுக்கம் என பல்வேறான நெறிமுறைகளை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். இந்தக் கட்டுப்பாடுகளின் தொகுப்புகளைத் தான் நாம் வாழ்வியல் நெறிகள் என்று கூறுகிறோம். இந்த வாழ்வியல் நெறிகளை இரண்டாகப் பகுப்பர். அவை தனிமனித வாழ்வியல் நெறிகள் (Personal Ethics) மற்றும் சமூக வாழ்வியல் நெறிகள் (Social Ethics). சமூக நெறிகளை அறம், பொருள், இன்பம் என மூன்றாகப் பகுத்துக் கூறுவது பண்டையத் தமிழரின் மரபாகும். இதனைத் தொல்காப்பியர் என்பார்

**“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு”**[1]

என்று குறிப்பிடுகிறார். சங்க இலக்கியமும் அவற்றையேக் குறிப்பிடுகின்றன. இன்பத்தை வாழ்வில் அடைவதற்குப் பொருள் தேவை. அவற்றை அறவழியில் நின்று தேட வேண்டும் என்பது பண்டையத் தமிழரின் வாழ்வியல் நெறிகளாகும். அறம், பொருள், இன்பம் என்ற மூன்றுடன் வீடு என்ற ஒன்றையும் சேர்த்து உறுதிப் பொருள்கள் நான்காக மாறியது இக்காலக்கட்டத்தில் தான். மனிதன் தன் பிறப்பின் பயனாக வீடுபேற்றினை அடைவதை முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தான் என்பதறியப்படுகிறது.

**கல்வியைப் போற்றுதல்**

வேறு வேறு வகையாக உள்ள நான்கு குல மக்களுக்குள்ளும். கீழ்ச் சாதிக்காரன் ஒருவன் கல்வி அறிவு உடையவனாய் இருந்தால், மேல் சாதியான் அவனிடம் சென்று பணிந்து கற்க வேண்டிய கட்டாயம் ஏற்படும். எனவே இத்தகைய சிறப்புடைய கல்வியை கற்றுத் தெளிதல் வேண்டும் என புறம் (183:8-10) விளக்குகின்றது. சமுதாயத்தின் கடைப் பிரிவில் பிறந்தவர் ஆயினும் நன்கு கற்றறிந்தவரை மேன்மையான இடத்தில் வைத்துப் போற்றுவர், என்பதை

***“கடைநிலத் தோராயினுங் கற்றறிந் தோரைத்***
***தலைநிலத்து வைக்கப் படும”***[2]

என்று குறள் உரைக்கின்றது. எனவே ஒருவரது தகுதியை அவர் பிறந்த இடம் தீர்மானிக்காது என்பது உணர்த்தப்படுகின்றது. கல்வி அறிவின் உயர்ச்சி மேன்மைத்தரும் என உணர்த்தப்படுகிறது.

ஒரே குடியில் பிறந்திருந்தாலும் மூத்தபிள்ளை என்று எண்ணி வருக என்று அழைக்காது, அக் குடும்பத்தில் கற்றறிந்த பிள்ளையையே அரசனும் விரும்புவான் என்பதை,

**"படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்**
**உடைப்பெரும் செல்வர் ஆயினும் இடைப்படக்**
**குறுகுறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டும் தொட்டும் கல்வியும் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்த்தும்"[3].**

இப்பாடல் பெருஞ்செல்வம் பெற்றிருப்பினும் வாழ்வின் பயன் என்பது குழந்தைபேறு என்பதாகும் என்றுணர்த்துவது அங்ஙனம் ஈன்ற பிள்ளைகளில் கற்றறிந்தவர் பெருமையுடையவராய் கருதப்படுவர் என்பர். இதனையே,

**"திரிஅழல் காணின் தொழுப விறகின்**
**எரிஅழல் காணின் இகழ்ப ஒரு குடியில்**
**கல்லாது மூத்தானைக் கைவிட்டு கற்றான்**
**இளமை பாராட்டும் உலகு"[4]**

என்ற பாடலடிகளால் படிக்காத மூத்தவனைப் பாராட்டாது படித்த இளையவனைப் பாராட்டுவர் என்று நான்மணிக்கடிகை 63ஆம் பாடல் வழியும் அறியமுடிகிறது.

சங்ககாலத் தமிழர்கள் வாழ்க்கையில் காதலும் வீரமும் கல்வியும் செல்வமும் சிறந்தோங்கி செழுமையுற்று விளங்கினர். கல்வியின் பெருமையை நன்கு உணர்ந்திருந்தனர். எனவேதான் கல்வியின் சிறப்பை பலவாறு போற்றுகின்றனர்.

***"அன்னாய்! இவனோர் இளமாணாக்கன்***
***தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ?"[5]***

என்ற பாடலடியில் கல்வி பயின்றால் மட்டுமே வறுமையிலிருந்து விடுபட்டுத் தன் சொல்லாற்றலால் செல்வமும் புகழும் பெறமுடியும் என தலைவி தோழிக்கு உரைக்கிறாள்.

**ஈகை**

ஈகை என்பது எவ்வித எதிர்ப்பார்ப்புமின்றித் துன்புற்ற ஒருவர்க்கு அளித்தலாகும். பொருள் ஈட்டினால் மட்டுமே போதாது அதை ஈதலும் வேண்டும் அதனால்தான் புறநானூறு,

**"செல்வத்துப் பயனே ஈதல்"**[6] என்கிறது.

**"ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்"**[7]

எனக் கலித்தொகை சுட்டுகிறது. தோண்டத் தோண்ட நீர் ஊறுவது போலக் கொடுக்கக் கொடுக்கத்தான் செல்வம் பெருகும் என்ற கருத்தும் நிலவியது. சான்றோரின் நெறியிலே வாழ்ந்தவன் ஆய் அண்டிரன் புறநானூற்றிலே அவனைப் பற்றி ஒரு செய்தி,

**"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்**
**அறவிலை வாணிக னாயலன் பிறகும்**
**சான்றோர் சென்ற நெறியென**
**ஆங்குப் பட்டன் றவன் கைவண்மையே"**[8]

அடுத்தவர்க்கு கொடுத்தல் என்பதை வாழ்வில் தலையாயக் கடமையாக மதித்துள்ளனர் அக்கால மக்கள். கபிலர் பாரியின் ஈகையைப் பின்வருமாறு சுட்டுவர்.

**"முந்நூறு ஊறும் பாசிலர் பெற்றனர்**
**யாமும் பாரியும் உளமே**
**குன்றும் உண்டுநீர் பாடினீர் செலினே"**[9]

தமக்கென எதையும் சேர்த்து வைக்காது ஈகை செய்து இன்புற்று மகிழ்ந்தனர் என்று மன்னர் தம் கொடைப் பண்பினைக் குறிப்பிடுகின்றது. இதைத்தான் பின்னால் வந்த ஒரு திரைப்படக் கவிஞன்

**"தர்மம் தலைகாக்கும் தக்க சமயத்தில் உயிர்காக்கும்**
**அள்ளிக் கொடுத்து வாழ்பவர் நெஞ்சம்**
**ஆனந்தப் பூந்தோப்பு"**[10]

என்றான். எனவே ஈகை வாழ்வில் நிகழ்வில் முக்கியத்தவம் பெற்றது என்பதைத் தமிழ் இலக்கியங்கள் எடுத்து இயம்புகின்றன.

**இல்லற மாண்பின் இனிமைப் போற்றல்**

சங்க கால மக்கள் இல்லறத்தை நல்லறமாகப் போற்றிப் பேணி வளர்த்தமையை பல்வேறு பாடல்கள் மூலம் உணரமுடிகிறது. புதிதாகத் திருமணம் புரிந்த தலைவனும்,தலைவியும் இல்லற வாழ்வை இனிதே துவக்குகிறார்கள். தலைவி செல்வர் வீட்டில் பிறந்து செழிப்புடன் வளர்ந்தவள். சமைத்தறியாதவள் இருப்பினும் தன் கையால் தலைவனுக்கு சமைத்துத் தர ஆவல் கொண்டாள். அதன் பொருட்டு தயிர்க் குழம்பைத் தயார் செய்கிறாள்.

தோய்ந்த கட்டித் தயிரைக் கையாற் பிசைந்து கையைக் கழுவாமல் அப்படியே தன் தூய ஆடையில் துடைத்துக் கொண்டாள். குழம்பைத் தாளிக்கும் போது ஏற்பட்ட புகை அவளது மையுண்ட கண்களை கலங்கச் செய்தது. இவ்வாறு அவள் அன்புடன் செய்த குழம்பைக் கணவனுக்கு இட்டாள். அவன் அது மிகவும் இனிதாக உள்ளதாகப் பாராட்டி மகிழ்ந்து உண்கிறான் அவள் முகம் மகிழ்ச்சியால் மலர்கிறது. இதனை,

***"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்***
***கழுவுறு கலிங்கம் கழாஅது உடீ,***
***குவளை உன்கண் குய்ப்புகை கமழக்***
***தான் துழந்து அட்ட தீம்புளிப் பாகர்***
***இனிதெனக் கணவன் உண்டலின்***
***நுண்ணிதன் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"***[11]

இந்நிகழ்வின் மூலம் இல்லாள் செய்த உணவின் தன்மை எத்தகையதாயினும் அவள் அன்புடன் செய்ததால் அதனை இனிது என்று பாராட்டி மகிழும் தலைவனின் மனப்பாங்கையும்

நற்பண்பையும் உணரமுடிகிறது. உணர்வின்வழி கணவனின் உள்ளம் பிடிக்க விழையும் தலைவியின் அன்பின் இனிமை உணரமுடிகிறது.

கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் எவ்வாறு அன்பு பூண்டு ஒழுக வேண்டும் என்ற நற்கருத்தை வலியுறுத்துவதாக இப்பாடல் அமைகிறது. மேலும் ஒருவர் மீது ஒருவர் கொண்டிருக்கும் அன்பு மேலீடு, அதனால் பெறும் இன்பம் வாழ்வின் சிறப்பாக இயங்கியமையும், கருதியமையும் பாடல்வழி உணரமுடிகிறது.

**பொருள்வழிப் பிரிவைப் போற்றும் தலைவி**

நம் முன்னோர்கள் சேர்த்து வைத்த செல்வத்தைக் கொண்டு செலவு செய்பவர்களைச் சாடுகிறது. தம் முன்னோர்களின் செல்வத்தை வைத்திருப்பவர்கள் செல்வந்தர்கள் என்று கருதமாட்டார்கள் தாமாக ஈட்டித் தொகுத்த செல்வத்தை பெற்றில்லாதவரது வாழ்க்கையானது வளமுடையதாக இருப்பினும் பிறரிடம் பொருள் வேண்டி இரத்தலைக்காட்டினும் இழிவுடையதாகவே என்றும் கருதப்படும் தோழிக்குத் தலைவி உரைப்பதாக கீழ்காணும் பாடல் அமைகிறது.

***"உள்ளது சிதைப்போர் ஊர் எனப் படாஅர்;***
***இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு எனச்***
***சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்***
***சென்றனர் வாழி"***[12]

எனவே, ஒவ்வொரு தலை மகனும் தானே முயன்று செல்வம் ஈட்டி வாழ்தல் மிகவும் அவசியமான பண்பாக குறுந்தொகைச் சுட்டுகிறது. எக்காலத்தும் பொருந்தும் கூற்றாக அமைகிறது. பொருள்தேடிச் செல்லும் தலைவன் அயல்நாடுகளுக்கு செல்வதும் பிரிவினைத்

தாங்கி இல்லற மாண்பினைப் போற்றி அன்புள்ளத்தோடு போற்றும் பாங்கு காணமுடிகிறது.

**வினையே ஆண்களுக்கு அணிகலன்:**

வினையின்கண் தலைவியைப் பிரிந்து செல்ல தலைவன் முற்படுகிறான். இதனை அறிந்த தலைவி வருந்தி உடல் மெலிவுற்றாள். அவளைத் தேற்றும் நோக்கில் தோழி

***"வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்***
***மனை உறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என***
***நமக்கு உரைத்தோரும் தாமே***
***அழா அல் - தோழி! – அழுங்குபர் செலவே"***[13]

பொருள் தேடிச் செல்லுதல் என்பது ஆண்களுக்கு உயிரைப்போன்றது. அவர்தம் இல்லக் கிழத்தியாகப் போகும் நீயும் அவருக்கு உயிர்போன்றவள். எனவே நீ வருத்தத்துடன் வாடி நின்றால் அவர் வினையின்கண் செல்லும் எண்ணத்தைக் கைவிட்டு விடுவார். ஆதனால் நீ வருந்தி அழுவதைக் கை விடுவாயாக. அவர் வினையை வெற்றியுடன் முடித்துத் திரும்புவான் என்று கூறுகிறாள். வினையைக் கருதி வெளியே செல்லும் தலைவன் சிறப்பாக வினையாற்ற பல்வேறு வகையிலும் துணைபுரியும் இல்லத் தலைவிகள் இன்றும் இருந்துவருகிறார்கள்.

இதன் மூலம் பொருள் ஈட்டும் பொருட்டுத் தலைவன் தலைவியைப் பிரிந்து நெடுந்தொலைவு சென்று திரும்புவதை சங்ககால மக்கள் போற்றி வந்தமையை அறியமுடிகிறது.

**அன்பின் மகத்துவம்**

தலைவன் மீது தலைவி கொண்ட அன்பை அளவிட முடியாது என்பதை பின்வரும் பாடலால் உணரலாம். நிலத்தினும் பெரிதே: வானினும் உயர்ந்தன்று நீரினும் ஆர் அளவின்றே – சாரல் கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருங்தேன் இழைக்கும் நாடனொரு நட்பே (குறு - 3) மேலும் தலைவனைப் பிரிந்திருக்க நேர்ந்த தலைவி தன் ஆற்றாமையால் தோழியிடம் பின்வருமாறு கூறுகிறாள்.

*"பூ இடைப்படினும் யாண்டு கழிந்தன்ன*
*நீர் உரை மகன்றிற் புணர்ச்சி போலப்*
*பிரிவு அரிது ஆகிய தண்டாக் காமமொடு*
*…………………………………………..*
*. . . . . . . புன்மை நாம் உயிற்கே"*[14]

அதாவது தமக்கு இடையே ஒரு பூவினால் தடைபடும் நேரம் ஒரு நொடியானாலும் ஒர் ஆண்டு கழிந்தது போல துன்பத்தை உண்டாக்குவதாக உணர்ந்து வாழும் மகன்றிற் பறவையின் நிலைபோலத் தான் தலைவனைப் பிரிந்து வாடுவதாக கூறுகிறாள் மேலும் முன்பு இருவரும் ஓருயிராய் இருந்த நாங்கள் பிரிந்த போது உடல் வேறு உயிர்வேறாக பிரிந்து இருப்பதாக குறிப்பிடுகிறாள். இப்பாடலில் தலைவி தலைவன் மீது கொண்ட அன்பிற்கு மகன்றிற் பறவையை உவமையாகச் சுட்டுவது சிறப்பாகும். மேலும் ஒருவனுக்கு ஒருத்தி என எக்காலத்துக்கும் போற்ற வேண்டிய உண்மையான உள்ள அன்பை உணர்த்தும் பாடல் தலைவன் தலைவி வழி இல்லறம் போற்றப்பட்டு சமுதாய மேம்பாடு அடைய இயலும்.

**ஒழுக்கத்தின் மீது நம்பிக்கை**

ஒழுக்கம் மிகுந்த வாழ்வே உலகில் போற்றப்படும். ஒழுக்கத்துடன் வாழவேண்டும் அதுவே உண்மையான சிறந்த வாழ்க்கையாகும். ஒழுக்கத்திலிருந்து வழுவி வாழும் வாழ்வு இழிவானது. அஃது ஒருவருக்கு அழியாப் பழியையும் இழிவையும் தரும். ஒழுக்கத்துடன் வாழ்ந்தால் புகழ் பெறலாம் என்று பண்டைய கால மக்கள் நம்பினர். நம்பியதோடு மட்டுமல்லாது அவ்வண்ணமே வாழ்ந்தனர். இத்தகைய பண்பாடு சார்ந்த நம்பிக்கையானது. சங்கப் பாடலின் வழி உணர்த்தப்படுகிறது.

***"முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை***
***நோவருங் குயை கலங்கெடிற் புணரும்***
***சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்***
***மாசறக் கழீஇய வயங்குபுகழ் நிறுத்தல்***
***ஆசறுகாட்சி ஐயர்க்கும் அந்நிலை***
***எளியவென்னார் தொன்மருங்கு அறிஞர்"[15]***

என, கபிலரால் விளக்கப்படுகிறது.

முத்து, இரத்தினம், பொன் இவைகளால் இழைக்கப்பட்ட அணிகலன் எவ்வளவு கெட்டுப் போனாலும் மீண்டும் அதனை சீர் செய்து கொள்ளலாம். ஆனால் நல்ல ஒழுக்கத் தன்மையும் பெருமையும் நல்ஒழுக்கமும் மாசடைந்துவிட்டால் அந்த மாசினைத் திருத்தி மீண்டும் புகழ்பெற இயலாது. குற்றமற்ற அறிவுள்ள பெரியோர்களாலும் இந்நிலையை அடைய முடியாது என இப்பாடல் வரிகள் ஒழுக்கத்தின் உயர்வை சிறந்த எடுத்துக்காட்டுடன் தெளிவாகக் குறிப்பிடுகிறது. வாழ்விற்குரிய ஒழுக்க நெறிகளைச் சுட்டிக்காட்டும் பாடல்கள் என்றும் வழிகாட்டிகளாக விளங்குவன.

குறிஞ்சிப்பாட்டு அக்கால மக்களின் உன்னத வாழ்க்கையை விளக்கும் அரிய ஓவியம் போன்று அமைந்துள்ளது. ஒழுக்கம் உயிர் போன்றது என்ற அரிய வாழ்வியல் நம்பிக்கைகளும், கபிலரால் காட்சிப்படுத்தப்படுவது இன்புறுதற்குரியதாகும். மேலும் சங்க கால மக்கள் வாழ்வியல் சார்ந்த நம்பிக்கைகளில் ஆணித்தரமாக இருந்தது ஒழுக்கம் மிகுந்த வாழ்வினை ஓம்பினர் என நிறுவுகிறது. மாசுபடாத ஒழுக்கத்தினைப் பேணிக்காத்தனர்.

**தனிமனிதப் பண்பாடு**

பண்பாடு என்பது பண்பட்ட எண்ணமும் சொல்லும் செயலும் ஒருங்கிணைந்து திருந்திய நிலையாகும். எல்லோருடைய இயல்புகளும் அறிந்து ஒத்த நன்னெறியில் ஒழுகுபவர் பண்பாடு உடையவர் ஆகின்றார். சங்ககாலத்தில் தனிமனித வாழ்க்கையில் நட்பும், பகையும், விருப்பும், வெறுப்பும், அன்பும், அன்பின்மையும் ஆகிய பல்வேறு உணர்ச்சிகளும் இடம்பெற்றன. ஆனால் சங்கப் புலவர்கள் சமுதாயப் பொதுமைக்காகவும், பண்பாட்டைக் காப்பாற்றுவதற்காகவும் பிறர் பழிதூற்றாமல் இருப்பதற்காகவும் தனி மனிதனின் உயர்ந்த பண்பினையே தேர்ந்தெடுத்துக் கூறியுள்ளனர். இதனையே,

***"நல்லது செய்தல் ஆற்றீராயினும்***
***அல்லது செய்தல் ஓம்புமின்......"*** [16]

என்று குறிப்பிட அறியலாம். நல்வினை செய்யவில்லை என்றாலும் தீவினையைச் செய்யாதீர்கள் என்று தனிமனித பண்பாட்டை குறிப்பிடுவதனை அறியமுடிகிறது. தனிமனிதப் பண்பாடு சிறப்பால் சமுதாயம் சிறக்கும், நாடு மேன்மையுறும், உலகு பெருமையுறும் என்பதை உணர்ந்து செயல்பட்டனர் பண்டைய தமிழ் மக்கள் என்பதை உணரமுடிகிறது.

**உயர்ந்தோங்கிய விருந்தோம்பல்**

பண்டைய தமிழர் அறத்தோடு பொருந்திய வாழ்வினை மேற்கொண்டனர். கணவனும், மனைவியும் இணைந்து இல்லத்தில் இருந்து அறங்கள் புரிவதே இல்லறம் ஆகும். இல்லறத்தில் இருவரும் இணைந்து ஆற்றவேண்டிய அறம் விரும்தோம்பல் ஆகும்.தம்முடைய சுற்றத்தார்களுடன் விருந்துண்டு எஞ்சிய உணவினைப் பெருந்தகுதிப்பாடு உடைய தலைவன் நீ இடுவதால் யான் உண்ணுதல் உயர்ந்தது என்ற கருத்தினை.

***"விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை***

***நின்னோ டுண்டலும் புரைவ தென்றாங்கு"***[17]

என்ற குறிஞ்சிப்பாட்டு அடிகள் விருந்து போற்றி உண்டமை மகிழ்வினைத் தரும் என்பதை உணர்த்தப்பட்டது.

விருந்தாக வந்தவர்க்கு உணவளித்து எஞ்சியதை உண்டு வாழும் பண்பாளன் விளைநிலத்தில் விதையை விதைக்க வேண்டுமா? என்ற கருத்தை,

***"வித்தும் இடல் வேண்டும கொல்லோ விருந்தோம்பி***

***மிச்சில் மிசைவான் புலம்"***[18]

என்று திருக்குறள் முன்வைக்கிறது.

***"ஆற்றுதல் என்பதொன றலந்தவர்க் குதவுதல்"***[19]

*எனக் கலித்தொகை அடியும்,*

***"வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை"***[20]

என்ற அடிகளும் வறியோர்க்கும், ஏழைகளுக்கும் வழங்கும் வள்ளன்மையே நல்லோரின் குணங்களாகக் கூறுகின்றன.

**தமிழரின் காதல் பண்பாடு போற்றல்**

காதலில் பண்பாடு போற்றியவர் பண்டைய தமிழர். தமிழருக்குக் காதலும் வீரமும் இரு கண்களாக விளங்கின. சங்க காலத்தமிழர் 'களவு' வாழ்க்கையையும் 'கற்பு' வாழ்க்கையையும்

மேற்கொண்டொழுகினர். இதில் தாங்கள் மேற் கொண்ட களவு வாழ்க்கையிலும் நமது பண்பாட்டினைப் பதிவு செய்துள்ளனர். களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை என வகுத்து உயர்ந்த காதல் பண்பினைப் போற்றியமையைச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன.

தலைவன் மீது காதல் கொண்ட தலைவி தன் தலைவனைப் பற்றியும் அவனது அன்பைப் பற்றியும் அதன் அளவு எத்தகையது என்பது பற்றியும் குறிப்பிடும் இடங்கள் இன்னும் நாம் கண்டு வியப்புறும் படி அமைந்துள்ளன. தலைமகள் தோழியிடம் தலைவனின் அன்புடைமையை வற்புறுத்தும் சூழலில் அக்காதல் நிலத்தைவிடப் பரந்ததாக வானை விட உயர்ந்ததாக நீரை விடஆழமானதாகத் திகழ்கின்றதெனக் கூறித் தன் அன்பின் அளவை வெளிப்படுத்துகிறாள்.

***"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று***
***நீரினும் ஆரள வின்றே சாரல்***
***கருங்கோற் குறிஞ்சிப் புக்கொண்டு***
***பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"***[21]

இச்சங்கப்பாடலால் அறியலாகின்றது.

நீண்ட நாள் களவுமேற் கொள்ளுதல் ஆகாது விரைவாக மணமுடித்துக் கொள்ளுதல் நல்லது என்று இடித்துரைக்கும் தோழியின் கூற்றால் ஊரில் அலர் ஏற்படும் என்று கருதும் தோழியின் மன உணர்வும் தமிழர்களின் பண்பட்ட வாழ்வும் புலனாகின்றது. இதனை

***"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்***

***...............................................***

*சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாகங்கியவள்*

*உயிர்த்தவச் சிறிது காமமோ பெரிது”*[22]

என்று மலைச் சாரலில் சிறிய கிளையில் பெரிய பலாப்பழம் தொங்குவதுபோல் தலைவியின் உயிர் மிகச் சிறியது. இவள் கொண்ட காதலோ பெரியது என்று கூறி வரைவு மேற்கொள்ளாமல் களவொழுக்கத்திலே வாழ்தல் உயிர்வாழ்க்கைக்குத் துன்பமானது என்பதனை உணர்த்தி விரைவில் தலைவியை மணம்செய்து கொள்ளுமாறு தலைவனுக்கு அறிவுறுத்துகிறாள். இதன் வழி களவு வாழ்க்கையைக் கற்பு வாழ்வாக மாற்றிக் கொள்ளும் சங்க கால மக்களின் பண்பினை அறியமுடிகிறது.

**போர் புரிதலில் - நாகரிகமும் பண்பாடும்**

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் போருக்கு முக்கியத்துவம் கொடுத்தனர். ஆனால் போரிடுவதற்குத் தனிப்பட்ட அறம் மேற்கொண்டனர். திடீரென்று போர் மேற் கொண்டு பகை மன்னருக்குள் நெருக்கடியை ஏற்படுத்தாமல் போரில் சில விதி முறைகளையும் அறப்பண்பையும் பின்பற்றி வாழ்தனர். போரிடும்பொழுது முன்னரே அறிவித்தனர் யார் யாரெல்லாம் பாதுகாப்பான இடம் செல்ல வேண்டும் என்பது முரசறைந்து அறிவிக்கப்பட்டதைத் தமிழரின் பண்பட்ட நாகரீகத்தினைப் புறநானூறு காட்டுகிறது. இதனை,

*“ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்*

*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*

*தென்புலம் வாழ்னர்க்கு அருங்கடன் இறுக்கும்*

*பொன்போல் புதல்வர் பெறாய தீரும்*

*எம் அம்பு கடிவிடதும் நும்அரண் சேர்மின்”*[23]

இதில் பசு, அந்தணர், பெண்கள், பிணியுடையோர், பிள்ளைப்பேறு இல்லாதவர்கள் ஆகியவர்கள் பாதுகாப்பான இடத்தை அடைய அறிவுறுத்தப்பட்டனர். போர் புரிதலிலும் வாழ்வியலைப் போற்றும் சிறந்த அறநெறியும் இதன் மூலம் தமிழர்களின் பண்பாட்டின் உயர்ந்த நிலையும் விளங்குகின்றது.

**காலமறிந்து போர் புரியும் பண்பு**

மன்னர்கள் தாங்கள் நினைத்தபோதெல்லாம் போர்புரிதல் மரபன்று என்று கருதினர் எனவே கார், கூதிர், முன்பனி, பின்பனி, வேனில், இளவேனில் என ஆறுவகையான பருவங்களைப் பகுத்துக்கொண்டு வாழ்ந்தனர் இதில் வேனிற்பருவமும் கூதிர் பருவமும் போர்க்குறிய பருவங்களாகக் கருதினர். மன்னர்கள் பாசறை அமைத்துப் போர் புரிந்தனர். இதனை,

***"கூதிர் வேனில் என்றிரு பாசறைக்***
***காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்"*** [24]

என்ற தொல்காப்பிய நூற்பா வழி அறியலாம். இச்சூழலை நெடுநல் வாடையில் மயக்கத்தைத் தருகின்ற கூதிர் காலத்தில் பாசறை அமைத்துத் தங்கியிருந்த பாண்டியநெடுஞ்செழியன் போர் செயல்களைக் குறித்தும், வேனிற் பாசறை இயல்பினைக் குறித்தும் எடுத்துரைக்கிறது. போரின் விளைவாக ஆட்சிக் குழப்பமோ பஞ்சமோ மக்கள் மேற்கொள்ளும் தொழிலுக்கு இடையுறோ உண்டாகக்கூடாது என்பதில் கவனமாக இருந்தனர்.

எனவே தான் உழவுத்தொழில் செய்வோர் அறுவடையை முடித்து ஓய்வாக இருக்கும் கூதிர்ப் பருவம் முதல் வேனிற்காலம் வரையுள்ள இடைக்காலத்தைப் போர் புரிவதற்கு ஏற்ற காலமாகத் தேர்ந்தெடுத்தனர். இதன் வழி சங்க கால மக்கள்வீரத்தை

வெளிப்படுத்தும் பொழுதும் பண்பாட்டையும் அறத்தையும் போற்றி வாழ்ந்தனர் என்பதனை அறியலாகின்றது.

**சங்க கால மகளிரின் அரசியலறிவும் பண்பாடும்**

சங்க காலத்தில் ஆண்கள் பெண்கள் என்ற ஏற்றத்தாழ்வு அற்ற மனநிலையுடன் வாழ்ந்தனர். உழைப்பிற்கும் ஒழுக்கத்திற்கும் முக்கியத்துவம் தரப்பட்ட சங்க காலத்தில் பெண்கள் உரிமையுடன் வாழ்ந்தனர். பெண்கள் கல்வியிலும் புலமையிலும் சிறந்து விளங்கினர். அரசர்களுக்கே அறிவுரை கூறும் பண்பட்டவர்களாகவும் திறமையுடையவர்களாகவும் விளங்கினர். சங்க காலத்தில் வாழ்ந்த புலவர் பெருமக்களுள் தலைசிறந்தவர் ஔவையார். அவர் அதியமானிடம் கொண்ட பற்றே அவரைத் தொண்டைமானிடம் தூதுவராகச் செல்லத் தூண்டியது. போரை தடுத்து நிறுத்த வேண்டும் என்ற அவரது நல்லபண்பே சந்து செய்வித்தது என்ற உண்மையை அவரது பாடலில்.

***"இவ்வே பீலி யணிந்து மாலை சூட்டிக்***
***கண்டிர னோன்காழ் திருத்தி நெய் யணிந்து***
***கடியுரை பியனக ஒவ்வே யவ்வே***
***பகைவர் குத்திக் கோடுநுதி சிதைந்து***
***கொற்றுரைக் குற்றில் மாதோ வென்றும்***
***உண்டாயிற் பதங்கொடுத்துத்***
***தில்லாயி னுடனுண்ணும்***
***இல்லோ ரொக்கற் றலைவன்***
***அண்ணலெங் கோமான் வைநுதி வேலே"*** [25]

அறியலாகின்றது. ஔவையார் தொண்டைமானிடம் சென்று போரைத் தடுத்து நிறுத்தியது, அரசியல் தூது உலக இலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

அறம் போற்றிய அரசர்கள் அக்காலத்தில் வாழ்ந்தனர் என்பதும் தொண்டைமான் போரை கைவிட்டு அதியனின் வீரத்தை உணர்ந்தான் எனில் பகைவன் என்னும் திறமையும் வீரமும் மிக்கவன் என்பதனை ஏற்றுக்கொள்ளும் தமிழரின் தனிபட்ட பண்பாட்டு உணர்வின் வெளிப்பாட்டை சுட்டிக்காட்டிய பண்பட்ட பெண்கள் வாழ்ந்த பெருமைக்குரியது நம் நாடு என்பது புலனாகிறது.

**புலவர் மன்னனுக்கும் மன்னர் புலவருக்கும் அறிவுரைக்கும் பண்புநெறி**

அன்றைய சான்றோர்கள் மன்னருக்கே அறிவுரை சொல்லும் நிலையில் இருந்ததை, அகன்று விரிந்த நிலத்தில் பரவி வாழும் மக்களுக்கு உயிராக அமைவது எது? நெல் முதலிய உணவுப் பொருள்கள் அல்ல. உயிரும், பயிரும் தோன்றுவதற்கும் அவை வளர்ந்து வாழ்வதற்கும் அடிப்படையாக அமையும் நீரும் அல்ல. மண்ணை ஆளும் மன்னன்தான் மக்களுக்கு உயிர் ஆவான். இதை அறிவது, வேலால் வெல்லும் படையை உடைய வேந்தனின் கடமை ஆகும்" என்று மோசிகீரனார் மன்னனுக்கு அவன் கடமையை உணர்த்துகிறார். ஒரு சிறிய பாடலில் எவ்வளவு பெரிய உண்மையை விளக்குகிறார்! அந்தப் பாடல் இதுதான் :

***நெல்லும் உயிர்அன்றே நீரும் உயிர்அன்றே***
***மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்***
***அதனால் யான்உயிர் என்பது அறிகை***
***வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"***[26]

உயிர்தானே உடம்பை இயக்குகிறது உயிர் நன்றாக இயங்கினால்தானே உடலும் நன்றாக இயங்கும் உடம்புக்கு வரும் நோயை உயிர் நுகர்ந்து கொண்டு உடம்பைக் காக்கிறதே, அது போல மன்னனுக்கு, மக்களைக் காப்பது கடமை. இவை போல,

இன்னும் என்ன என்னப் பொருள் நலம் தருவதாக இச்சிறு பாடல் உணர்த்துவதாகிறது. மன்னன் செங்கோல் முறை தவறாமல் ஆட்சி செய்தால்தான் மழை தவறாமல் பெய்யும். நீரும் நெல்லும் மழை இல்லாமல் வரும் எனவே முறையோடு ஆளும் மன்னன்தான் இவற்றைத் தரும் உயிரின் உயிர் ஆவான் என்னும் கருத்தும் தோன்றுமாறு மன்னன் நிலை உயர உலகு போற்றுமாறு வாழ மன்னன் செய்யவேண்டியவற்றையும் வலியுறுத்துகிறது இப்பாடல்.

**வரி விதிக்க ஒரு விதி கூறல்**

தன் குடிமக்களிடம் இருந்து அளவுக்கு அதிகமாக வரிவாங்கினான் அறிவுடைநம்பி எனும் பாண்டிய மன்னன். அவனது செயல் அறிவுடைய செயலாய் இல்லை என்றிருந்த பிசிராந்தையார் என்ற புலவர், இந்த மன்னனால் வருந்திய மக்களின் துயரக்கண்ணீரைத் தமிழ்ப்பாடல் கொண்டு துடைத்தார். எப்படி? ஓர் அழகிய உவமையைக் கொண்டு அறிவுடை நம்பிக்கு அறிவு புகட்டிவிட்டார். "விளைந்த நெல்லை முறையாக அறுத்துக் கவளமாக உருட்டி யானைக்கு உணவாகத் தருவார்கள். அப்படித் தரும்போது ஒரு மிகச்சிறிய அளவு நிலத்தில் விளையும் நெல்லும் அந்த யானைக்குப் பலநாள் உணவு தருவதற்குப் போதுமானதாக அமையும். ஆனால் நெல் விளைந்த பெரும் பரப்பளவுள்ள வயல் ஆனாலும் அதில் யானையைப் புகுந்து மேய விட்டால் அழிவே விளையும். ஏனெனில் அதன் வாய்க்குள் செல்வதைவிடக் காலில் மிதிபட்டு அழியும் நெல்லை அதிகமாக இருக்கும். அளவுக்கு மிஞ்சி வரிவிதித்து உன் ஆட்களால் மக்களை வருத்தி நீ பொருள் பெறுவதும் இதைப்போன்ற செயல்தான்" என்று உணர்த்தினார். மக்களைத் துன்புறுத்திப் பதறப்பதற அவர்களிடம் இருந்து பொருளைப் பறிக்கும் மன்னன் தானும் அழிவான் அவன் நாடும் அழியும் என்பதை,

**யானை புக்க புலம் போலத் தானும் உண்ணான்**
**உலகமும் கெடுமே“[27]**

என்று பாடி எச்சரித்தார், மன்னனைத் திருத்தினார். அதாவது வரி என்ன பெயரில் மக்கள் பலவகை வரிகளைக் கட்டுவதும், பல்வகை புதுப்புது வரிகளை மக்கள் மீது சுமத்தும்போதுஅவற்றிற்கு எதிர்ப்புக் குரல்களும் இருந்திருக்கின்றன. எனவே மக்கள் நலம் போற்றப்பட வேண்டும் என்பதை உணர்த்திக் கொண்டுதான் இருக்கின்றன.

**நீர் நிலைத்தால் பெயர் நிலைக்கும்**

மிக்க இளவயதில் ஏழு மன்னர்களைக் களத்தில் வென்றவன் நெடுஞ்செழியன். இதனால் வந்த புகழால் போர் செய்வதில் அதிகமாக விருப்பம் கொண்டவனாக ஆகி, ஆட்சி செய்வதில் அவனுக்குக் கவனம் குறைந்து விடுமோ என்று அஞ்சினார் புலவர் குடபுலவியனார். ஓர் அருமை மிக்க பாடலால் அவனுக்கு அறிவுரை கூறினார். மிக நீண்ட பாடல். அறவியல், அறிவியல் இரண்டும் விளங்கும் இனிய கவிதை. அதில், நிலைகளைப் பெருக்கி விளைச்சலை மிகுதிப் படுத்துமாறு அவனுக்குப் பொருளாதார அறிவியலைப் போதிக்கின்றார். "பகைவரை வென்று அவரை விலங்கு (தளை) பூட்டிச் சிறை செய்வதைவிட, மழையால் பெருகும் நீரை ஏரிகளிலும் குளங்களிலும் சிறைப்படுத்துவதே (தேக்குவதே) ஒரு நாட்டிற்கு நலம் பயக்கும்” என்கிறார்.

***நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்***
***தட்டோர் அம்ம இவண்தட் டோரே***
***தள்ளா தோர்இவண் தள்ளா தோரே[28]***

என்ற அடிகள் நீரைத் தேக்கிகளைச் செய்தவர்களின் பெயர்தான் புகழ் வடிவில் உலகத்தோடு தளைக்கப்பட்டு நிலைக்கும்.

தளைக்காதவர் பெயர் நிலைக்காது என்கிறார். மன்னன் தன்னை நாட்டின் காவல்காரனாகவே கருதினான். இதனால் அரசன், வேந்தன் என்றெல்லாம் அழைக்கப்பட்ட மன்னனுக்குக் காவலன் என்ற பெயரும் தமிழில் உள்ளது. மன்னுதல் என்றால் தங்குதல், நிலைபெறுதல் என்று பொருள். தன் குடிமக்களின் நலனும், நம்பிக்கையும் அவனில்தான் தங்குகின்றன என்ற பொருளில்தான் அவன் மன்னன் எனப்பட்டான் என்றும் அறிந்துகொள்ளமுடிகிறது.

**வாழ்வியல் உண்மையை எடுத்துரைக்கும் தத்துவ நிலைகள்**

**நிலமும் நலமும் (மனிதன் நலம்வழி சிறக்கும் நிலம்)**

நிலம் காடாக இருக்கலாம், நாடாக இருக்கலாம்; பள்ளமாக இருக்கலாம் மேடாக இருக்கலாம். ஆண்கள் எங்கே நல்லவர்களாக இருக்கிறார்களோ அங்குதான் அந்த நிலமாகிய பெண்ணும் நல்லவளாக இருக்க முடியும்." ஔவையார் பாடிய அரிய உண்மை இது :

***எவ்வழி நல்லவர் ஆடவர்***
***அவ்வழி நல்லை வாழிய நிலனே***[29]

ஆண்களுக்கு ஒழுக்கத்தை வலியுறுத்தும் அழகிய கவிதை இது. ஆழ்ந்த உண்மைகள் பல உணர்த்துவதாக அமைகிறது. மனித பண்பு, செயல், ஒழுக்கச் சிறப்பு, சமுதாய நலம் சிறந்து நிலம் மேன்மையுறும் என்பது உணர்ந்தறியமுடிகிறது.

**இருவகை விதியின் நியதியும், இயற்கையும்**

"ஒரு வீட்டில் சாவுப் பறை ஒலிக்கிறது. அதே தெருவில் வேறு ஒரு வீட்டில் திருமண மேளம் முழங்குகிறது. காதலரைக் கூடிய மகளிர் பூ அணியை அணிகின்றனர். பிரிந்த மகளிரின் கண்கள் கண்ணீர்

மழை பொழிகின்றன. இப்படி முரண்பாடாகப் படைத்து விட்டான் பண்பு இல்லாத அந்த இறைவன். உலக இயற்கை கொடியது. இதன் இயல்பை உணர்ந்து மறுமை உலகத்தில் இன்பம் பெறுவதற்கு உரிய நன்மைகளைச் செய்து கொள்ளுங்கள்"

**இன்னாது அம்மஇவ் வுலகம்**
**இனிய காண்கஇதன் இயல்புஉணர்ந் தோரே“[30]**

பக்குடுக்கை நன்கணியார் என்பவர் கண்ட வாழ்வியல் பற்றிய தத்துவம் இது. இப்பாடல்வழி இயற்கை நியதியில் எங்ஙனம் வேண்டுமானாலும் நிகழலாம். இன்பம், துன்பம் இரண்டும் கலந்தது இயற்கையின் நியதி. வாழ்வின் பகுதி அதனை உணர்ந்து அறம் செய்ய அவசியம் என எடுத்துரைக்கிறது.

**பொன்னை விடச் சிறந்த மொழி**

மீன்முள் போல் முடி நரைத்துவிட்டது. தோல் சுருங்கித் திரைத்து விட்டது. கால தேவன் தன் கயிற்றில் கட்டி இழுத்துச் செல்லும் காலம் நெருங்கிவிட்டது. அப்போது, மறுமையில் என்ன ஆகுமோ? என்று வருந்துவீர்கள். முதியவர்களே, செல்வதற்கு நல்லவழி ஒன்று சொல்கிறேன், கேளுங்கள். நல்லதைச் செய்ய இயலவில்லை என்றாலும், நல்லது அல்லாததைச் (தீயதை) செய்யாமல் தவிர்த்துக் கொள்ளுங்கள். இதனால் புகழ் பெறலாம். மற்றவர்களை நல்ல வழியில் செலுத்தலாம்” என நரிவெரூஉத்தலையார் என்ற புலவர் சொன்ன பொன்மொழிகள் இவை.

***நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்***
***அல்லது செய்தல் ஓம்புமின்[31]***

*(ஓம்புமின் = கவனமாகத் தவிர்த்துக் கொள்ளுங்கள்)*

'நல்லது' என்பதற்கு எதிர்ப்பதமாகத் தீயது', 'கெட்டது' என்று கூறாமல் நல்லனஅல்லாதது என்பதைக் குறிப்பிட 'அல்லது' என்று கூறும் பண்பாட்டை பின்பற்றியுள்ளார் புலவர். அவர் 'தீயதை' நாவால் சொல்லவும் விரும்பவில்லை. அல்லது என்று உறுதியாகக் கூறி நல்லவனவற்றைச் செய்ய வலியுறுத்துவதை உணர்ந்தறியப்படுகிறது.

**துய்ப்போம் எனினே தப்புந பலவே**

செல்வ வளங்கள் அனைத்துக்கும் உரிமையாளராகச் சமுதாயத்தில் உச்சியில் இருப்பவர் யார்? பல நாடுகளை வென்று ஆட்சி செய்யும் மன்னர். மிகத் தாழ்ந்து அடிநிலையில் கிடப்பவர் யார்? நாகரிகத்தின் சுவடுபடாத மலைகளில் காடுகளில் அடுத்த வேளை உணவுக்காக விலங்குகளை வேட்டையாட இரவும் பகலும் வில் அம்புடன் குறிபார்த்துக் காத்திருக்கும் வேடர். சிந்தித்துப் பார்த்தால் இந்த இருவரும் அனுபவிப்பது என்ன? உண்பது, ஒரு வேளைக்கு வயிறு கொள்ளும் அளவுள்ள உணவு. உடுப்பது, மேல் ஆடை, கீழ் ஆடை என்ற இரண்டுதான். மற்ற தேவைகளும் ஒத்தவை தாம். எனவே, ஒருவர், செல்வத்தை மிகுதியாகப் பெற்றிருப்பதன் பயன் என்ன தெரியுமா? அடுத்தவர்க்கு ஈந்து அதனால் மகிழ்வது தான். 'இல்லை நானே துய்ப்பேன்' (அனுபவிப்பேன்) என்று முயன்றால் துய்க்க இயலாமல் பல இன்பங்களை இழக்க நேரும். இந்த மிகப்பெரும் வாழ்வியல் அறத்தை உரைத்தவர் கடைச் சங்கத்தின் தலைமைப் புலவர் **நக்கீரர்**.

*செல்வத்துப் பயனே ஈதல்*
*துய்ப்பேம் எனினே தப்புந பலவே"*[32]

எனப்பாடுவார் புலவர். பேராசைக் கொண்டு பலவகையிலும் பொருள் சம்பாதித்து பலருக்கும் பல துன்பங்களை இழைத்து, தேவையில்லாமல் சேர்த்து வைப்பவர் பல துன்பங்களை அனுபவிப்பதை இன்றும் சமுதாயத்தில் காணமுடிகிறது. எனவே யாவரும் உண்ணாநெறி உணர இப்பாடல் அறிவுறுத்துகிறது.

**தொழிலும் தொழில் அடிப்படையிலான பெயரும்**

சங்க இலக்கியப் பாடல்களில், 'புலையன்' என்ற சொல் 'பாணரையும்' குறிக்கிறது, பறை முழக்கியவரையும் குறிக்கிறது.

**"அழிதுளி தலைஇய பொழுதில் புலையன்**
**பேழ்வாய்த் தண்ணுமை இடம் தொட்டன்ன"[33]**

என்ற அடிகளால் அறியலாம். இதனைப் போன்றே, ஈமச்சடங்குகளைச் செய்யும் சமயக்குருமார்களையும் குறிக்கிறது.

**"வெள்ளில் நிறுத்த பின்றைக் கள்ளொடு**
**புல்லகத்து இட்ட சில்லவிழ் வல்சி**
**புலையன் ஏவப் புன்மேல் அமர்ந்துண்டு"[34]**

என்ற அடிகளால் அறியலாம். இதனைப் போன்றே, புலைத்தி' என்பவள் அழுக்குத் துணிகளை வெளுத்திருக்கிறாள். இதனை,

***"நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்து"[35]***

எனச் சங்க இலக்கியப் பாடல்களில் காணக் கிடைக்கிறது. அத்துடன், கூடை முடைந்திருக்கிறாள். இதனை,

***கையதை சேரிக் கிழவன் மகளேன் யான் மற்று இஃது ஓர்***
***மாதர்ப்பப் புலைத்தி விலையாகச் செய்ததது***
***போழின் புனைந்த வரிப்புட்டில்"[36]***

என்ற குறிப்புகளும் கிடைக்கின்றன. ‘இழிபிறப்பினோன்’ எனக் குறிப்பிடப்படுபவர் ஈமச்சடங்குகளைச் செய்துள்ளார்; ‘இழி பிறப்பாளன்’ என்பவர் பறை முழக்கியுள்ளார்; ‘இழிசினன்’ எனப்படுபவர் தண்ணுமை இசைப்பவராகவும், கட்டில் செய்பவராகவும் காட்டப்படுகிறார்.

ஆயினும் சாதியின் பெயரால் நிலவும் ஏற்றத்தாழ்வுகள் சமுதாயக் கொடுமைகள் தொடர்ந்துகொண்டிருக்கின்றன. இதற்கு மாற்றாக சங்க இலக்கிய பாடல்கள் பொதுமைப் பொருளை அளித்துள்ளன. அதாவது, பிறப்பால், தொழிலால் கட்டமைத்த வருணாசிரம முறையைத் தீர்மானிக்கிறது. பிறப்பால் அனைவரும் ஒன்றே என ஓங்கி ஒலிக்கிறது. வள்ளுவர் கூறிய பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான் என்னும் குறட்பா கருத்தினை சங்க கால புலவர்கள் பாடல்களில் உணரமுடிகிறது. தொழிற் சிறப்பால் பொருளுடன் சொல் வழங்கப்பட்ட உயர்வுத் தன்மை எட்டுத்தொகைப் பாடல்கள் வழி உணரமுடிகிறது. வாழ்வியல் நெறியும் வாழ்ந்தமையும் அறியமுடிகிறது.

**பொதுமைச் சிந்தனை**

உலகத்தில் உள்ள எல்லாப் பொருளும் அனைவருக்கும் பொதுவான ஒன்று. அனைவரும் உறவினர்களே. அனைவரும் நட்புடன் இருக்க வேண்டும், யாரும் பகைவர் கிடையாது. எல்லோரும் சகோதரத்துவம் சார்ந்து பழகுதல் வேண்டும். வேற்றுமை என்பதே இருத்தல் கூடாது. தற்காலத்தில் உள்ளது போன்ற எல்லைச் சண்டைகள், சாதி, மதம், இனப் பிரிவினை வாதம் முதலானவை தவிர்க்கப்பட வேண்டும் என்ற மையக் கருத்தினை புலவன்கணியன்

பூங்குன்றன் சங்க காலத்திலேயே கூறியுள்ளமைச் சிறப்புடையது. இதனை,

*"யாதும் ஊரே யாவரும் கேளிர்*

*தீதும் நன்றும் பிறர்தர வாரா*

*நோதலும் தணிதலும் அவற்றோரன்ன"*[37]

எந்த ஊராக இருந்தால் என்ன எல்லாமே நமது ஊர்தான் என்ற பொதுக்கருத்தினை இப்பாடல் உணர்த்துகிறது. அதே போன்று பூமியில் உள்ள அனைவரும் நம்மவர்தான், பகைவர் என்று யாரும் இல்லை. அனைத்து மனிதர்களும் நமது உறவினர்களே என கணியன் பூங்குன்றன் விளக்கியுள்ளார். அன்றைய காலத்தில் போர் புரிந்து தங்களது வீரத்தின் மூலம் நாட்டைக் காத்தனர். பிற நாட்டின் மீது போர் தொடுத்து பகை நாட்டின் பூமியை தனதாக்கினர். அங்கு உள்ள சமூகத்தினரை அடிமையாக வழி நடத்தினர். இதனை அறிந்த புலவர் உலகத்தில் எதுவும் சொந்தமில்லை அனைவரும் நமது உறவினர். ஆதலால் போர் செய்தலைக் கை விடுங்கள் என உரத்துக் கூறுகிறார். போரின் மூலம் மக்களுக்கு வரும் துன்பங்களை எண்ணியதால் 'யாவரும் கேளிர்' என்ற சொல்லினைப் பயன்படுத்துகிறார்.

அனைத்து நாடும், நகரமும் அங்கு குடியிருக்கும் மக்களும் நம் உறவினர்கள் என்று நினைத்தால் போர் வராது எனும் பொது உடமைக் கொள்கையினை சங்க காலத்திலேயே உரைத்துள்ளார். இங்ஙனம் நினைத்தால் எல்லை தாண்டி வருகின்ற மீனவன் சுடப்படுவதில் இருந்து மீட்கப்படுவான். பிற மாநிலத்தில் கல்வி கற்கச் செல்லும் தமிழக மாணவரின் நலன் காக்கப்படும். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் இக்கொள்கையின் வழி நடந்தால் மானுட தர்மம் காக்கப்படும். சமூக நீதி நிலை நாட்டப்படும். மனித மாண்புகள் சிதைந்து போகாத நிலை ஏற்படும். உலக நாடுகளில் நிகழும் பல நாடுகளுக்கிடையேயான போர்கள் தவிர்க்கப்படும்.

மனித குலம் யாவரும் ஒன்றே யாவரும் எனப் போற்றப்படுதல், நிகழ இப்பாடல் என்றும் அரிய கருத்தாக விளங்குவதாகும்.

**நல்லாட்சி நிலவ பொதுமை நெறிப்போற்றல்**

நாட்டை ஆளுகின்ற அரசன் மக்களைத் துன்புறுத்தாமல் சட்டங்கள் இயற்றி வரி வசூல் செய்ய வேண்டும். செங்கோல் வழுவாமல் ஆட்சி செய்தான் மன்னன் என்ற பெயர் சிறக்க வேண்டும். என்பதனை,

***"தென்கடல் வளாகம் பொதுமை இன்றி***
***வெண்குடை நிழற்றிய ஒருமையோர்க்கும்***
***நடுநாள் யாமத்துப் பகலும் துஞ்சான்***
***கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்,***
***உண்பது நாழி, உடுப்பது இரண்டே***
***பிறவும் இல்லாம் ஓரொக்குமே,"[38]***

அளவுடன் பொருள், சொத்துக்களினை வைத்துக் கொண்டு போதும் என்ற மனப்பான்மையுடன் இருக்க வேண்டும்.

பிறருக்கு உதவி செய்தல் வேண்டும். செல்வத்தின் பயன் என்பது கொடுத்தல் எனப்படும். யாராக இருந்தாலும் உணவும், உடையும் எல்லோருக்கும் ஒன்று தான் அது பொது உடமையானது. அளவுக்கு அதிகமான செல்வம் இருந்தாலும் அவை அனைத்தினையும் அனுபவிக்க முடியாது. ஆதலால் உதவி செய்து வாழ வேண்டும் என உணர்த்துகிறது இப்பாடல்.

பொது உடமைக் கொள்கையின் தத்துவம் என்பது எல்லோருக்கும் எல்லாம் கிடைக்க வேண்டும் என்பதுதான். மக்கள் அனைவரும் சமமானவர்கள் என்ற தத்துவார்த்த அடிப்படையினை வைத்துத் தான் பொது உடமைக் கொள்கை தொடங்கப்பட்டது. தற்காலத்தில் இவ்வாறு எண்ணாமல் ஆட்சியாளர்கள் தமக்கு மட்டுமே பொருள் ஈட்டிக் கொண்டு (பதவிக்கும் பொருளுக்குமே

ஆசைப்பட்டு அரசியலுக்கும் ஆட்சிக்கும் வருகின்றனர்) மக்களைத் துன்புறுத்துகின்றனர்.

**தன்மான உணர்வைப் போற்றுதல்**

மனிதன் யாராக இருந்தாலும் தமக்கு என்று தன்மானம் இருப்பது வழக்கமான ஒன்று தான். உளவியல் அடிப்படையில் மனிதனை அவனது வெளிப்பட்டுத் தோன்றும் உணர்வு நிலையில் இருந்து தாழ்த்துகின்ற பொழுது ஏற்படுவதாகும். தன்மானமானது தம்மை இழிவு படுத்துகின்ற போதோ, தமக்கான ஒன்றினை பிறர் எடுத்துக் கொள்ள முயற்சித்தாலோ, தமக்கு உரிய மரியாதை தராமல், தம்மைக் குறைத்து மதிப்பிடுகின்ற பொழுதோ இது மிகுதியுடன் வெளிப்படுவதாகும். இதனை,

*குழவி இறப்பினும், ஊன் தடி பிறப்பினும்,*
*ஆள் அன்று என்று வாளின் தப்பார்,*
*தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய*
*கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்*
*மதுகை இன்றி வயிற்றுத் தீத் தணியத்*
*தாம் இரந்து உண்ணும் அளவை,*
*ஈன்மரோ இவ் உலகத்தானே"*[39]

இப்பாடல் தன்மானச் சிறப்புடன் தமது வீரத்தின் மரபினையும் குறிப்பிடுகின்றது. கணைக்கால் இரும்பொறை சிறையில் இருந்த பொழுது அவன் வெளிப்படுத்திய தன்மான உரையாக இப்பாடல் அமைந்துள்ளது. குழவி இறந்து பிறந்தாலும் அதனைக் குழந்தை என்று எண்ணாமல் அதன் மார்பில் வாள் வைத்து காயம் ஏற்படுத்திய பின்பே புதைப்போம். அந்தக் காயமானது போரில் கலந்து கொண்டு ஏற்பட்ட விழுப்புண்ணாக நாங்கள் எண்ணிக் கொள்வோம். வீரம் என்பது சிறு குழந்தைக்கும் இருக்க வேண்டும் என்ற கருத்து இதன் மூலம் வெளிப்படுகிறது. இத்தகைய வீர மரபில் இருந்து வந்த என்னை நாய் போன்று சங்கிலியால் கட்டிப் போட்டு தண்ணீர்

குடிக்கச் சொல்கிறீர் இதனை நான் செய்தால் இந்த உலக்கத்தில் உள்ளோர் என்னை மதிப்பார்களா? என வினாத்தொடுத்து தன்னுடைய தன்மான உணர்வினை வெளிப்படுத்துகிறான்.

இத்தகைய வீரத்தினை உடைய மன்னன் தமது பகைவரிடம் இரந்து (கெஞ்சி) தண்ணீர் குடித்து விட்டானே என்று இந்த உலகத்தினர் இழிச்சொல் சொல்லி தம்மையும் தம் குடியின் வீரத்தினையும் குறைத்து மதிப்பிட்டு விடுவார்களே என்று எண்ணி மறுத்துவிட்டது தெரிகின்றது. தாம் அழிந்தாலும் தம் இனத்தின் வீரம், புகழ் நிலை நிற்க வேண்டும் என்ற கருத்தினை இப்பாடல் உணர்த்துகிறது.

சுதந்திரமாக இருக்கும் ஒருவரது உரிமைகளைப் பறித்துக் கொண்டால், சுய ஒழுக்கமாக விளங்கும் தன்மான உணர்வினைப் புண்படுத்தினால் வெளிப்படும் எண்ணமாகிய உணர்வினை இப்பாடலின் வழி தெளிவாக அறிய முடிகிறது. இதனைத் தான் பிற்காலத்தில் சுயமரியாதை என்றனர். சொற்கள் தான் வெவ்வேறானது பொருள் ஒன்றுதான். இப்பாடலில் மன்னனுக்கு உரிய மரியாதை தரப்படாமல் இருப்பதால் அவனது தன்மானச் சிந்தனை வெளிப்படுகிறது. தன்மான உணர்வினைத் தாங்கிய தனிநெறியுடன் வாழ்ந்தனர் என்பதறியப்படுகிறது.

அதியமான் நெடுமான் அஞ்சி என்ற மன்னன் புலவர்க்கு உரிய பரிசுகளைத் தராமல் காலத்தை நீட்டியபோது ஔவையார் பின்வரும் செய்யுளைப் பாடுகின்றார்.

*'அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென*
*வறுந்தலை உலகமும் அன்றே; அதனால்*
*காவினம் கலனே; சுருக்கினெம் கலப்பை*
*மரம்கொல் தச்சன் கைவல் சிறாஅர்*

*மழுவுடைக் காட்டகத்து அற்றே*

*எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே'*[40]

மரவேலைப்பாடு தெரிந்த தச்சன் ஒருவன் எந்தக் காட்டுக்குச் சென்றாலும் தன் தொழிலை அவனால் வெற்றியாகச் செய்ய இயலும். அதுபோல மன்னனே! நீ பரிசு தர மறுத்தாலும் காலம் நீட்டினாலும் அறிவும் புகழும் உடைய புலவர்களாகிய நாங்கள் எத்திசை சென்றாலும் அத்திசையில் எமக்கு உணவு கிடைக்கும் என்று தன் உணர்வுப் பொங்க படைத்துள்ளார் ஔவையார். இதேபோன்று

*'காணாது ஈந்த இப்பொருட்கு யான் ஓர்*

*வாணிகப் பரிசிலேன் அல்லேன்'*[41]

என்றுப் பெருஞ்சித்திரனார் என்ற புலவர் தன்மானத்துடன் மன்னன் புலவர்களைக் காணாதது குறித்து வழங்கும் பண்புத் தன்மையைக் குற்றமாகக் சுட்டிப்பாடுகின்றார். மூவன் என்னும் அரசன் பரிசு தரமால் நின்றபோது 'நின் நசை தரவந்து நின் இசை நுவல் பரிசிலென் வறுவியேன் பெயர்கோ? வாள் மேம்படுந! ஈயாய் ஆயினும் இரங்குவென் அல்லன், நோய்இலை ஆகுமதி (புறநானூறு பாடல் எண்.209) என்று பாடுகின்றார்.

அரசனே நீ பரிசு தராவிட்டாலும் பரவாயில்லை நீ நோயில்லாமல் வாழ்க என்று வாழ்த்தும் நெஞ்சம் தமிழ் நெஞ்சமாகும். பெருங்குன்றூர்க்கிழார் என்ற புலவரும் சேரமன்னன் பரிசு கொடுக்காது காலம்கடத்தியபோது

*'நாணாய் ஆயினும் நாணக் கூறி என்*

*நுணங்கு செந்நா அணங்க ஏத்தி*

*பாடப் பாடப் பாடு புகழ் கொண்ட நின் ஆடுகொள்*

*வியன் மார்பு தொழுதனென் பழிச்சிச் செல்வல்'*[42]

என்று அவனைப் புகழ்ந்தே பாடுகின்றார்.

மேற்காட்டிய பாடல்களும் ஒரே வரிசையில் புறுநானூற்றில் தொகுக்கப் பெற்றுள்ளன. இத்தொகுப்புமுறையின் அடிப்படையில் தமிழ்ப்புலவர்கள் தன்மானம் மிக்கவர்கள் என்பதும் தன் மனதில் ஏற்பட்ட வருத்த உணர்வினையும் தகுந்த முறையில் மன்னர்களாயினும் பொதுக் கருத்தாக வெளிப்படுத்தியுள்ளமை அதனை இக்காலத்தில் மீட்டெடுப்பது என்பது பகுத்தறிவு வாதத்தினால் வந்த எழுச்சியாகவும் ஆய்ந்தறியமுடிகிறது.

**இனப்பெருமை காத்தல்**

எந்த ஒரு இனம் தன் பண்பின்வழி செயலின்வழி அடையாளப்படுத்தி நிறுத்தும் குடும்பமாக இருந்தாலும் தமக்கான பெருமையினைக் காத்தல் என்பது சிறப்பானதாகும். தங்களது இனம் அல்லது குடும்பத்திற்குள் கருத்து வேற்றுமை வந்தாலோ, சண்டையிட்டாலோ அதில் வரும் துன்பம் தமக்கானதாகும் என்பதனை உணர்த்துவதற்காகப் புலவர்கள் பல பாடல்களைப் பாடினர். சகோதரர்களான நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் போரிட்டனர். இதனை அறிந்த புலவர் கோவூர்கிழார் நேரடியாகச் சென்று இருவரும் ஒரே குடியில் பிறந்தவர்கள் ஏன் சண்டையிடுகிறீர்கள் உங்களில் யார் தோற்றாலும் அது உங்களுக்கே இழிவான செயலாகும் என அறிவுறுத்தியுள்ளார். இதனை,

> ***“பொருவோன் கண்ணியும் ஆர் மிடைந்தன்றே, நின்னொடு***
> ***ஒருவீர் தோற்பினும் தோற்ப நும் குடியே,***
> ***இருவீர் வேறல் இயற்கையும் அன்றே, அதனால்”***[43]

இப்பாடல் சகோதரர் இருவரும் அதிகாரத்திற்காகப் போர்புரிவதனை (சண்டை இடுவதனை) எடுத்துக் காட்டுகின்றது. இவர்கள் இருவரும் அறியாமையால் இச்செயலை செய்ய நினைத்த பொழுது புலவர் அதனைத் தடுத்து நிறுத்தி அவர்களைச் சிந்திக்கும்படிச் செய்கிறார். புலவர் என்பவர் கல்வி கற்ற அறிஞன் மட்டும் கிடையாது

அரசர்களுக்கு அவர்கள் தான் சிறந்த அறிவுரை கூறுபவராகவும் இருந்துள்ளனர். சகோதரச் சண்டை என்பது தங்களது இனம், உறவினர் அல்லது குடும்பத்திற்கு வருகின்ற இழிவான ஒன்றாகும் என்பதனை இப்பாடல் உணர்த்துகிறது.

**வேதமரபை மறுக்கும் போக்கு**

வேதமரபு என்பது அறிவிற்கு இடம் கொடாது புராணக் கற்பனைக் கட்டுக்கதைகளுக்கு இடம் கொடுத்துள்ளது. பகுத்தறிவுவாதி என்பவன் எதனையும் அறிவின் வயப்பட்டுச் சிந்திப்பவன் ஆவான். 'பகுத்தறிவுக்கு மதிப்புக் கொடுப்பவர்கள் கேள்வி மாத்திரத்தினாலேயே ஒன்றை நம்பிவிடக் கூடாது. எழுதி வைத்திருப்பதாலேயே ஒன்றை நம்பிவிடக் கூடாது. வெகுகாலமாக நடந்து வருவதாகத் தெரிவதனாலேயே ஒன்றை நம்பிவிடக் கூடாது; அனேகர் பின்பற்றுவதாலேயே நம்பிவிடக் கூடாது; கடவுளாலோ மகாத்மாவாலோ சொல்லப்பட்டது என்பதாலேயே நம்பிவிடக் கூடாது; ஏதாவது ஒரு செயல் நம்முடைய புத்திக்கு ஆச்சரியமாய்த் தோன்றுவதாலேயே அதை தெய்வீகம் என்றோ மந்திரச் சக்தி என்றோ நம்பிவிடக் கூடாது.

எப்படிப்பட்ட செயலானாலும் நடு நிலைமையில் இருந்து பகுத்தறிவுக்குத் தாராளமாய் விட்டு ஆலோசிக்கத் தயாராயிருக்க வேண்டும்.' என்று பகுத்தறிவு, பகுத்தறிவாளன் பற்றிய கருத்துகளைப் பெரியார் எடுத்துரைக்கின்றார். வேதமரபுகளை மறுக்கும் சங்கப்பாடல்கள் உள்ளன. பின்வரும் பாடல் அதற்கு ஒரு சான்று

***'நன்று ஆய்ந்த நீள் நிமிர் சடை***
***முது முதல்வன் வாய் போகாது,***
***ஒன்று புரிந்த ஈர் இரண்டின்,***

*ஆறு உணர்ந்த ஒரு முது நூல்*
*இகல் கண்டோர் மிகல் சாய்மார்,*
*மெய் அன்ன பொய் உணர்ந்து,*
*பொய் ஓராது மெய் கொளீஇ,*
*மூ ஏழ் துறையும் முட்டு இன்று போகிய*
*உரைசால் சிறப்பின் உரவோர் மருக!"*[44]

இப்பாடலைப் பொருள் உணர்ந்து கொள்வதில் குழப்பம் ஏற்படுவதுண்டு. இப்பாடல் வேத மரபை ஏற்றி உரைப்பதுபோன்று தோன்றிலும் அதன் பொய்த்தன்மையை வெளிப்படுத்தி நிற்கும் பாடலாகும்.

சிவபெருமானின் வாய்விட்டு நீங்காத ஆறு அங்கங்களை உடைய வேதங்களின் பொய்யை உணர்ந்து மெய் சொன்னவன கௌணியன் விண்ணந்தாயன் என்னும் மனிதன் ஆவான். இவன் வேதநெறியின் பொய்ம்மையை எடுத்துரைத்து மெய்யான தமிழ்நெறியை ஏற்றவன் என்று இப்பாடல் பொருள் தருகிறது. வேத மரபிற்கு எதிர் நிலையில் அமைந்த பாடல் இது என்பது கருதத்தக்கது. பரிபாடலில் உள்ள செவ்வேள் பற்றிய பாடல் ஒன்றில் வேத மரபு மறுக்கப் பெற்றுள்ளது.

*'நான்மறை விரித்து, நல் இசை விளக்கும்*
*வாய்மொழிப் புலவீர்! கேண்மின், சிறந்தது;*
*காதற் காமம், காமத்துச் சிறந்தது;*
*விருப்போர் ஒத்து மெய்யுறு புணர்ச்சி:*
*புலத்தலின் சிறந்தது, கற்பே அது தான்*
*இரத்தலும் ஈதலும் இவை உள்ளீடாப்*
*பரத்தை உள்ளதுவே: பண்புறு கழறல்,*
*தோள் புதிது உண்ட பரத்தை இல் சிவப்புற*
*நாள் அணிந்து, உவக்கும் சுணங்கறையதுவே;*

*கேள் அணங்குற மனைக் கிளந்துள, சுணங்கறை;*

*சுணங்கறைப் பயனும் ஊடலுள் ளதுவே.*

*அதனால், அகறல் அறியா அணி இழை நல்லார்*

*இகல் தலைக்கொண்டு துனிக்கும் தவறு இலர்; இத்*

*தள்ளாப் பொருள் இயல்பின் தண் தமிழ் ஆய்வந்திலார்"*[45]

என்று தமிழின் சிறப்பை இப்பாடல் எடுத்துரைக்கிறது.

நான்குமறை வல்லவர்களே! களவு, கற்பு போன்ற அகம் சார்ந்த இலக்கண, இலக்கிய, வாழ்வியல் கூறுகளைப் பெற்றது தமிழ் என்று அதன் பெருமையை எடுத்துரைக்கின்றார் குன்றம்பூதனார் என்ற புலவர்.

வேதநெறி சார்ந்து இயங்குபவர்களை விமர்சிக்கும் சில பாடல்களும் சங்க இலக்கியங்களில்உண்டு. அதனை,

*'அன்னாய் வாழி வேண்டன்னை நம்மூர்ப்*

*பார்ப்பனக் குறுமகன் போலத் தாமுங்*

*குடுமித் தலைய மன்ற*

*நெடுமலைநாடன் ஊர்ந்த மாவே"*[46]

என்ற பாடல் அந்தணச்சிறுவனின் குடுமியைப்போல குதிரையின் முடியும் இருந்தது என்று குறிப்பிட்டிருப்பது அந்தணக் குடும்பத்தில் குடுமி வைத்த தோற்றம் பற்றி விளக்குகிறது. சங்கச் சமுதாயத்தில் அந்தணர் நிலை, அவர்கள் பெற்றிருந்த இடத்தை உணர்த்தும்.

சங்க காலத்தில வேத மரபு கலந்திருந்தாலும் பல்யாகங்களைச் செய்யச் சொல்லிப் புலவர்களே அரசர்களை வற்புறுத்தி இருந்தாலும் இவற்றுக்கு ஈடாக தமிழர் கொள்கையும் நடைபெற்றுவந்துள்ளது.

*"உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்*

*அமிழ்தம் இயைவதாயினும் இனிது*

*எனத் தமியர் உண்டலும் இலரே*

*முனிவு இலர் துஞ்சலும் இலர்*
*பிறர் அஞ்சுவது அஞ்சிப்*
*புகழ் எனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்*
*உலகொடு பெறினும் கொள்ளலர் அயர்வு இலர்*
*அன்ன மாட்சி அனையராகித்*
*தமக்கென முயலா நோன்தாள்*
*பிறர்க்கென முயலுநர் உண்மையானே'*[47]

என்ற இப்பாடலில் இந்திரர் என்ற ஆரியர் கருதும் புராணச் செய்தி இடம் பெற்றிருந்தாலும் தனியாக உண்ணாத தமிழ் மரபு எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. இந்த உலகம் தனக்கென வாழாத தகைமையாளர்களால் இன்னும் இருப்பதாக உள்ளது என்ற கொள்கைத் தமிழரின் கொள்கை எனக் கொள்வது இங்குப் பொருந்துவதாகும்.

இப்பாடல் பொதுவியல் திணை சார்ந்த பாடலாகும். பொதுவியல் திணைச் சார்ந்த பாடல்கள் பகுத்தறிவு வாதத்திற்கு உரமூட்டுகின்ற பாடல்கள் ஆகும். இவற்றில் வேதக்கலப்பு இல்லை. எனவே இவற்றை ஆய்வுலகம் தனியாக ஆய்வதன் வழியாக தனித்த தமிழர் இயல்பை அறிந்து கொள்ள இயலும்.

**பெண்ணைப் போற்றிய சங்க இலக்கியங்கள்**

தமிழ் இலக்கியத்தின் தொன்மையான நூல்களில் ஒன்றான தொல்காப்பியம் ஆண்களின் நிலை குறித்து,

**“பெருமையும் உரனும் ஆடூஉ மேன”**[48]

என்று பெருமையும், வலிமையும் ஆணுக்குரிய பண்புகளாகவும்,

**“அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற் குரிய”**[49]

இவை பெண்ணுக்குரிய பண்புகளாகவும் சொல்லப்பட்டுள்ளன. அதாவது அச்சம், மடம், நாணம் இவையெல்லாம் பெண்ணுக்குரிய

குணங்களாக தொல்காப்பியம் கூறுகின்றது. மேலும் “கற்பு” என்பது பெண்ணிற்கு கட்டாயமாக்கப்படுகிறது.

பெண்களின் உரிமை சங்ககாலத்தில் தடை செய்யப் படவில்லை. பெண்கள் கல்வி கற்று, நன்கு புலமை பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். மேலும் சங்க இலக்கியமானது பெண்களின் நிலையினை பலவாறாக கூறுகின்ளது. அஃதாவது,

*“பெண் பிறவி இழிவுக்குரியது”*
*என்று யாரும் கருதவில்லை“*[50]

*“மணக்கொடை கொடுமை இல்லை”*[51]

*“நல்லிற்பாவையன்ன நல் லோற் கணவன்”*[52]

*“மறுவில் கற்பின் வாணுதல் கணவன்”*[53]

என்றவாறு பெண்ணுக்குப் பெருமை தேடித்தரும் வகையில் சான்றோர்கள் குறிப்பிட்டுள்ளனர். சங்ககாலத்திலும் பெண்ணிற்கு கற்பு வலியுறுத்தப்பட்டுள்ளது. ஆணை தலைமையாகக் கொண்ட குடும்பம் வரவேற்கப்பட்டது என்பதும் சங்கப் பாடல்கள் வழி அறியப்படுகின்றன.

**முடிவுரை**

ஒவ்வொரு மனிதனும் இப்படிதான் வாழவேண்டும் என்று தன்னுள் நெறிமுறைகளை வகுத்துக்கொண்டு வாழ்வது வாழ்வியல் நெறிமுறைகள் என்று அறியப்படுகிறது. அத்தகைய வாழ்வியல் நெறிமுறைகளின் சிறப்பியல்புகளை சங்க இலக்கியங்கள் சுட்டிக் கொண்டிருந்தன என்பதை ஆய்ந்து உணர்த்துகின்றது.

அவ்வகையில், கல்வியைப் போற்றுதல், ஈகை, இல்லற மாண்பு, பொருள்வழிப் பிரிவைப் போற்றுதல் வினையே ஆடவருக்கு அணிகலன், ஆண்பெண் அன்பு, ஒழுக்கத்தின் மீதான நம்பிக்கை,

தனிமனிதப் பண்பாடு, விருந்தோம்பல், தமிழரின் காதல் பண்பாடு, போர்ப் புரிதல் நாகரிகமும் பண்பாடு, மகளிர் அரசியல் பயன்பாடு, அறிவுரைக்கும் மாண்பு, தன்மானச் சிந்தனைகள், உலக இயல்பான தத்துவங்கள் எடுத்துரைத்தல், பொதுமைச் சிந்தனைகள், நல்லாட்சி, இனப்பெருமை காத்தல், வேதமரபை மறுத்தல் பெண்ணைப் போற்றும் நெறி சங்கப் பாடல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் இருந்து தமிழர் வாழ்வியல் முறைகள் பாடப்பட்டுள்ளமையை ஆய்ந்துணரப்படுகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள், களவியல், நூ.1.
2. குறள்.133.
3. புறம்.188:1-5.
4. நான்மணி.63.
5. குறுந்-33:1-2
6. புறம்.189.5.
7. கலி:133:1
8. புறம்.134:1-4
9. புறம்.110:4-6
10. கண்ணதாசன் பாடல், தர்மம் கலைகாக்கும்.
11. குறுந் -167:1-6
12. குறுந் 283:1-4.
13. குறுந் – 135:1-4
14. குறு – 57:1-6
15. குறிஞ்சிப்பாட்டு 13-18.
16. புறம்.195: 6-7.
17. குறிஞ்சி.205-206.
18. குறள். 85.
19. கலி, 133-6.
20. குறள். 221
21. குறுந்.3.
22. குறுந்.18;1-5.

23. புறம்.9:1-5.

24. தொல்.புறத்திணை.75:1-2.

25. புறம்.95:1-9

26. புறம்.186:1-6

27. புறம்.184 : 10-11.

28. புறம்.18 : 28-30.

29. புறம். 187 : 3- 4.

30. புறம். 194 : 6-7.

31. புறம்.195 : 6-7.

32. புறம்.189 : 7-8.

33. நற்.347:5-6.

34. புறம்.360:17-19.

35. குறுந். 330:1.

36. கலி.117:6-8.

37. புறம். 192:1-3

38. புறம். 189:1-6

39. புறம். 74:1-7

40. புறம். 206:8-13

41. புறம்.208:6-7

42. புறம்.211:13-15

43. புறம். 45:4-6

44. புறம் 166:1-9

45. பரி.9 .12-26.

46. ஐங். 202:1-4
47. புறம். 182:1-9
48. தொல்-களவு-நூற்7.
49. தொல்-களவு-நூற்8.
50. ஐங்.257.
51. அகம்:280.
52. பதி.61:3-4
53. திருமுரு. 6.

## துணைநூற்பட்டியல்


| | |
|---|---|
| அறவாணன் க.ப., | தமிழ்மக்கள் வரலாறு,<br>தமிழ்க் கோட்டம்,<br>சென்னை.<br>2005 |
| அனந்தராமன் இ.வை.(பதி.), | கலித்தொகை மூலமும்<br>நச்சினார்க்கினியர் உரையும்,<br>பதிப்புத் துறை,<br>தமிழ்ப் பல்கலைக் கழகம்,<br>தஞ்சாவூர்.<br>1984 |
| இராகவையங்கார் ரா.(உரை.), | குறுந்தொகை விளக்கம்,<br>அண்ணாமலைப் பல்கலைக்<br>கழகம்,<br>அண்ணாமலைநகர்.<br>1993. |

| | |
|---|---|
| இளவழகன் கோ. (பதி.), | தொல்காப்பியம் சொல்லதிகாரம் இளம்பூரணம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை. 2003 |
| கந்தையா ந.சி. (உரை), | அகநானூறு, தமிழ்மண் அறக்கட்டளை, சென்னை. 2008 |
| குமாரசாமி பிள்ளை, | இலக்கியச் சொல்லகராதி, பயோனியர் புத்தக நிலையம், சென்னை, 1985. |
| கோபால கிருஷ்ணக்கோன் (ப.ஆ), | தமிழ்ப்பேரகராதி (பிற விவரம் இல்லை). |
| சக்திதாசன் சுப்பிரமணியன் (உரை.), | குறுந்தொகை, தமிழ்மண் அறக்கட்டளை, சென்னை, 2008. |

| | |
|---|---|
| சக்திதாசன் சுப்பிரமணியன், | கலித்தொகை,<br>தமிழ்மண் அறக்கட்டளை,<br>சென்னை,<br>2008. |
| சஞ்சீவி ந., | சங்க இலக்கிய ஆராய்ச்சி<br>அட்டவணைகள்,<br>தமிழ்மண் அறக்கட்டளை,<br>சென்னை,<br>2008. |
| சண்முகப்பிள்ளை மு. (பதிப்.), | தொல்காப்பியம் பொருளதிகாரம்,<br>முல்லை நிலையம்,<br>சென்னை,<br>2006. |
| சந்தியா நடராஜன் (பதிப்.), | மதுரைத் தமிழ்ப் பேரகராதி,<br>சந்தியா பதிப்பகம்,<br>சென்னை.<br>2004 |

| | |
|---|---|
| சாமிநாதையர் உ.வே. (உரை.), | ஐங்குறுநூறு,<br>கபீர் அச்சுக்கூடம்,<br>சென்னை,<br>1944. |
| சாமிநாதையர் உ.வே. (உரை.), | குறுந்தொகை,<br>கபீர் அச்சுக்கூடம்,<br>சென்னை,<br>1974. |
| சாரங்கபாணி இரா. (பதிப்.), | சங்க இலக்கியப் பொருட்<br>களஞ்சியம், தமிழ்ப்<br>பல்கலைக்கழகம்,<br>தஞ்சாவூர்,<br>2003. |
| சுப்பிரமணியன் ச.வே. (பதிப்.), | செவ்வியல் இலக்கியங்கள்,<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>சென்னை,<br>2006. |

| | |
|---|---|
| சுப்பிரமணியன் ச.வே. (பதிப்.), | மெய்யப்பன் தமிழ் அகராதி,<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>சென்னை.<br>2006 |
| சோமசுந்தரனார்<br>பொ.வே.(உரை), | குறுந்தொகை,<br>கழக வெளியீடு,<br>சென்னை,<br>2007. |
| துரைசாமிப்பிள்ளை ஔவை சு.<br>(உரை), | பதிற்றுப்பத்து, தமிழ்மண்<br>அறக்கட்டளை,<br>சென்னை.<br>2008 |
| துரைசாமிப்பிள்ளை ஔவை சு.<br>(உரை), | புறநானூறு,<br>தமிழ்மண் அறக்கட்டளை,<br>சென்னை.<br>2008 |

| | |
|---|---|
| துரைசாமிப்பிள்ளை ஔவை சு.<br>(உரை), | நற்றிணை (1, 4),<br>தமிழ்மண் அறக்கட்டளை,<br>சென்னை.<br>2008 |
| நச்சினார்க்கினியர் (உரை), | கலித்தொகை,<br>திருநெல்வேலி,<br>தென்னிந்திய சைவசித்தாந்த<br>நூற்பதிப்புக் கழகம்,<br>சென்னை.<br>1999 |
| நாராயணசாமி ஐயர் பின்னத்தூர்<br>அ. (உரை.), | நற்றிணை மூலமும் உரையும்,<br>சைவசித்தாந்த நூற்பதிப்புக்<br>கழகம்,<br>சென்னை.<br>1952 |

| | |
|---|---|
| பரிமணம் அ.மா., பாலசுப்பிரமணியன் கு.வெ.(பதி.), | புறநானூறு (மூலமும் உரையும்), புதுயுக நூல் வெளியீட்டகம் (NCBH), சென்னை. 2011 |
| மணவாளன் அ. அ., | இலக்கிய ஒப்பாய்வு: சங்க இலக்கியம், நியூசெஞ்சுரி புத்தகாலயம், சென்னை. 2011 |
| மறைமலையடிகள், | தமிழர் மதம், பூம்புகார் பதிப்பகம், சென்னை. 2008 |
| மாணிக்கம் வ. சுப., | தமிழ்க் காதல், சாரதா பதிப்பகம், சென்னை. 2007 |

| | |
|---|---|
| மாதையன் பெ., | சங்க இலக்கியச் சொல்லடைவு,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்,<br>தஞ்சாவூர்.<br>2007 |
| முனீஸ்மூர்த்தி மு., | கலித்தொகை பதிப்பு வரலாறு<br>(1887-2010),<br>காவ்யா பதிப்பகம்,<br>சென்னை.<br>2010 |
| வரதராசன் மு., | குறுந்தொகைச் செல்வம்,<br>பாரி நிலையம்,<br>சென்னை.<br>1994 |
| விசுவநாதன் அ.(உரை), | கலித்தொகை (மூலமும்<br>உரையும்),<br>புதுயுக நூல் வெளியீட்டகம்<br>(NCBH),<br>சென்னை.<br>2011 |

| | |
|---|---|
| வேங்கடசாமி நாட்டார் ந.மு.<br><br>(உரை), | அகநானூறு,<br><br>சைவசித்தாந்த நூற்பதிப்புக்<br><br>கழகம்,<br><br>சென்னை.<br><br>சன.1946 |

## ஐந்திணை முதற்பொருள்

| **திணை** | **நிலம்** | **சிறுபொழுது (கால அளவு) (மணி நேரம்)** | **பெரும் பொழுது** |
|---|---|---|---|
| குறிஞ்சி | மலையும் மலைசார்ந்த இடமும் | யாமம் (22-02) | கூதிர், முன்பனி |
| முல்லை | காடும் காடுசார்ந்த இடமும் | மாலை (18-22) | கார் |
| மருதம் | வயலும் வயல்சார்ந்த இடமும் | வைகறை (02-06) | கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் |
| நெய்தல் | கடலும் கடல்சார்ந்த இடமும் | எற்பாடு (14-18) | கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் |
| பாலை | சுரமும் சுரம்சார்ந்த இடமும் | நண்பகல் (10-14) | வேனில், பின்பனி |

| **நிலம்** | **தொழில்கள்** |
|---|---|
| குறிஞ்சி | தினைக்காத்தல், விவசாயம், தேன்னெடுத்தல், வெறியாடல், குறிச்சொல்லல், வேட்டையாடுதல் |
| முல்லை | வரகு, சாமை விதைத்ததல், பால், தயிர், மோர், நெய் எடுத்து விற்றல், கிணறுதோண்டுதல், மாலை கட்டுதல் |
| மருதம் | விவசாயம், மீன்பிடித்தல், வேட்டையாடுதல் |
| நெய்தல் | மீன்பிடித்தல், உப்புக்காய்ச்சுதல், சங்கறுத்தல், முத்துக்குளித்தல், கள்விற்றல் |
| பாலை | சூரையாடுதல், வேட்டையாடுதல், புற்றரிசி எடுத்தல், பூ விற்றல், சுங்கக்கட்டணம் வசூலித்தர், கள்வர் வரிபெறல் |

| வாழ்வியல் நெறிகள் | |
|---|---|
| அக வாழ்வியல் கூறுகள் | ஈகை, இல்லற மாண்பு, பொருள்வழிப் பிரிவைப் போற்றுதல் வினையே ஆடவருக்கு அணிகலன், ஆண்பெண் அன்பு, ஒழுக்கத்தின் மீதான நம்பிக்கை, தனிமனி பண்பாடு, விருந்தோம்பல், தமிழரின் காதல் பண்பாடு போன்றவை |
| புறவாழ்வியல் கூறுகள் | கல்வியைப் போற்றுதல், போர் புரிதல் நாகரிகமும் பண்பாடும், மகளிர் அரசியல் பயன்பாடு, அறிவுரைக்கும் மாண்பு, தன்மானச் சிந்தனைகள், உலக இயல்பான தத்துவங்கள் எடுத்துரைத்தல் பொதுமைச் சிந்தனைகள், நல்லாட்சி, இனப்பெருமை காத்தல், வேதமரபை மறுத்தல் போன்றவை. |

**ஐவகை நிலங்கள்**

குறிஞ்சி நிலம்



முல்லை நிலம்



## மருத நிலம்



## நெய்தல் நிலம்



## பாலை நிலம்



# சங்க இலக்கியங்களில் நிலம் – பன்முக ஆய்வு

முனைவர் பட்டத்திற்காகச்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப்படும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**சு.தேன்மொழி எம்.ஏ., எம்.எட்., எம்ஃபில்.,**

**முனைவர் பட்ட ஆய்வாளர் (முழு நேரம்)**

**Ref.No.Ph.D./Regn./36/FT/08/2015/1885**

**நெறியாளர்**

**முனைவர் திருமதி.ப.கு. ஹேமரஜனி எம்.ஏ.,பி.எச்.டி.,**

உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை

இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி)

சென்னை – 600 004.





**தமிழ்த்துறை**

**இராணிமேரி கல்லூரி (தன்னாட்சி)**

**சென்னை – 600 004.**


**ஆகஸ்ட் - 2022**

## முடிவுரை

**சங்க இலக்கியங்களில் நிலம் - பன்முக ஆய்வு** என்ற இவ்ஆய்வில் நிலம் சார்ந்த பதிவுகளாக நிலம் என்பதன் பொருள், ஐவகை நிலங்கள், நிலங்கள் சார்ந்த தமிழர் வாழ்வியலில் உள்ள பொழுதுகளும் அவற்றின்வழி அறியப்படுகின்ற வாழ்வுமுறையும் இவ்வியல் வழி அறிய முடிகின்றது. மேலும் நிலத்தின் தனித்தனி உணவு முறை, உடை வகைகள், உறையுள் அமைப்பு, நிலம் சார்ந்த வழிபாடுகள் மற்றும், நிலம்சார்ந்த விளையாட்டுகள் என்று பன்முக நோக்கில் நிலம் சார்ந்த பதிவுகளை அறியமுடிகின்றது. மேலும் இலக்கியங்கள் என்பது பண்டைத் தமிழரின் அரசியல், சமூகம், வீரம், கொடை, புகழ், நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைத் தெளிவாகக் காட்டும் காலக்கண்ணாடியாகும். அவற்றுள் சங்க காலம் என்பதும் சங்க கால இலக்கியம் எவை என்பதும் அவற்றின் சிறப்புகளாக பலவற்றை அறிந்தோம்.

அன்பொழுக்கம் சார்ந்தமையும் எழுதிணை அமைப்புமுறை, ஐந்திணை சார்ந்த அகத்திணைச் சிறப்பு, ஒத்த அன்புடன் ஒருமித்து வாழும் முறை ஆய்ந்துணர்த்தப்படுகின்றன.

உள்ள இசைவுடனான இயற்கைப் புணர்ச்சி துணைநிற்கும், வாயில்களாக பாங்கன், பாங்கியர் வரைவு மேற்கொள்ளச் செய்தல், வரைவிடைப் பிரிதல், நீடல், மீண்டுவருதல், தலைவன் தலைவி உளநிலை இவை சிறப்புடன் உணர்த்தப்படுவதை ஆய்ந்துணர்த்தப்படுகின்றன.

உடன்போக்கு இருந்தமையும், இல்லற மாண்புப் போற்றும் பெண்ணின் சிறப்பு, விருந்தோம்பல் சிறப்புறக் கூறப்படுகின்றன.

முன்னோர் தொகுத்த செல்வத்தின் மீது பற்றுக் கொள்ளாமை அளவற்ற தலைவன், தலைவி அன்பு, தாய்மைச் சிறப்பு, பெண்ணின் உழைப்பு சிறப்பு, மேன்மைகள் சிறந்த அகவாழ்வியல் கூறுகளாக விளங்கியமையை எடுத்துரைக்கப்படுகின்றன.

போர் முறைகள் பற்றியும் அக்காலத்தில் போர் என்ற சொல் எவ்வாறு பயின்று வந்தமையும், போருக்கான காரணங்களும் படைகளின், வகைகள் பற்றியும், தொல்காப்பியம் கூறிய மூவகைப் படையினைப்பற்றியும், வீரர்களின், பங்களிப்பையும், மன்னர்களின் வீரத்தினையும், வீரர்களின் செயல்பாட்டினையும் அறியமுடிகிறது.

கொடை, போர், வெற்றி, வெற்றிச் செயல்கள், வரலாற்றுப் போர்கள், போர்ச்சூழல்கள் போன்றனவும் வீரர்களின் செயல்பாட்டினையும், மக்கள் இவ்விரு கால கட்டங்களின் எத்தகைய நிலையில் இருந்தனர் என்றும் அறியமுடிந்தது.

போர் அறம், வரலாற்றுப் போர்கள் நிகழ்ந்த இடங்களும், அப்போரில் வென்ற சுவடுகளும், மன்னர்களின் போர்த்திறன்களும் போர் நடைபெறுகின்ற போதும் போர் முடிவிலும் செய்யப்படுகின்ற வெற்றிச் செய்கைகளும் வரலாற்றுச் சிறப்புகள் என்ற இவ்வியலில் அறியமுடிந்தது. போரில் விழுப்புண் பெறுவதனை வீரமாகக் கருதி மார்பின் வழித்துளைத்து புறப்புண் அடைந்தாலும் அதனை இழுக்கெனக் கருதி உயிர்விட்ட சிறப்பையும் அறியமுடிகிறது. புலவர்கள் மன்னர்களைப் பாடிப் பரிசில் பெறுவதை மட்டும் தம் தொழிலாகக் கொள்ளாமல் மன்னன் நெறி தவறும் போது, அவனை நல்வழிபடுத்தி மக்களைக் காத்த தன்மையையும் உணரமுடிகிறது.

நிலம் தொடர்பான இவ்ஆய்வில் ஐந்திணை மக்களிடத்தில் சங்க இலக்கியக் குறிப்புகளால் அறியப்பபடுகின்ற நிலம்சார்ந்த தொழில்கள் பற்றி பேசப்படுகின்றன. அவற்றுள் குறிஞ்சி நிலத்தின்

தொழிலாக தினைக்காத்தல், விவசாயம், தேனெடுத்தல், வெறியாடல், குறிச்சொல்லல், வேட்டையாடுதல் என்று அறியப்பட்டுள்ளது.

முல்லை நிலத்தின் தொழிலாக வரகுசாமை விதைத்ததல், பால், தயிர், மோர், நெய் எடுத்து விற்றல், கிணறுதோண்டுதல், மாலை கட்டுதல் போன்றவையும், மருத நிலத்தின் தொழிலாக விவசாயம், மீன்பிடித்தல், வேட்டையாடுதல் போன்றனவும், நெய்தல் நிலத்தின் தொழிலாக மீன்பிடித்தல், உப்புக்காய்ச்சுதல், சங்கறுத்தல், முத்துக்குளித்தல், கள்விற்றல் போன்றவையும், பாலை நிலத்தவர் தொழிலாக சூரையாடுதல், வேட்டையாடுதல், புற்றரிசி எடுத்தல், பூ விற்றல், சுங்கக்கட்டணம் வசூலித்தல் கள்வர் வரிபெறல் போன்ற தொழில்கள் பாலை நிலத்தில் நடைபெற்றுள்ளதை அறியமுடிகிறது.

ஒவ்வொரு மனிதனும் இப்படிதான் வாழவேண்டும் என்று தன்னுள் நெறிமுறைகளை வகுத்துக்கொண்டு வாழ்வது வாழ்வியல் நெறிமுறைகள் என்று கூறலாம். அத்தகைய வாழ்வியல் நெறிமுறைகளின் சிறப்பியல்புகள் விளக்கி எழுதப்பட்டுள்ளது. அவ்வகையில், கல்வியைப் போற்றுதல், ஈகை, இல்லற மாண்பு, பொருள்வழிப் பிரிவைப் போற்றுதல் வினையே ஆடவருக்கு அணிகலன், ஆண்பெண் அன்பு, ஒழுக்கத்தின் மீதான நம்பிக்கை, தனிமனித பண்பாடு, விருந்தோம்பல், தமிழரின் காதல் பண்பாடு, போர் புரிதல் நாகரிகமும் பண்பாடும், மகளிர் அரசியல் பயன்பாடு, அறிவுரைக்கும் மாண்பு, தன்மானச் சிந்தனைகள், உலக இயல்பான தத்துவங்கள் எடுத்துரைத்தல் பொதுமைச் சிந்தனைகள், நல்லாட்சி, இனப்பெருமை காத்தல், வேதமரபை மறுத்தல் போன்றன கூறப்பட்டுள்ளன.

## மேல்ஆய்வுக் களங்கள்

- சங்க இலக்கியத்தில் நிலம்சார் இயற்கை வர்ணனை
- சங்க இலக்கியத்தில் நிலம்சார் உளவியல் பார்வை
- சங்க இலக்கியத்தில் புலவர்களின் நிலம்சார் பாடுபொருள்
- எட்டுத்தொகை நூல்களில் நிலமும் உயிரின நல்வாழ்வும்
- பத்துப்பாட்டு நூல்கள் உணர்த்தும் நிலம்சார் வாழ்வியல்